உ

சிவ மயம்.

ஓம் மகா கணபதயே நம:

திருக் களர், ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள்
அவர்கள் மாணுக்கர்
சென்னை சூளை, ஆநந்தாசிரமம்
ஸ்ரீலஸ்ரீ நியாய சந்திர, வேதாந்த பாஸ்கர
சுப்பய்ய ஞாந தேசிக சுவாமிக ளவர்கள்

இயற்றிய

# சுப்பய்ய ஸ்வாமிகள் நூற் கொத்து.

இது,

திருப் பூ வணம்,

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகளால்
பரிசோதிக்கப் பெற்று,

திரு வாரூர், தக்ஷிணுமூர்த்தி சுவாமிகள் மடாதிபதி,
ஸ்ரீ வீர. சு. ஷண்முகாநந்த ஸ்வாமிகளால்

மதுரை. V. சுப்புராயலு நாயுடு பிரஸில்
அச்சிடப் பெற்றது.

1964 [விலை ரு. 1-50

## திருப் பூ வணம், வேதாந்த மடம்,
## ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமிகள் இயற்றிய நூல்கள்.
## பதிப்பித்தன.

---

| | | ரூ. ந.பை |
|---|---|---|
| | ஹிந்தி மொழி பெயர்ப்பு. | |
| 1 | வேதாந்த பதார்த் மஞ்ஜூஷா வசநம், | 2—50 |
| 2 | விசார சாகரம், வசநம், ஹிந்தி மொழி பெயர்ப்பு. | 2—25 |
| | [சமஸ்கிருத மொழி பெயர்ப்பு] | |
| 3 | வியாச தாத்பரிய நிர்ணயம், வசநம். | 0—50 |
| 4 | நைஷ்க்கர்ம்ய சித்தி, வசநம். | 0—50 |
| 5 | வேதாந்த சித்தாந்த முக்தாவளி, வசநம். | 0—50 |
| 6 | ஸ்வாராஜ்ய சித்தி வசநம். | 0—50 |
| 7 | பகவற் கீதை 15வது அத்தியாயம், பத உரை, | |
| 8 | மூர்க்க சதகம், பத உரை. [தமிழ்க் கவி உரை. | 0—50 |
| 9 | கதா சரித் சாகரம், வசநம் கதை. | 2—25 |
| 10 | மண்டல பிராஹ்மண உபநிஷத் [ராஜயோக பாஷ்யம். | 0—25 |
| 11 | ஈசாவாஸ்ய உபநிஷத் - சங்கர பாஷ்யம் வசநம் | 0—25 |
| 12 | வேதாந்த பரிபாஷை வசநம். | 0—44 |
| 13 | வேதாந்த சஞ்ஞா வசநம். | 0—13 |
| 14 | ஹரிமீடே, ஹரி தத்வ முக்தாவளி, பத உரை. | 0—75 |
| | உரை நூல். | |
| 1 | நாநா ஜீவ வாதக் கட்டளை, [சத்யார்த்தப் பிரகாசிகை, உரை | 2—00 |
| 2 | கீதா சாரத் தாலாட்டு, லகு சந்திரிகை உரை. | 2—00 |
| 3 | மேற்படி, நக்ஷத்திர விளக்க உரை. | 0—25 |
| 4 | சசி வர்ந போதம் - பதார்த்த பாஸ்கரன் உரை. | 2—00 |
| 5 | மகா ராஜத் துறவு, மநப் பிரசாதிநி உரை. | 2—00 |
| 6 | வைராக்ய (பக்தி) சதக பத உரை பொழிப் புரை. | 1—50 |
| 7 | மேற்படி உரை உதாரணக் கவி (பக்தி ரச) உரை. | 1—00 |
| 8 | வைராக்ய தீப பத உரை, பொழிப் புரை. | 0—50 |
| 9 | மேற்படி உரை உதாரணக் கவி சுடர் உரை. | 1—00 |
| 10 | சீடாசாரம், பால போதிநி உரை. | 0—50 |
| 11 | கைவல்ய நதநீதம் தத்துவார்த்தீப உரை உதாரணக் [கவி ஆதித்தன் உரை. | 3—00 |
| 12 | வேதாந்த சூடாமணி—மநப் பிரசாதிநி உரை. | 4—00 |



உ
சிவமயம்.
ஓம் மகா கணபதயே நம:

ஊந விம்சதி ஸ்தோத்திர மொழி பெயர்ப்பு ரூப
(19, ஸ்தோத்திரமும், மொழி பெயர்ப்பும் ஆகிய)

# சுப்பய்ய சுவாமிகள் நூற் கொத்து.

---



இது

திருப் பூ வணம், வேதாந்த மடம்,
ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்,
பரிசோதனை செய்து,
ஒன்று சேர்த்து,
திரு வாரூர் மடப் புரம்,
குரு தக்ஷிண மூர்த்தி மடாதி பதி,
வீர. சு. ஸ்ரீ ஷண் முகாநந்த சுவாமிகளால்,
பொருட் செலவு செய்து,
மதுரை V. சுப்புராயலு நாயுடு பிரஸில் அச்சிடப்பட்டது.

இதில்

ஸ்ரீ திருக் களர் ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர்
மாணுக்கர், ஸ்ரீ சுப்பய்ய ஞாந தேசிகர் இயற்றிய
ஸ்தோத்திரங்களும், ச ம ஸ் கி ரு த ஸ்தோத்திர
மொழி பெயர்ப்பும் அடங்கி யுள்ளன.

---

1964 [விலை ரூ. 1 பைசா 50

உ

சிவ மயம்.

## ஹிந்தி மொழி பெயர்ப்பு.

1 ஆத்ம புராணம்-வசநம்.
2 பகவற் கீதை—கூடார்த்த தீபிகை—வசநம்

## சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.

3 கண்டந கண்ட காத்தியம், வசநம்.
4 வேதாந்த சித்தாந்த முக்தாவலி, வசநம்.
5 சித்தாந்த லேச சங்கிரகம் வசநம்.
6 பிரஸ்தாந பேதம், வசநம்.
7 தர்க்காமிருதம், வசநம்.
8 வேதாந்த சாராமிருதம், வசநம்.
9 உபதேச சஹஸ்ரி, வசநம்.
10 அத்வைத சித்தி சில பாகம், வசநம்.
11 32000 வாசிட்டம் வசநம்.
12 பஞ்சாக்ஷர பாஷ்யம், வசநம்.
13 நியாய காரிகாவலி செய்யுள்.
14 நியாய சித்தாந்த முக்தாவலி உரை, வசநம்.
15 கணேச கீதை கவி உரை
16 வேத சார சமுத்தரணம் கவி (தோடகம்)
17 சிவ மகிம்ந ஸ்தோத்தரம் கவி.
18 வேதாந்த டிண்டிமம் கவி-உரை
19 ஆத்ம வித்தியா விலாசம் கவி.
20 பர்திருஹரி வைராக்கிய சதகம் கவி.
21 பஞ்ச தசி 5 ஆநந்தம் கவி
22 கங்கா லஹரி, கவி உரை.
23 பிரஹ்ம நாமாவலி கவி.
24 வீர சேகர ஆசிர்வாத பஞ்ச ரத்நம் கவி.
25 மகா கணபதி—பஞ்ச ரத்நம் கவி.
26 குன்றுக் குடி, ஷண்முக ஷட்கம் கவி
27 குன்றுக் குடி, சுப்பிரமணிய தசகம் கவி.
28 விருஷ்டி ஷட்கம் கவி.
29 அத்வைத ரச மஞ்சரி உரை மட்டும்



## தமிழ் நூல்

1 வாசிட்டம் 2055 கவி வீர சேகர உரை
2 வீர சேகர கௌமுதி.
3 சங்கரத் துவேஷிபரின் வாய்ப் பூட்டு வசநம் முதற் பாகம்.
4 மேற்படி வசநம் இரண்டாம் பாகம்.
5 மதுரை அரசப்ப சுவாமியின் 65-வது திருவிளையாடல் கவி. 100
6 வீர சேகர மாலை கவி. 101
7 கோவிலூர், கொற்ற வாளீசர் அந்தாதி கவி. 101
8 ,, திரு நெல்லை அம்மை அந்தாதி 101
9 திருக் களர், பாரிஜாத வநேசுவரர் பதிற்றுப் பத்தந்தாதி கவி. 101
10 ,, அமிர்த வல்லி மாலை கவி. 101
11 சிக்கல், பொருள் வைத்த சேரி, செல்வ விநாயகர் செம் பொன் மணி மாலை கவி. 101
12 சிக்கல், பொருள் வைத்த சேரி, ஸ்வர்ண புரீசுவரர் மாலை கவி. 51
13 சிக்கல், பொருள் வைத்த சேரி, சௌந்தரிய நாயகி மாலை கவி. 52
14 சிக்கல், பொருள் வைத்த சேரி, சௌந்தரிய நாயகி பிள்ளைத் தமிழ் கவி. 101
15 சிவற கோட்டை, சிந்தாமணி விநாகர் செல்வ மணி மாலை கவி. 32
16 மலாயா நாட்டு, ஈப்போ, தண்டாயுத பாணி தோத்திரம் கவி. 32
17 காவிரிப் பதிகம் கவி. 10
18 ஐந்து குரு ஸ்துதி, கவி. 10

உ

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 6 | துணை பிணை | துணையினை |
| 7 | 21 | பற்குநனரிய | பற்குநனரிய |
| 13 | 11 | செவ் பொருள் | செம் பொருள் |
| 14 | 16 | குணர்ந்த திவனே | குணர்ந் திலனே |
| 16 | 22 | காட்டி | காட்டிய |
| 35 | 1 | கிடக்கில்லேன் | கிடக்குகில்லேன் |
| ,, | 9 | தடக்தே | தடத்தே |
| ,, | 14 | தநீது | தந்து |
| 44 | 25 | வெதற்கோ | வெற்கோ |
| 50 | 1 | னும்மமானுய் | னும்மானுய் |
| ,, | 23 | பிந்நகரைத் | யிந்நகரைத் |
| 64 | 8 | மணியோடு | மணியொடு |
| ,, | 15 | செமெலாங் | செகமெலாங் |
| ,, | 16 | ஐயற்பெற் | ஐயபெற் |
| 65 | 7 | லெளிதுகோ | லெளிதுகொ |
| 66 | 21 | லாம் | லா |
| 68 | 10 | ரேன வோத | ரென வோத |
| 74 | 20 | படியினி யாயின் | படியினி வருளினை [யாயின் |
| 81 | 5 | எந்திடு மழின் | எந்திடு மெழின் |
| 82 | 28 | மணியய | மணியே |
| 89 | 2 | மகிமையே | மகிமையோ |
| 94 | 8 | வழங்தை | வழங்கதை |
| ,, | 9 | வகந்தனிற் | வனந்தனிற் |
| 98 | 4 | சொல்லணு | சொல்லொணு |
| 101 | 9 | பிடிற் | யிடிற் |
| ,, | 20 | னெனவே | ளெனவே |
| ,, | 25 | வண்ங்கிக் | வணங்கிக் |
| 104 | 7 | மறுடனு | மருடனு |
| 105 | 5 | விறைவளே | விறைவனே |
| 107 | 4 | றருளு | றருளுஞ் |
| 112 | 14 | பொங்குரு | பொங்குகு |
| 114 | 3 | லைந்த்டு | லைந்திடு |
| 118 | 17 | பானிகைப் | பாணி (கை) ப் |
| ,, | 20 | வாஞுசையான் | வாஞ்சையான் |
| 122 | 9 | முததப் | முத்தப். |
| ,, | 20 | தலை | தனை |
| 125 | 27 | ம்மாத்துமா | மாத்துமா |
| 130 | 11 | போது மென | போது மென் |
| ,, | 20 | வேனேனப் | வேனெனப் |
| 133 | 25 | வாடியருளே | யாடியருளே |
| 137 | 28 | மோன் | போன் |
| 139 | 12 | னுய் தாய்ந்து | னுய்ந் தாய்ந்து |
| 143 | 9 | யயருளே | யருளே |
| 144 | 14 | முற்றிறறு | முற்றிற்று |
| 146 | 9 | பெருஞு சித்து | பெருஞ் சித்து |
| 147 | 23 | யமரகின் | யமர்கின் |
| 148 | 8 | மனை | மணை |
| 150 | 14 | பதிறறு | பதிற்று |
| 164 | 4 | சூந்ழ்ந்தனன் | சூழ்ந்தனன் |
| 166 | 23 | மோதமுங் | மோதமும் |
| 172 | 12 | போழ்றி | போற்றி |
| 173 | 6 | கருவ்வாய் | கருள்வாய் |
| 174 | 9 | தாந்தி | தந்தாதி |
| ,, | 10 | முறறிற்று | முற்றிற்று |
| ,, | 19 | வீரோச | வீரசே |
| 180 | 26 | சர்வக்ஞக்வ | சர்வக்ஞத்வ |
| 186 | 6 | சமஸகாரா | சமஸ்காரா |
| 187 | 3 | வமிர் | வகிர் |
| 194 | 12 | வளர்ருமையே | வளருமையே |
| 195 | 18 | மித்திய | மித்தியா |

| | | | |
|---|---|---|---|
| 196 | 15 | யெவர்கடமம் | யெவர்கடம் |
| 197 | 25 | வதையினைக் | வதையினைச் |
| 203 | 5 | நண்ணும | நண்ணும் |
| ,, | 6 | அவித்யரா | அவித்யா |
| 205 | 18 | வெவைக்கும் | லெவைக்கும் |
| 211 | 1 | யாரரொடு | யாரொடு |
| 212 | 10 | துயாக்கடல் | துயர்க்கடல் |
| 213 | 18 | எத்துனைக் | எத்துணைக் |
| 214 | 5 | மேற | மேற் |
| 221 | 11 | 32 | 12 |
| 222 | 15 | அமுதம | அமுதம் |
| 230 | 9 | வதனன | வதனன் |
| ,, | 20 | செற்கையை | செயற்கை |
| ,, | 26 | யிடையிலொருத்தி யேநீக்கி யிலங்குவை யென்குறைபெரிதோ. | ,, |
| 231 | 20 | வொடும | வொடும் |
| 232 | 8 | லஞ்சபர | லஞ்சபா |
| ,, | 10 | விளங்குவ | விளங்குவ |
| ,, | 18 | யிருக்குக் | யிருக்குந் |
| 233 | 10 | மென | மென் |
| ,, | 11 | கொன | கொன் |
| 234 | 21 | வாயின | வாயின் |
| 236 | 22 | நோயாள் | நோயால் |
| ,, | 29 | தேஙஞ் | தேசஞ் |
| 237 | 4 | நெருக்கி | நெருங்கி |
| 239 | 15 | பாபாசரண் | பாபாசரண |
| 240 | 13 | புரகின | புரக்கின் |
| 241 | 20 | நாடாத | நாடாத் |
| 242 | 9 | வெறும | வெறும் |
| 243 | 24 | சற்சநா | சற்சநர் |
| ,, | 26 | நினில | நினில் |
| 245 | 7 | தோடத்தியல் | தோடத்தில் |
| 246 | 14 | வீரக்கு | வீர்க்கு |



## ஸ்ரீ சுப்பய்ய ஞாந தேசிக ஸ்வாமிகள் சரிதம்.

''தோன்றிற் புகழொடு தோன்றுக — அஃதிலார்,
தோன்றலிற் றோன்றாமை நன்று'' என்பது திருக்குறள்.

கொங்கு நாட்டின்கண் கோயம் புத் தூருக்கு அருகி லுள்ள வேட்டைக்காரன் புதூர் என்னும் கிராமத்தில், மருதாசலம் பிள்ளைக்கும் அம்மணி அம்மாளுக்கும் உதித்து, சுப்பய்யா எனப் பெயர் பெற்று இளமைக்கண்ணே, ஆங்கிலமும், தமிழும், கற்று ஔடதப் பணிய ராய் அரிய பெரிய புகழுடன் இல்லின்கண் பிரம்மசாரியாய் இருந்து, முற் பவத்திற் செய்த சத் கருமங்களின் பயன் ஆக, விக்கி நேசப் பெருமானின் விமல அருள் விளக்கால் விராகத்தை அடைந்து, பற்றைத் துறந்து, வெளிப் போந்து. திருக் குற்றாலத்தை அணுகி, ஆங் குள்ள விக்கிநேசப் பெருமானை வணங்கித் துதித்துக் கொண்டு வருங்கால், கோவி லூர் ஸ்ரீ வீர சேகரப் பெருந் தகையாரின் மாணுக்கர், பழை யூர்ப் பட்டி, அருணாசல சுவாமிகள் என்னும் பெரியார், அருண கிரியார்க்கு அறுமுகவன் வந்தாங்கு எதிர்ப் பட்டனர். அவர், இவரது நற் குணங்களைக் கண்டு, 'நீவிர் கோவிலூர் என் றோர் வேதாந்த மடாலய ஸ்தாந மிருக் கிறது; ஆண்டுச் செல்வீரேல் நல மாம்' என் றுணர்த்த, அவ் வுரை கேட்டு, அவ் வண்ணமே கோயி லூரை அடைந்து, அங் குள்ள ஸ்ரீ வீர சேகர விமல மாதவ வித்தக ருடைய திருப் பாதத்தைச் சரண் அடைந்து மாணுக்கர் ஆகி, அங்குப் பிரம சபைக் கண் ஆசிரியர் அருகில் இருந்து, ஆப்தாதி பணிகளை அன்போடு செய்து, அருள் பெற்று,

வேதாந்த நூற்களை விதிப்படி பாடம் கேட்டுத் தெளிந்து, நிஷ்டை யுடைய ராய் வாராணசி அடைந்து, 'வட மொழி கற்றுத் திட முறு வித்துவான் ஆய், விவேகாநந்த சுவாமிகள் போன்று, சென்னையில் இருபத் தைந்து வருஷம் நித்தியம் ஆயிரம் பேர் கேட்க, ஆத்ம வித்தையினைப் பிரசங்கம் செய்து, உலகத்தினை ஈடேற்றுபவ ராய், ஷண் முகாநந்த சுவாமி, அநந்தாநந்த சுவாமி முதலிய பல மாணுக் கர்களைப் பிரஹ்ம வித் தாக்கி, பல அடியார்கட்கும், பல அன்பர்கட்கும், பல வக்கீல் கட்கும், வட மொழி தென் மொழி நூற்களைப் போதிக்கும் ஆசிரிய ராய், நியாய சந்திர, வேதாந்த பாஸ்கர ராய் விளங்கிக் கொண்டு, சென்னை, சூளை, ஆநந்தாசிரமத் தலைவரும். திரு வாரூர், மடப் புரம், தக்ஷிணு மூர்த்தி மடாதிபதியும் ஆக விளங்கிக் கொண் டிருந்து, காசி முதல் கந்நியா குமரி வரைச் சஞ்சாரம் செய்து கொண்டும், காரைக் குடி. பிரஹ்ம வித்தியாப் பிரசாரண சபையில், த்வைதிகளைத் தோல்வியுறச் செய்தும், பலகாலம் விளங்கிக் கொண்டிருந்து, சம்ஸ்கிருத நூல் 25 தமிழில் மொழி பெயர்த்தும், ஹிந்தி நூல் இரண்டு பெரிய நூலைத் தமிழில் மொழி பெயர்த்தும். கவி யாகவும், வசந மாகவும். செய்து, தமிழில் 20 நூல் ஆயிரம் கவி வரையும், வசநமு மாகச் செய்தும், பிரஹ்மாநுசந்தாந பிரஹ்ம வித்தாய், யாஞ்ஞு வல்கியர், ஜநக மகா ராஜா போன்று. விளங்கிக் கொண்டிருந்து, கலி 5032 இங்கிலிஷ் 1931 தமிழ் பிரசோத் பத்தி ஞு புரட்டாதிமீ 26உ திங்கட் கிழமை துவிதியை திதி, சுவாதி நக்ஷத்திரத்தில், சென்னை, சூளை, ஆநந்தா சிரமத்தில், பல பிரஹ்ம வித்துக்கள் முன்னிலையில் விதேக கைவல்யம் அடைந்தார்கள்.

சாந்தி.






അരുണാചല ജ്ഞാന ദേശിക സ്വാമികൾ. മുക്തി രാമ ലിംഗ ജ്ഞാന ദേശിക സ്വാമികൾ. ചിദംബര ജ്ഞാന ദേശിക സ്വാമികൾ.
കോവിലൂർ മഠം.

அருணாசல ஞாந தேசிக ஸ்வாமிகள். முக்தி ராம லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகள். சிதம்பர ஞாந தேசிக ஸ்வாமிகள்.
கோவிலூர் மடம்.



वीर शेखर ज्ञान देशिक स्वामिकळ् । तिरुक्कळर् ।

வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள், திருக் களர்.



वीर सुब्बय्य ज्ञान देशिक स्वामिकळ्.

வீர சுப்பய்ய ஞாந தேசிக சுவாமிகள்.

உ

சிவ மயம்.

கணபதி துணே.

ஸ்ரீ சமிவந க்ஷேத்திர மென்னும்,

ஸ்ரீ கோவி லூர் மடாலயம்,

ஸ்ரீமத், முத்தி ராம லிங்க ஞாந தேசிக ராதீநத்திற்

குரிய,

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர்

பாத சேகர ராகிய

ஸ்ரீ சுப்பைய சுவாமிக ளவர்களால்

இயற்றப்பட்ட

அத்வைதார்த்தப் பிரதீப மென்னும்

# வீர சேகர மாலே.

---

## விநாயகர் வணக்கம்.

---

சீரார் வசிஷ்டலிற் சேர்ந்த திருத்தேவி,
னேரார் பதங்க ளினிதேத்த—வீரேசன்,
மாலே யொருநூறு மன்னுபெரு மஞ்ஞாந,
மாலே யொழிக்கவரு மால்.

## நூல்.

---

தும்பியம் முகத்து முதலவ தமியன்
றுயர்துடைத் தருளுவா னருளா,
லம்பவ ளமுமுத் தழகொடு கொழிக்கு
மருமது நதிபொதி வநத்திற்,

செம்புகர் முகத்தை யொழித்தருண் ஞான
தேசிக வடிவமாய்ப் போந்தே,
வெம்பவ மொழித்த விரகினை மறவேன்
வீரஞா னேசதே சிகனே 1

என்றனைச் சிலவர் பேதையே யெனவு
மெண்ணிடப் பித்தனே யெனவு.
முன்றனிற் புகுந்தம் முன்னுரு வாகி
யுள்ளுறு துயரை யென் றொழிப்பேன்,
பொன்றனி நகரி லுறைவரும் புகழும்
புறவகத் துறவுகொண் டுளத்தை,
வென்றவர் பரவ வீற்றிருந் தருளும்
வீரஞா னேசதே சிகனே, 2

நல்லமு ததனை நாயினுக் களித்த
நலமென நலமிலா வெனக்கு,
மெல்லநின் னருளைப் புகட்டியென் றுயரை
மெலிதரப் புரிதலுந் தகுமோ,
கொல்லினுங் கலக்க மறும்பெருங் குணத்தர்
குளிர்தருங் பொங்கருட் டவத்தால்,
வெல்லுநல் லவித்தை காரெனுங் கழநி
வீரஞா னேசதே சிகனே. 3

கொடியதை நினைந்துங் கொடியதே புரிந்துங்
கொடியவ ருடனுற வாயும்.
படிமிசைப் படிற னெனப்பெயர் படைத்தும்
பதமலர் பணிகிலேன் கண்டாய்,
நெடியவன் பிரமன் குலிசனே முதல
நிமலநல் லமரர்க ணெருங்கி.
விடலருங் கழநி நகரினுக் கிறைவ
வீரஞா னேசதே சிகனே 4



கண்முதற் பொறிகள் கதுவுறும் விடயக்
கடுவுற லொழித்துப்புன் கருத்தைத்,
திண்மலை யெனநின் றிடப்புரிந் துனது
திருவடி யடியனென் றடைவே,
ணொண்மத கரியோ டுறவுற வமர
ரும்பல்வந் தமயனோக் குதல்போல்,
வெண்முகில் வதியும் வசிவந முநிவ
வீரஞா னேசதே சிகனே. 6

எய்தவ னிருக்க வம்பைநோ குதலென்
னென்னுநற் றவருரை யகத்தே.
யெய்தியுஞ் சமத்தை யெய்துறு திருத்த
லென்னெனக் கெந்தையே யருள்வாய்,
செய்குன்ற மனைய மாளிகை மாட்டுச்
சீதள நிலவுல விடுங்கார்,
வெய்தினை யகற்றும் வளம்பொழி கழநி
வீரஞா னேசதே சிகனே. 6

துட்டர்க ளுடன்புன் றட்டமா நெறியிற்
றுயரெனும் பயனயின் றுழன்றே,
னிட்டநல் லறிவி லென்மன மிருக்க
வின்புட னும்பநீ யருள்வாய்,
மட்டவிழ் மரையி னிலையறற் றுளியை
மன்னண்ட மென்றுகண் டாமை,
விட்டிடு மதுவின் றடத்தினுக் கிறைவ
வீரஞா னேசதே சிகனே. 7

கொழுந்துவிட் டெரியுந் தீவினை வனத்திற்
குலவியே மிகமிக வருந்தி,
யழுந்துயர் நினது திருச்செவி சார்த்தி
யருளுநா ளென்றுகொல் லறியே,

னழுந்திநற் கனிக ளரிபரித் ததன்பின்
னறலொடுஞ் சாகைமீக் கிளம்ப,
விழுந்துளி யமுதஞ் சுரர்கொளுங் கழசி
வீரஞா நேசதே சிகனே. 8

ஒழித்திடத் துயரை யுன்றிருப் பதத்தை
யொழித்தொரு துணைபினைக் காணேன்,
கழித்தெனை விலக்கிற் கதியெனக் கெவர்கொல்
கருணையின் நிதியருள் பெரியோய்,
வழுத்துத றவிர வருமகன் கொழுநன்
மடித்திடு மென்னும்வன் மொழியால்,
விழிச்துச்சித் தசனை யழித்தவ னளித்த
வீரஞா நேசதே சிகனே. 9

அடியருக் கரிய பணிபுரிந் தில்லே
னையநின் றிருவடி தனக்கு,
மிடரற வரிய பணிபுரிந் தில்லே
னென்செய்வா னிருந்தன னறியேன்,
கடிகமழ் கழசிக் கிறைவநற் குரவ
கருணையங் கடலெழு மமுதே,
விடமநப் பகையை விடுத்தவர் வழுத்தும்
வீரஞா நேசதே சிகனே. 10

சுக்கில மிரத்தங் கலந்திட வுளதாந்
துயர்தருஞ் சடமதா முடலை,
மக்கிந மநத்தி லகமென நினைந்து
மருவுறு நினதடி மருவேன்,
பக்குவ மறிந்து நின்றிரு வடியைப்
பற்றிடப் பற்றநா ளுளதோ,
விக்கிநக் கடவு ளருளுரு வான
வீரஞா நேசதே சிகனே. 11



காரை மாநகரி னிறைவனே யென்னேன்
கருதருந் தேவிமா நகரிற்,
சீரைமே வியநற் குரவரே யென்னேன்
சிக்கலுட் டேவனே யென்னேன்,
காருலாம் புதிய வயற்கிறை யென்னேன்
கழசிவா ழடியரே யென்னேன்,
வீரமா வருளைப் பெற்றிட லெவணம்
வீரஞா நேசதே சிகனே. 12

கங்குலும் பகலுங் கழசிய வெனவென்
கருத்தழன் மெழுகினிற் கரையா,
வங்கமும் விதிர்வுற் றறல்விழி பொழிய
வரற்றிடற் குரியநா ளுளதோ,
சங்கரிக் கிளைய சங்கரிப் பிரிய
சங்கர குமரசெங் கரியே,
வெங்கரி யுலவும் வசிவந முசிவ
வீரஞா நேசதே சிகனே. 13

முத்திரா மேச முதல்வரின் கருணை
முதல்வருண் முதல்வரின் முளரிச்,
சித்தமூ டுதித்த திருவிளை யாடற்
செய்துநீ யாவையு முடித்தே,
யுத்தமக் குரவர் மகிமையை யொளிர்க்கு
முன்றிரு வடிநனி மறவேன்,
வித்தகர் புகழுஞ் சமிவந முசிவ
வீரஞா நேசதே சிகனே. 14

தேசிக ரெவர்க்குந் தேசிக ரான
சிதம்பர ஞானதே சிகன்றன்,
மாசறு மலரை மருவினு நினக்கு
மாசொரு சிறிதுள துரைப்பே,

னேசுறு மெனேயு மடிமையாய்ப் புரிந்து
மேசறு பதமளித் திலேநீ,
வீசுறு திரைகள் கரிகவர் நதிய
வீரஞா நேசதே சிகனே. 15

மூத்திரா மேச முதல்வனே யெனவு
முதிர்துற விறைவனே யெனவு,
மத்தியை யனேய கருணேமா நிதியே
யண்ணலே யென்றுமே திநமு.
மத்தனும் புகழ்வ தன்றியொன் றறியேன்
மங்கையர் மயக்கொழித் தருள்வாய்,
வித்தறப் பொருளே யருடருங் குரவ
வீரஞா நேசதே சிகனே. 16

சங்கையற் றரிய நிட்டையைப் புரிந்து
சமமதை யுறினுஞ்சாத் திரத்தூ,
டிங்கரும் பொருளே யாயினு மலதிங்
கிலங்கிளே மாதர்பா லுறினும்,
பங்கய முறமு நின்பத மறக்கும்
பான்மைய னலனெனக் கருளாய்,
வெங்கரி யெனச்செல் லுலவிடும் வநவ
வீரஞா நேசதே சிகனே. 17

மாதவம் புரிந்து வாழினு மலது
மங்கையர் கொங்கையூ டிழிந்தே,
தீதினேப் புரிந்து வாடினு நினது
திருவடி மறவிலேன் கண்டா,
யாதலி னடிய னின்னுரு வாக
வையசெய் திடல்கட னுகும்.
வேதநன் முடிபை யுணர்பவர் பணியும்
வீரஞா நேசதே தேசிகனே. 18



அரிமுக னரியொ டயனர னருக்க
னம்பிகை முதலவோ ரொன்றைப்,
பரமெனப் புகலு ஞான்றுமற் றைந்தும்
பரமல காரிய மெனவே,
யுரியநற் பொருளே யெனக்கருள் புரிந்திங்
குண்மையை யுணர்த்தினே மறவேன்,
விரிமது நதிக்கண் ணுறைதிருக் குரவ
வீரஞா நேசதே சிகனே. 19

முன்னநின் முளரி முன்னிட வருளி
முடிவில்பே ரின்பம்யா னுறவே,
பின்னரிந் நகரிற் குருபர னுகிப்
பிறங்கிடு முபநிடப் பொருளேப்,
பன்னிடு நினது கருணேயின் பொருட்டுப்
பண்ணுகைம் மாறெதோ வறியேன்,
வின்னல வணிக ணிறைதரு வநவ
வீரஞா நேசதே சிகனே. 20

இற்குறித் திலனற் றுறவொழுக் கிலன்மற்
றெதனினு மிலன்மதர் நெடுங்க,
ணற்குழ லாடை தனின்மந நுழைந்தங்
கழிதரு மெளியனேற் கருளாய்,
பற்குந னரிய கரியவ னிரவிற்
பணிந்திட வவர்க்கருள் புரியும்,
விற்கிரி விரக னருடிருக் குமர
வீரஞா நேசதே சிகனே. 21

முவ்வுல கினேயுந் திரணமென் றகத்தின்
முன்னுறு மன்பஞ மெனக்குந்,
தவ்வெழில் கொழிக்கு மரிவைய ருருவஞ்
சதிசெய னன்றுகொல் லுரையாய்,

பவ்வநின் றகல வருந்தவ முனுற்றப்
பக்குவத் தலமெனப் புகழும்,
வெவ்வழற் பெயரை யுறும்வந முநிவ
வீரஞா நேசதே சிகனே. 22

எத்தனை யெனக்கிங் கெவருரைத் திடினு
மென்மந மிலங்கிழை யவர்பான்,
மெத்தவுஞ் சுழலு மெந்தையே நினது
மெய்ப்பத மறவிலேன் கண்டாய்,
முத்தியென் சுதையி னத்தியி னுதித்த
முதுநிதிக் கருணையி னெளியே,
வித்தறப் பொருளை யருடரு மிறைவ
வீரஞா நேசதே சிகனே. 23

குயங்குவ டளக மெழிலிபுன் வதநங்
குளிர்நில வெனவிழை யரையா,
னயங்கெழ வுரைத்த விரித்துனைக் குறித்தின்
னறுந்துதி புரிந்திட வருளா,
யயங்கனல் வளிகம் மகியிம கிரண
னரியமா னுயிரெனு முருவ,
வியன்கெழு கழநி நகர்வள ரிறைவ
வீரஞா நேசதே சிகனே. 24

முழைநுழைந் திருந்தும் பனியினி னனிநன்
முளரியென் றறவினி லிருந்து,
மழை வெயிற் பொறுத்துந் தவந்தனை யாற்றி
மாதவர் வருந்தினுர் வருந்த,
வுழையுற ழுருட்க ணெண்டொடி யவர்பா
லுழன்றனன் றமியனே னருளாய்,
விழைவறு முநிவ ருறைவநி வநவ
வீரஞா நேசதே சிகனே. 25



பற்பனு மகளைக் காணுபு மாழ்கிப்
பறம்புற விரும்புறு வானே,
லற்பெனவ் வணமவ் விழைவினை விடுத்துன்
னரும்பதம் பெறுவதெற் கருளாய்,
நிற்பர வடியர் நினைக்குமுன் றேன்றி
நிகரரும் வரந்தருந் துகிந,
வெற்பருள் குமரி யருடிருக் குமர
வீரஞா நேசதே சிகனே. 26

வெஞ்சமர் கடந்த வேலினுங் கொடிய
விழியினர் தமக்குளம் வெருண்டே,
யஞ்சிறை யளிக ளாடுசெங் கழுநீ
ரலங்கலாய் நின்றனை யடைந்தேன்,
மஞ்சென விருண்ட குழலியர் மயக்கின்
மாசினை யறுத்தருள் புரிவாய்,
விஞ்சையர் புகழுங் கழநிநன் நகர
வீரஞா நேசதே சிகனே. 27

சுக்கிர னெனினும் பற்பல பிறப்பின்
சுழற்சியிற் றேகையாற் சுழன்றுன்,
வக்கிர மநத்த னுகிய வடியன்
வளம்பெற லெவ்வணம் வழங்கா,
யுக்கிர வழுதி பெற்றநற் றவனி
லுயர்திருப் பணியெலா முடித்தே,
வெட்கிடக் கயிலை கழநியைப் புரிந்த
வீரஞா நேசதே சிகனே. 28

எண்டிசை பரவு நின்றிரு வடியை
யெண்ணிடா தையகோ வியத்தே,
பெண்டுகண் மயலிற் றுயரையே யடைந்து
பேதைய னுயினே னருளாய்,

மண்டனி னரரு நாகருஞ் சுரரு
மண்டிடத் திண்டிசா முகனும்,
விண்டுவும் பரவு மசியிறை நகர
வீரஞா நேசதே சிகனே, 29

கடையவர் கருதும் விடயமே கருதிக்
கடையினுங் கடையனு யினனுற்,
றடையற நினது கருணையின் ருகிற்
றமியன்மற் றென்கொலோ புரிவேன்,
விடயவெவ் விடத்தைக் கடந்தவர் பணியும்
வேலவற் பயந்தவ ளுயிராம்,
விடையவன் குமர கழநிநன் நகர
வீரஞா நேசதே சிகனே. 30

சொப்பநந் தனையுஞ் சத்திய மெனவுஞ்
சொல்லதத் துவமசி யெனவும்,
விற்பனர் சிலவர் விளம்பினு மதனை
விட்டொழி விட்டொழி யெனவே,
யொப்பறும் பொருளை யுரைத்தருள் கருணை
யும்பர்க்கு மொண்ணுமோ வுரையாய்,
விப்பிரர் மறைய ரெனச்சொ லுங் கழநி
வீரஞா நேசதே சிகனே. 31

பக்குவச் சோம மாந்திநல் லமிர்த
பதம்பெற மறையறை தலினு,
லக்கரப் பிரம மறியலெற் றினுக்கென்
றரைதரிற் பிரளயம் வரையுந்,
தக்கவின் னமிர்தத் தகைமையுஞ் சிறிது
தங்கிடு மெனமலர்ந் தனைநீ,
விக்கின ஹரண வேலவன் றமய
வீரஞா நேசதே சிகனே. 32



சத்தினுக் குதயஞ் சிலவரு மபத்தின்
றன்மையுள் ளதற்குச்சிற் சிலரு,
நித்திய மெனவிந் நிகிலத்தை மிகவு
நிகழ்த்துவர் நீசெலா தொழிந்தே,
யெத்தகை யினும்புன் மாநின துருவி
லிருத்தெனு மருணனி மறவேன்,
வித்தகக் கழநி நகர்வள ரிறைவ
வீரஞா நேசதே சிகனே. 33

உண்மைய தாக வுதயமு மிலைமற்
றெருருவியு முதயமு மிலையாம்,
வெண்மையி லெழுந்து விளங்கிடு முலகம்
விளம்பனித் தியமென லெவணங்,
திண்மைய தாயெக் காலமு முளதாஞ்
சித்துநீ யெனவருள் புரிந்தாய்,
வெண்மையென் றுரைக்கும் வெண்மையோன் குமர
வீரஞா நேசதே சிகனே. 34

சாங்கிய ருரைக்கும் வணம்பிர தானஞ்
சகத்தினுக் கொருமுத லெனிலோ,
வீங்கிவை யாவு மாவமென் றேக்க
மிசைவுரு தெனவருள் புரிந்தாய்,
கோங்ககில் சாந்த முதலன கொணருங்
குளிர்மது நதிப்புன லாட்டி,
வேங்கட முநிவன் முதலவர் பணியும்
வீரஞா நேசதே சிகனே. 35

பகுதிசித் தினுக்குப் பயந்திட லிரண்டு
பற்றிடா போகமே யெனிலோ,
தகுதிநன் மோக்க முற்றிடா மோக்கந்
தருமெனிற் போகமோ தணரும்,

பகுதியின் பயன திவ்வண மாகும்
பற்றிட லற்றிடென் றறைந்தாய்,
விகுதியங் குரத்தைத் தகித்தவர் வழுத்தும்
வீரஞா நேசதே சிகனே. 36

எண்ணறு முயிரின் வினையெலா முணர்ந்திங்
கிரும்பிர ளயம்வரை யிருப்பான்,
கண்ணிடு நினது வீக்கண வலியைக்
கடையரோ கணிப்பவ ருரையாய்.
தண்ணற வுறுநற் றடப்புனன் முழுகிச்
சயினதி வினையினைத் தணந்தே,
விண்ணவ ரிறைபி னருள்பெறுங் கழநி
வீரஞா நேசதே சிகனே. 37

அணுக்களிற் கிரியை பற்றினும் யோக
மவயவ மின்றியெங் ஙனமா,
நுணுக்கரவ் யாப்ய விருத்திசை யோக
நுதலுவர் பொருந்துமோ வதனுற்,
றுணுக்கென விடுத்துச் சுருதிசொல் வழியைத்
தொடரென வெனக்கருள் புரிந்தாய்,
விணுக்கரி தாகி மெமக்கெளி தாகும்
வீரஞா நேசதே சிகனே. 38

சத்திய ஞான வநந்தமென் மறைக்குத்
தருக்கர்கள் சாற்றுவர் குணமே,
மெத்தவிஞ் ஞான கநமதே யெனற்கு
விளம்புவ ரென்கொலோ வறியே,
நித்திய நிமல நிட்கள மாகி
நிறைந்தொரு குறைவுரு தறிவா,
மெய்த்தவ கழநி நகரினுக் கிறைவ
வீரஞா நேசதே சிகனே. 39



கடபட முதல வுளவென நிதமுங்
காண்டலின் மெய்யெனப் புகல,
விடமொரு சிறிதென் றிந்துவிற் காண
லெவ்வண மவ்வண மிதற்கும்,
படர்தரு கருத லொடுமறை யளவை
பாதக மெனவருள் புரிந்தாய்,
விடதரஞ் சிகிவெம் பகையறும் வாவ
வீரஞா நேசதே சிகனே. 40

இம்பரும் பரமு மெய்யெனச் சுருதி
யியம்பலான் மெய்யெனி னிதுதான்,
செல்பொருள் சிறிது மிலையெனு மறைக்குச்
செறியெதிர் மறையதே யாகிப்,
பம்பிடு மெனவென் றனக்கருள் புரிந்த
பான்மையை மறப்பனே பகராய்
வெம்புத லகற்றும் பொழிலெழு கழநி
வீரஞா நேசதே சிகனே. 41

அளவறு மறைகண் மெய்யென வுலகை
யறையினு மற்பமு மிலையென்,
களவறு மறைநற் பாதக மாகுங்
கதிர்வடி வேலவ னெருவ
னளவறு மசுரர்க் கெவ்வண மவண
மறிதியென் றருள்புரிந் தனையே,
விளைவுறு சாலி கழையெனுங் கழநி
வீரஞா நேசதே சிகனே. 42

கருமம்விஞ் ஞான மோக்கவே துவதாய்க்
கரைந்திடல் பொருந்திடா தீச,
மருமசிற் குரைப்பல் வித்தையென் பதற்கு
மருவுபா சனைபொரு ளாகுந்,

தெருமர லெவன்கொன் ஞானமே யேது
சிறிதிலை யெனவருள் புரிந்தாய்,
விரமம தடைந்த வருந்தவர் வழுத்தும்
வீரஞா னேசதே சிகனே. 43

தானமே புரிந்துந் தவந்தனைப் புரிந்துந்
தவறிலா மகந்தனைப் புரிந்தும்,
ஞானமே யலது கதியிலை யெனவே
நான்மறை முழங்குமென் றருளி,
யீனமா முடலி லகமதி யிரிக்க
வியற்றுறுங் கருணையான் மறவேன்,
வேனலே யிலையென் வசிசிறை வாவ
வீரஞா னேதே சிகனே. 44

மறுபிறப் பறுக்கும் வள்ளலாஞ் சிவமு
மாசதொன் றின்றியே யிருப்பப்,
பிறிவுறு முயிர்கள் விபுவெனப் பிதற்றும்
பெற்றியெற் றினுக்குணர்ந்த திலனே,
கறையறத் துறந்த துறவின ராகிக்
கழுசியம் பதியினை யடைந்தே,
வெறுமறி வுருவ மாணவர் வணங்கும்
வீரஞா னேசதே சிகனே. 45

பலவுயி ரேனு மவித்தையின் பேதம்
பற்றியிங் கொருபுடை பனலா,
நலவிபுப் பான்மை யளவிலா வுயிர்க்கு
நண்ணுவ திலைகமா திகட்கோ,
சொலவறுந் தகைமை பொருந்தலா லுறமென்
சொன்மழை புள்மையேன் றுதிப்பேன்,
விலகும்வெள் ளருவி மதுவெனுங் கழுசி
வீரஞா னேசதே சிகனே. 46



விண்ணிப மெனனல் விபுவெனற் கல்லால்
விளிவறற் கல்லவே வேதம்,
விண்ணழி விலையென் றிடல்பிர ளயத்தில்
விழுமள வெனவருள் புரிந்தாய்,
விண்ணவ ருமையின் குமரனைப் பணிய
வேண்டிடும் பத்திர மீவான்.
விண்ணிவ வணிக ணிறைதரும் வாவ
வீரஞா னேசதே சிகனே 47

சூக்குமத் தாலிங் காகுமென் றுறைப்பிற்
சொல்லிடு முயிர்க்கெலாம் வினைக,
டாக்குமொன் றினுக்கொன் றுதலின் விவத்தை
தங்குத லரிதென வருளித்.
தேக்கியென் மாத்திற் றெருளினை யருளுந்
திருவடி கனவிலு மறவேன்,
வீக்கிடும் பாச மறுத்தவர் வணங்கும்
வீரஞா னேசதே சிகனே. 48

உள்ளுறு சிவம தகமென வுனலா
முரையகஞ் சிவமென வுனலோ
கள்ளமென் றுரைக்கின் மறையவ னகமாங்
கருதக மறையவ னுக.
வெள்ளலெவ் வணமொண் ணுதுரை யெனவே
யென்றனக் கருள்புரிந் தனைநீ,
விள்ளுதற் கரிய கழுசிமா நகர்வாழ்
வீரஞா னேசதே சிகனே. 49

உடலுறை யிறையு முலகுறை யிறையு
முற்றிடும் பேதமென் றியம்பிற்,
படருல கதனை யதுபுரிந் ததனிற்
பகரது வேபுகுந் ததெனு,

மிடரறு சுருதி யென்கொலா மெனவே
யென்றனக் கருடரன் மறவேன்,
விடலறுஞ் சுடர்க்குஞ் சுடர்தரு முருவ
வீரஞா நேசதே சிகனே. 50

சம்பந்தஞ் சிவமொ டுறன்முத்தி யெனிலோ
சரியொன்று மொன்றதா யிடுமோ,
செம்புந்தங் கமதாய்ச் செய்திடப் படலாற்
செறிந்துறு மெனிற்பிரிந் திடுமென்,
றெம்பந்த மகற்ற வென்க்கருள் புரிந்த
தென்னெனப் புகலுவன் புகலாய்
வெம்பந்த மகன்ற மெய்த்தவர் வழுத்தும்
வீரஞா நேசதே சிகனே. 51

நால்வர்கள் மொழியு நான்மறை முடிபு
நலம்பெறு மேகமே சொல்லாற்,
கால்வயி னேடுஞ் சருகெனக் கலங்கிக்
கருத்தழிந் திடுதலென் னுரையாய்,
சேல்வலிக் கமட வென்னிற்கண் படுக்குஞ்
சிறப்புறுங் கழனியார் கழனி,
வேல்வலன் றமயன் றனதுரு வான
வீரஞா நேசதே சிகனே. 52

கண்மணி யனைய சங்கர முனிவன்
காட்டி வழியினை கவரார்,
பண்மொழி யருளும் வழியினிற் படரார்
பலர்மொழி கொள்ளும்பா மரர்க,
டிண்மையென் றிவற்றை யுணர்தியென் றருளுந்
திருவருண் மறப்பனோ சிறிதும்,
விண்மணி புகுத லறும்பொழிற் கழனி
வீரஞா நேசதே சிகனே. 53



ஒவ்வொரு வுடற்கு மொவ்வொரு வுயிரை
யொப்பிட றகுதியே யன்றி,
முவ்வுல கதனி லொன்றினைப் புகலின்
முற்றிடு மோதொழி லெனிலோ,
செவ்விதிற் பொருந்துங் கண்ணனு முநியுஞ்
செய்திடல் காணியென் றறைந்தாய்,
வெவ்வினை யகன்ற மெய்த்தவர் புகழுந்
வீரஞா நேசதே சிகனே. 54

கம்பமில் லுயிரு மொன்றெனி லுலகர்
காரியம் யாவையு மறிந்தே,
பம்பிடல் பொருந்து மென்றிடிற் பலவைப்
பற்றிய சங்கையே நும்பா,
னம்பிலை யெனநன் மைந்தனே யென்று
நன்கினை யருள்புரிந் தனையே,
விம்பகல் விமல வறிவுரு வாய
வீரஞா நேசதே சிகனே. 55

ஏகமா ஞாந முதித்திடி லவித்தை
யெவர்க்குமின் றுயிடல் வேண்டு,
மோககா ரியங்கண் முடிந்திடல் வேண்டு
முற்றினுங் குற்றமா மெனிலோ,
ஆகமா ஞாந மெவர்க்குமின் றளவு
முதித்திலை யென்றருள் புரிந்தாய்,
வேகுமா வுடலை யகமென லழிக்கும்
வீரஞா நேசதே சிகனே. 56

சாங்கவு பாங்க சாதந நிறைந்த
சம்பிர தாயமுன் னவரா,
மாங்குயின் மிழற்றும் வநமுறை சுகரின்
மதிப்பிதா வசிட்டரின் னவர்க்கு,

மீங்கெழு ஞான முதித்திலை யென்று
　　லென்றனக் கெவ்வண முதிக்கும்,
வேங்கட முனிவன் முதலவர் வணங்கும்
　　வீரஞா நேசதே சிகனே. 57

ஏசுறு நினது காவினி லெழுந்த
　　விருடிய ரெவர்க்குமே மைந்தா,
பேசுறு பிரம ஞானமுண் டோசொல்
　　பின்னரிச் சங்கையெவ் வணமா,
மாசறு நினது வடிவினை யறியின்
　　மயக்கறு மெனவருள் புரிந்தாய்,
வீசரி யரியும் பகையறும் வாவ
　　வீரஞா நேசதே சிகனே. 58

முத்திரா மேச மெனும்பதம் மூன்றின்
　　முடிபிடை முதலது நேரே,
தத்துவ மசியை யுணர்த்தலி னதனைச்
　　சந்ததஞ் சிந்தியென் றருளுங்,
கத்தரிக் கருணை காவினும் புகழ்வல்
　　கருதரு மவித்தையைக் கடப்பான்,
வித்தைகற் றவர்க ளுறைதிருக் கழநி
　　வீரஞா நேசதே சிகனே. 59

பஞ்சம பதத்தை யவித்தையி னிவிர்த்தி
　　பகருவர் சிலவரவ் வணமே,
லுஞ்சிடு புருட வருத்தமின் ருகு
　　முண்மையை யுணர்முயல் விலதாஞ்,
செஞ்சொ னன் மறையும் வியர்த்தமா மெனவே
　　திருவருள் புரிந்ததுஞ் சிறிதோ,
விஞ்சுறு கவின்கொள் கழநிநன் நகர
　　வீரஞா நேசதே சிகனே. 60



ஏகமே வாத்து விதமென மறையு
　　மிலங்கிடும் சுவகதா திகளை,
யேகமே னூக்கு மனிதனு னீயு
　　மேகமே யெனவெனக் கருளிச்,
சோகமே கடத்துஞ் சொல்லினை யெவர்க்குஞ்
　　சொல்லுவன் சொன்மநங் கடந்த,
வேகமே கழநி நகர்வள ரிறைவ
　　வீரஞா நேசதே சிகனே. 61

இவ்வுல கரும்பொய் திருசிய மாகி
　　யிருஞ்சட மாய்ப்பரிச் சிநமாய்த்,
தவ்வற விலங்குந் தகைமையாற் பழுதைச்
　　சக்கிரி நிகரெனத் திரமாய்ச்,
செவ்விதி னருளுங் கருணையைப் புகழ்தல்
　　சிறிதுகொ றமியனேற் கருளாய்,
வெவ்விருள் கடந்த வருந்தவர் வணங்கும்
　　வீரஞா நேசதே சிகனே. 62

ஈதெலாம் வெறும்பொய்' யெதனினு னெனினிங்
　　கிதுவுள தாமுன மிலதாய்த்,
திதினுல் விளைந்து நசித்தபின் னிலதாய்த்
　　திரிதலா லென்றுன துளத்தே,
காதலா லுணர்தி யென்றருள் புரிந்த
　　கருணையைக் காவினு மறவேன்,
வீதலா முடலை வெறுத்தவர் வழுத்தும்
　　வீரஞா நேசதே சிகனே. 63

மித்தையென் றுரைத்த லெதுவென வினவ
　　மிளிர்வறு மசத்தின்வே றுகிச்,
சத்தினந் நியமா யிருப்பது ஞானந்
　　தன்னினுற் றணர்தல்சார் வதுவுஞ்,

சத்தனி லிருப்பி னபிமத முழுதுந்
தங்கின்மை யெதிர்மறை யெனவும்,
வித்தையி னழியு மித்தையென் றுரைத்தாய்
வீரஞா னேசதே சிகனே. 64

சகபர முதல மரக்கரி யுறழத்
தன்னினின் றன்னிய மலவே,
சுகபர வுருவந் தனதுரு வெனச்சொல்
சொல்லினை யுள்ளினி னுணர்ந்தே,
நிகபர நசையை யிரித்தமெய்த் தவர்க்
ளிருந்தருந் தவம்புரிந் திடவே,
வெகுகுடில் விளங்குஞ் சமிவந முநிவ
வீரஞா னேசதே சிகனே. 65

சொப்பந நனவி னினைவென லாலச்
சொப்பநம் பொய்நந வலவே.
சொப்பந மதன்றன் னினைவது நநவென்
சொல்லினி லென்கொலோ குறையா,
மொப்பறு குமர வுரையென வினவு
முன்றிருக் கருணையான் மறவேன்,
விற்பநர் புகழும் வநிவந முநிவ
வீரஞா னேசதே சிகனே. 66

திருப்பொலி யுலக மாநச மலதேற்
சிந்தனை யறவுறல் வேண்டு,
முருப்பொழி யுளமு முனையல திலையென்
றுண்மையை யருளினு லுரைத்தா,
யிருப்பதி ரசதப் பொருப்பருந் தநுசு
மிலங்குபொன் விலங்கலா யிருந்தும்,
விருப்பொடு மிறைவ னசிகவர் நகர
வீரஞா னேசதே சிகனே 67



மாநச மாயிற் சகந்திநஞ் சோய
மருவலெவ் வணமெனிற் சமமே,
யானநற் சாதி யாதலி னுமென்
றருள்புரி கருணையான் மறவேன்,
ருனெனும் பொருளை யறிமது முநிக்குத்
தடையற வரமெலா முதவும்,
வேனிலை நயநப் பயமறும் வநவ
வீரஞா னேசதே சிகனே. 68

காரண மதனின் றெவ்வகை யானுங்
காரிய மசியமன் றதனுற்,
ருரணி நினது நினைவென நினைந்து
சந்தத மகிழென வருளுந்,
தோரணை யுளத்தி னிதமுங்கொண் டாடத்
தொண்டனுக் கருள்புரிந் திடுவாய்,
வீரணம் படரு மதுநதிக் கிறைவ
வீரஞா னேசதே சிகனே. 69

திரை நுரை யளவி நிகழினு மறலைத்
திரிந்தொரு திரணமு மிலைபோ,
லுரையறு நாம வுருவம தெழினு
முனையல திலையென வுரைத்தாய்,
மரையிலை யறலைத் தரளமென் றயிர்த்து
மடைந்தைய ரடர்ந்துவெட் கிடுஞ்சிர்,
விரையுறை நறவத் தடம்பொலி நகர
வீரஞா னேசதே சிகனே. 70

பொன்றனு லியற்று மகுடமே முதல
பொன்றனிற் பிறிதிலை யதுபோ,
லுன்றனு லியற்று மிவ்வுரு நாம
வுலகுனை யன்றியின் றுணர்நீ,

யென்றனே யருளு மருளினை மறவே
னினிதினி தென்றலை மனனே,
வென்றசீ ரடிய ருறைதிருக் கழநி
வீரஞா நேசதே சிகனே. 71

நாமமொ டுருவந் தோற்றலிற் பொருளு
நாடிடிற் பேதமா மெனிலோ,
சேமநன் னடனும் வேறெனச் சிறிதுஞ்
செப்பிட லில்லையே னெனவே,
நீமனத் துணர்தி யென்றருள் புரிந்த
நின்மல நின்பதந் தொழுவேன்,
வீமனின் வலுத்த வீரர்வாழ் கழநி
வீரஞா நேசதே சிகனே. 72

சுவருறைந் திடும்பல் லோவிய மனைத்துஞ்
சுவரெனல் சுயமதி யதுபோற்,
பவமுத லான சங்கற்ப விகற்பம்
பரவடி வெனக்கண்டு பரமாந்,
தவமுளுற் றெனவாண் டவரரு ளியதாற்
றவமதின் முயலெனப் புகன்றாய்,
விவஸ்வதன் வணங்கு மடியவர் வணங்கும்
வீரஞா நேசதே சிகனே. 73

சத்தினைப் பிரித்து நோக்குறில் வெளிய
தாதிய தசத்ததாய்த் தயங்கு,
நித்திய வறிவே நிலையது வாகு
நீயது வெனவருள் புரிந்தாய்,
தத்திடுஞ் சகுலிக் கொடியற்குக் கயல்க
டண்டுளி சிதறலாற் கதியீ,
வித்தர நறவத் தடம்பொலி கழநி
வீரஞா நேசதே சிகனே. 74



பொய்ம்மையு மரிய பொய்யெனப் புகலிற்
பூதலம் பொய்யலா திலங்கு.
மையவென் றிசைக்கும் வார்த்தையும் வார்த்தை
யாகுமே யதுவிவ ணிலையான்,
மெய்யினின் மயக்கம் பொய்யுறி லாண்டு
மிளிர்தரு மெனவருள் புரிந்தாய்,
வெய்யவ ரகன்ற சமிவந முநிவ
வீரஞா நேசதே சிகனே. 75

உலககற் பனைக்குக் காரண மவித்தை
யுரையென வவித்தைகா ரணத்தை,
யிலகிடு மவித்தை காரணம் பேதக்
கெவ்வண மெனவருள் புரிந்தாய்,
நலகழ நியின னடமிடும் வாளை
நத்தினம் பகடுசென் றுழற்ற,
விலகிடும் வளப்ப நிறைதரு கழநி
வீரஞா நேசதே சிகனே. 76

வித்தையின் மையினை யவித்தைய தெனவே
விளம்புவ ரின்மையா மதினின்,
றித்தகை யுலக மெவ்வணந் தோற்று
மென்றெனக் கதன்வடி வருளுந்,
சுத்தமெய்த் தவநின் றிருவடி நிழலைத்
தொடர்ந்தநு தினமுற வருளாய்,
வித்துவன் மணிகள் போற்றிடுங் கழநி
வீரஞா நேசதே சிகனே. 77

ஆதியி லவித்தை யழிவினை யெவண
மையவுற் றிடுமென வினவ,
வாதியின் முனமில் லாமையு மழியு
மங்ஙன மறியென வறைந்தாய்,

தூதளி யெகினப் பெடையினுக் குணர்த்தித்
துயரினை யகற்றுதல் காணு,
வேதியர் மகிழுஞ் சமிவக முநிவ
வீரஞா நேசதே சிகனே. 78

ஒட்டறு மகண்ட வடிவுறு விருத்தி
யுடலினுள் வெளியிலோ வுதயப்,
பட்டெழு மெனிலிவ் வகண்டமா விருத்தி
படர்ந்தெழும் போதுகேள் குமர,
விட்டவிவ் வெவையு மின்றெனில் வினவ
லெவ்வண மென்றருள் புரிந்தாய்,
விட்டலற் பணியு மெய்த்தவர் வழுத்தும்
வீரஞா நேசதே சிகனே. 79

முற்றறி வகமென் றுற்றபின் னேக்கின்
முத்திடும் வாதமே முதலாங்,
குற்றமுஞ் சுகத்தி னுருவதே யாகிக்
குளிர்ந்துளஞ் சாந்தியா மெனவே,
கற்றவர் புகழு நற்றவ முநிவ
கடையனுக் கருள்புரிந் தனைநீ,
வெற்றிலை யயி லும் பற்றிலர் வணங்கும்
வீரஞா நேசதே சிகனே. 80

தனக்குமெய்ப் பிரமம் வீடயமா யிராமற்
ருனதன் சான்றதா யிராமத்,
றனிற்பிறி தறத்தா ஞகவப் பரத்தை
யறிந்தவன் ருனறிந் தவனு,
மெனப்புகன் றெனையே யெனக்கருள் புரிந்தா
யென்றும்யா னினதடி மறவேன்,
வினைப்பகை கடந்தோர் தமக்கரு ளிறையே
வீரஞா நேசதே சிகனே. 81






சுட்டுவான் சுட்டல் சுட்டுடன் மூன்றுந்
துதைந்திடா திருந்தபே ரொளியை,
விட்டிடா தரிச மகமெ னினைக்கில்
வீடுளங் கரவிளங் கனியாந்,
துட்டமாந் துயர மகன்றிடு மெனவே
சொல்லிய கருணையைத் துதிப்பேன்,
வெட்டமா வெளியென் னறிவுரு வான
வீரஞா நேசதே சிகனே. 82

அல்லலென் பிணியை யகற்றரு மருந்தை
யகத்தினு ளமர்ந்திடுந் தாயை,
சொல்லருஞ் சுடரை யகத்தினும் புறத்துஞ்
சுகந்தருந் துரியவாழ் வதனை,
பல்லுருப் படைத்தும் படைத்திடா வறிவைப்
பரையினை யறியெனப் பகர்ந்தாய்,
வில்லுமிழ் மணிக டிரையெறி நதிய
வீரஞா நேசதே சிகனே. 83

செப்பருங் கருணைக் குருபரம் பரையிற்
செயலிலா திருந்தயோ கிகடா,
மெப்படி யிருப்ப ரென்றுயான் வினவ
விருந்தவா றிருப்பரென் றுரைத்தா,
யப்பொருண் மநதிற் கொண்டன னெனினு
மையநின் னருடரல் வேண்டும்,
வெற்பினைத் துளைத்த வேலவன் றமய
வீரஞா நேசதே சிகனே. 84

பிணப்பெரு மதியை யென்றொழித் தரிய
பேரின்ப சாகரத் தாடே,
கணப்பொழு தெனினுங் குடைந்திட ரனைத்துங்
காற்றினி லிலவென விடுப்பேன்,

மணப்பறை யொலியு மதுநதி யொலியு
மறையறை யொலியுமே யோங்கி,
விணிற்பொலி வளப்ப நிறைதிருக் கழநி
வீரஞா நேசதே சிகனே.

85

அளவற விரிந்த பாவனை நூக்க
வையகோ சமர்த்திலே யின்னுங்,
களவுறு மிவற்றைக் கற்பனை புரிந்து
கடையனே னிடருற றதமோ,
வுளமறு முநிவ ருறைதிருக் கழநி
யுயர்நக ருறையுமா தவனே,
விளிவறு மமல வறிவுரு வான
வீரஞா நேசதே சிகனே.

86

ஒலியொடு விடய வநுவித்த மான
வுயர்தரு மறுவகை தமையும்,
பலமுயல் வொடுநீ பழகென லன்றிப்
பயன்கரம் வரும்வரை யருள்வாய்,
மலைவறக் கமல மலரென்வண் டினங்கண்
மனுங்கரு விழியினர் குடையும்,
விலையறு நறவ முறைநதிக் கிறைவ
வீரஞா நேசதே சிகனே.

87

எண்ணிலா விதமென் பவையையு மிதயத்
தெழுந்திடு மகமெனு மிதையு,
மண்ணலா யிருந்திங் கறிபவ னுயு
மலமர லெவனென வருளுந்.
தண்ணுலாங் கருணை கனவினு மறத்த
றகுங்கொலோ தளிர்நிறைந் தோங்கி,
விண்ணுலாம் வநிக ணிறைவந முநிவ
வீரஞா நேசதே சிகனே.

88



செந்துகி லுடுத்துத் திரிவதே யல்லாற்
செறிதுற வொழுக்கினுற் சிறந்தே.
யந்தணின் சமாதி யடைந்துனை யகமென்
றறிந்தருந் துயரொழிந் திலனே,
மைந்தர்க ளிருப்ப மன்மண வாளன்
மனையினி லிருப்பமா தேவி,
வெந்தணல் வெயிலிற் சாலிகார் நகர
வீரஞா நேசதே சிகனே.

89

உன்றனி லெழுந்த வறிவறி யாமை
யுன்றனு லிலங்கிட லாமற்,
றுன்றினி லெழுந்த தொன்றினி லிலங்கா
துண்மையீ தென்றருள் புரிந்தாய்,
கன்றினை யெடுத்து விளவினை யெறிந்த
கண்ணனை யுருவினிற் கடந்தே,
வென்றன நடையைப் பிடிசெலும் வநவ
வீரஞா நேசதே சிகனே.

90

பொருளொரு சிறிது மில்லையே யெனினும்
பொய்யினும் பொய்யதா மனந்தான்,
மருளினைப் புரியு மென்னினு நினது
மலரடி மறப்பிலா திருப்பிற்,
றெருள்கொடங் கதனைச் செயம்புரிந் திடுவன்
றெருளுற வருணனி புரிவாய்,
வெருளறத் தவத்தைத் தவர்முயல் வநவ
வீரஞா நேசதே சிகனே.

91

நாயினேன் றனையும் பொருளென நாடி
நயந்தருள் புரிந்துமுன் றொடர்ந்த,
தீயெலாந் தவிர்த்துத் திருக்குரு வாக்கித்
திருவடி நிழலிலே வைத்தாய்,

மாயையார் மயக்க மிறந்தவ ரிருந்தே
மகிழருந் தவஞ்செய வவர்மால்,
வீயுமா றருளுங் கருணையங் கடலே
வீரஞா நேசதே சிகனே. 92

மண்பய மநல மநிலமே வளிகம்
மானனன் மதிரவி யுருவாய்த்,
திண்பட விருக்கு நினக்கொரு பயமுந்
திகழ்ந்திடா தெனவருள் புரிந்தா,
யுண்பவர் தமக்கு முணவிடு பவர்க்கு
முயரகத் தியனுரை தரல்போல்.
விண்பயந் திடுஞ்சீர் வல்லப விறைவ
வீரஞா நேசதே சிகனே. 93

இல்லையென் றுனினு மிவ்வுரு நாம
மிலங்குவ தென்கொலோ வறியேன்,
கல்லையுங் கரைக்கும் வல்லப முடைய
கருணையங் குன்றமே கழலாய்,
தொல்லைநற் சுரரின் றுயர்தொலைத் தருளுந்
தோகையின் ருேன்றலை வலத்தால்,
வெல்லுறு மரிய கரிமுக னுருவ
வீரஞா நேசதே சிகனே 94

வாசனை வயத்த னுகியென் னுருவின்
வளந்தனை யுளந்தனி னுணரே,
னேசமு முனது திருவடி தனக்கு
நின்மல சிறிதிலே னருளா,
யீசனு மரியும் பிரமனு மாகு
மிறைவநற் சோலையு ணிறைபூ,
வீசுறு சுகந்தஞ் சுரர்கொளுங் கழநி
வீரஞா நேசதே சிகனே. 95



விடலருங் கொடிய வாதனை விடுத்து
வெண்மையு மின்மையாய்க் கணித்தே,
யுடலினை யகமென் றிடலினை யொழித்து
வுன்னுரு வுன்னுமா றருளாய்,
மடலவிழ் மரையி லெகின்வதிந் திடுதன்
மலர்மிசை கலைமக டவமார்,
விடுமொளி நறவத் தடம்பொலி கழநி
வீரஞா நேசதே சிகனே. 96

என்னிடத் துலகம் யாவையுந் தோன்ற
விங்கிவற் றினிலுட னுனென்,
றுன்னிடல் மிகவும் வெண்மையே யெனினு
முனதடி மறவிலேன் கண்டாய்,
மின்னலை நிகர்த்த வாளைமீக் கிளம்பி
மிகுதெனங் கனிவிடுத் துடுவை,
வென்னிடும் வளங்க ணிறைதிருக் கழநி
வீரஞா நேசதே சிகனே. 97

அண்டமோ ரணுமற் றணுவண்ட மாக
வதிமகத் ததிகசுக் குமமாய்க்,
கண்டுளங் களித்துக் களங்கமற் றிருக்கக்
கடையனுக் கென்றருள் புரிவாய்,
விண்டவ ருடைய தெனவிழை வொழிந்து
வியனய னுலகம்புற் றுரும்பாய்,
விண்டவர் வணங்கும் விண்டரு மருக
வீரஞா நேசதே சிகனே. 98

யாவையும் பெற்றே னென்னினு மிலங்கும்
யாவினு நிறையுமி வுருவாங்,
தேவநின் சுமல மலரடி திநமுந்
திகழென திதயமீ துறவே,

யோவவில் லருளே வேண்டுவ னுளத்தை
யொளித்தரு ணிட்டைடையை யடைந்தே,
வீவறுந் தவத்தர் நிறைவநி வாவவ
வீரஞா நேசதே சிகனே. 99

நாற்றிசை புகழு நாரண போற்றி
நன்கருள் பிரமனே போற்றி,
கூற்றினே யுதைத்த தாளனே போற்றி
குவலய காரணி போற்றி,
சாற்றருங் கருணே வேலவ போற்றி
சமிவநங் தனிற்றவ ரோடும்,
வீற்றரு டும்பி முகவனே போற்றி
வீரஞா நேசதே சிகனே. 100

ஸ்ரீ அத்வைதார்த்தப் பிரதீப மென்னும்

ஸ்ரீ வீர சேகர மாலை முற்றிற்று.

---

பநக வெம்பகை யின்பதி காந்தையின் பரம
தந்தையின் பந்தநன் காந்தையைத், தனிகொ ளுங்கள
னின்றந யன்வதன் றவிரு யிர்தரு வன்றுவ சன்சகா.
யனரு மஞ்சுத னின்சுத னின்றுணே யவரி னன்சந
கன்றெழு வன்மனேச், சநகன் மேனித வழ்ந்துவ ளர்ந்
திடுஞ் சாநவீ மநம் வந்தும கிழ்ந்திடே. 1

எவருக் கானீக் கணமுடனே யிமய மலேயின் கனியகியு
மிவரு மிரத மூன்ருகு மினிய மனேயு மகநூலு [றிசைமகனு
மெவர்தம் மாடை யீரறுகண் ணியையும் பெயரன்
மவரை யேநுந் துணேயாக வறிமின் னுலகத் தறிவோரே. 2

சீரார் கசிழத் திருநகரைத் தேவர்புகழ்
பாரார் கயிலேயெனப் பண்ணினுன்—நீராருஞ்
செஞ்சடையை நீத்த சிவஞாந வீரரேசன்,
மஞ்சுபுகழ் கைம்மாம ணி. 3



உ
கணபதி துணே.
சிவ மயம்.

# திரு நெல்லை யந்தாதி.

## விநாயகர் வணக்கம்.

கட்டளைக் கலித் துறை.

சீரச் சடமக தேவருந் தேடுந் தெருட்கரியே
யீரச் சடமுடி யெந்தைநின் ருடொழு தேத்திநின்பாற்
சேரச் சடமக மற்றகண் டாநந்த சேதமாய்
நேரச் சடமறு நெல்லையந் தாதி நிகழ்ந்திடுமே.

## நூல்.

சிதம்பர வாரியு றுந்திருக் காசியைச் சேரினுமென்
சிதம்பர வாசமு தற்பல வாழுமென் சேய்நினதாஞ்
சிதம்பர வாரிய னன்கரு ணிணெறி சேரினல்லார்
சிதம்பர வாழ்வடை யும்பரி சேயிலே சீர்நெல்லையே. 1

நெற்லையென் னேர்திரு நாமந் தனைநித நெஞ்சினுற்றே,
யில்லையென் னுதினி தீவையென் றேநினே யிங்கடைந்தேன்,
கல்லையென் னேர்வறுந் தீயினைத் தீர்த்தினிக் காண்பரிய,
தில்லையென் னேர்தரச் செய்திடப் பேரருட் டேவியம்பே. 2

அம்மஞ் சருகர மாதங்க மீன்ற வரும்பிடியே
யம்மஞ் சருகுனேத் தீவநத் தேயக மாயடைவான்
கம்மஞ் சருகுண வாகியுன் ருடொழு கக்கடவேன்
பொம்மஞ் சருகலே யேகவெற் பார்த்துப்பு ரந்தருளே. 3

அருளட்ட மூர்த்தியு மாயநின் ருட்சில ரானநல்லார்,
பொருளட்ட மாநிதி யீயெனப் பேணிப்பு கழுகிற்பார்,
தெருளட்ட மாகுணத் தேனையும் யானெனத் தேறுகிற்பா,
னிருளட்ட மேயெனக் கிதியென் பேனின்ன தின்னருளே. 4

இன்னம் பயிலன நாணவைப் பார்க்குள மேங்க
லல்லா, னின்னம் பயிலன நாரசச் சேவடி நேருகில்லே,
னென்னம் பயிலன னேகநல் லோருற வென்ன செய்
வேன், மன்னம் பயிலனல் மேகொண்டெ னீள்பவ
மாய்ப்பதென்றே. 5

என்றுன் படிதலை யின்றியொன் ருயெனை யேங்க
வைக்கும், பொன்றுன் படியிக ழுந்தவத் தோர்புகழ் பூன்ற
வொன்ரு, நன்றுன் படிவம தாகுமத் யாநத்தை நான
டைவா, னென்றுன் படிதொழு தேத்துமின் சீரடி
யெண்ணுவனே. 6

எண்ணும் பரம்பர வின்புமென் றேவெனு மின்ப
மன்றே, நண்ணும் பரம்பருஞ் சாலியைக் காத்தநென்
னுயகியைக், கண்ணும் பரம்பரைக் காதியைத் தேடிடக்
காரைசெல்ல, வெண்ணும் பரம்பரைச் சோதியைப்
போற்றுவ னென்றுகண்டே. 7

கண்டங் கரியவர்க் கக்கரு ணுயுனைக் கண்டதொண்ட,
ருண்டங் கரியவ ரிங்குமுத் தீசரென் றேதிடுவர், பண்டங்
கரியவர் நேடியும் பார்க்கப்ப டாதவராங், கண்டங் கரிய
வர் போற்றுமெந் தாயெனுங் கார்நெலம்மே. 8

அம்மா தவத்தைய மின்றிநின் ருர்க்கன்பை யாற்று
கில்லா, திம்மா தவத்தைய கோமன்னி யேயுழன் றின்ன
லுற்றுப், பொம்மா தவத்தைதம் முட்சித்த நித்தமிப் பொங்
கருள்ளே, சும்மா தவத்தைநன் றென்றுளுற் ருநிற்பல்
சோதியுற்றே. 9



உற்றவ ருக்கரு ளும்பரஞ் சோதியென் றென்ற
மன்ரு, டுற்றவ ருக்கரு வைத்தருந் தேவருக் கோது
செங்கே, முற்றவ ருக்கருங் காரனற் ருயுமை யுன்பதப்
போ. துற்றவ ருக்கரு ரைப்பதைக் கேட்டிங்கு வக்க
வையே. 10

உவக்குமந் தாகிநி நின்னருட் சீர்த்திகண் டுள்ளமஞ்
சத். திவக்குமந் தாரைதந் தோங்கிடுஞ் சோலையுட் சென்று
நன்று, சிவக்குமந் தாளெனிச் சென்னியிற் சேர்க்குமத்
திங்களுண்டோ, பவக்குமந் தாகிநற் றீவநத் தேவளர்
பண்ணவியே. 11

பண்ணவ மாகநி னைத்திநம் பாடவின் பாலளித்த
தண்ணவ மாகரு ணைக்கிணை யேயிலித் தாரணியி
லெண்ணவ மாகத்தி னுந்திநந் தேடினு மில்லையில்லைத்
திண்ணவ மாகழ நிக்கிறை வீயெங்கள் செல்வமுத்தே.

முத்தேவ ருந்திநந் தோத்திரம் பாடியெம் மூலமென்
னுஞ், சித்தேவ ருந்தினன் ருதுகுஞ் சேவடி சேர்ப்ப
தென்றே, சத்தேவ ருந்தினன் ருயாச்ச கத்தினைத் தந்த
நல்ல, வத்தேவ ருந்திநஞ் செய்வனைக் கான்றொளிர்
வந்நியன்னே. 13

வநிவநம் பூவளி கம்மிய மாநன் மதியிரவி, வநிவநம்
போலவ ளென்றுநன் ஞன்மறை வாழ்த்துநன்ற, வநிவநம்
போகம தேகவத் தேவியை வாய்ப்பவுன்னி, வநிவநம்
போய்த்தவ மாற்றுவம் வாருநன் மாதவரே. 14

மாதவத் தேவந்து தித்திடுங் கீர்த்தி மரகதத்தை,
யோதவத் தேவருங் காணுகில் லோமென்னு முண்மை
தன்னைக், காதவத் தேயருட் டேசிகன் கூறுங்க திவழித்
தாய்த், தீதவத் தேசெலுந் தீயனுஞ் சேரத்தி கழ்ந்ததின்றே.

இன்றென்றல் வீசுறுந் தீவநத் தேயுநெல் லிசியெற்கே. நின்றென்ற னுடுறும் போதினற் றிதினு நெஞ்சகத்தே, நன்றென்ற லாதியிங் நாமத்தி னேடுறு நாட்டமற்றிங், கென்றென்ற லாதிகட் கேகசித் தாவனிங் கேதமற்றே. 16

ஏதமற் ருலுல கைப்படைத் தாயுனே யென் றுமின்பா, லேதமற் ருவறத் தோத்திரம் பாடவெற் கேயருள்வாய், சீதமற் ருதபத் தேசுமற் றேதவஞ் சேர்ந்திடுங்குன், ருதமற் ருரொடுங் கூடவைத் தேயென்னே யாண்டவன்னே. 17

ஆண்டவ ரென்புத் திரரிரண் டேயுனக் கன்றியம்மே, யாண்டவ ரென்புத் திரருமுண் டாலங் கவர்பதத்தைப், பூண்டவர் தம்பதம் பூண்டவர் தொண்டனும் போற்று கின்றேன், ருண்டவர் பங்குறுந் தாயே யுனதரு டாவெ னக்கே. 18

எனக்கு மணியணி தேவனேக் கூடியிங் கின்றதென்றே, கனக்கு மணியணி மாதநென் னுயகி காயுகில்லேன், சினக்கு மணியணி யாலயஞ் சேவிக்கச் சென்ற வென்றன், மனக்கு மணியணி யுன்பாதம் வந்து மருவுறினே. 19

மருவத் திநமந மங்கையர் கொங்கையை மாயுமன்றி யருவத் தினமந மென்னவுண் ணேனந்த வந்தவங்தோ வெருவத் தினமந மென்றதட் டாமுனம் வீசுமுன்ற னுருவத் தினமந மன்னவன் னேயென்னே யூன றவுன்னே.

ஊன்றற் கருகரி யாகியெல் லாவுல குக்குரியாய் தோன்றற் கருநம வாகநச் சூரனேத் தூளெழுப்ப லேன்றற் கரிசெயனு மென்னிருட் பாலிலென் றேவினவின் வான்றற் குறுதுய ரீருமம் மேயென் வழங்குவையே. 21

வழங்குகென் ருலெனக் காரருட் சீர்த்தி வழங்க லெங் ஙன், றழங்குமின் ருளிணேத் தாமரைப் போதினேத் தாளுகில்



லேன், கிழங்குதின் ருயினும் மாதவந் தேர்ந்து கிடக்கில் லேன், முழங்குமன் ருடுநந் தேவனுக் கேற்றநன் முக்கணியே. 22

முக்கண் டவன்முர ணுசக னுன்முக மூலமென்னு மக்கண் டவறற யானறிந் தேயுனே யம்மகமாய் நெக்கண் டவமுய லாதிருந் தேன்றிரு நெல்லெனம்மே திக்கண் டவரிசை சேரவன் ரேபவஞ் சென்றதுவே. 23

அதுவண்ட மெண்டிக்கு மேவியிங் காமங்க மாவதற் காய், மதுவண்ட மண்டுன்பு தீர்தடக் தேயுள்ள மாசதற்று, முதுவண்ட வந்தனேத் தேற்றுகில் லேன்முத்தி மோகமுற் றேன், புதுவண்ட மர்ந்தபைந் தாரணிந் தோங்குநெற் போதவன்னே. 24

போதந் தருதிரு நெல்லையம் பாள்பதம் போற்று மின் காண், மாதந் தருதிரு தநீதுவந் தாளுவண் மாநிலத்தீர், மாதந் தருதிரு பாவதித் தாய்மன்னு மாதவத்தாற், றீதந் தருதிரு மாறுசெய் வாளருட் சிந்துவன்ரே 25

சிந்துவந் தாரையுங் காதிட்ட திவிடந் தின்றுளங்க, சிந்துவந் தாரையுங் காந்தளின் சீர்கரஞ் சேர்த்தி முத்தஞ், சிந்துவந் தாரையுங் காங்கயன் சீர்த்தியுஞ் செப்பிநிற்பல, சிந்துவந் தாரையுங் காதலிப் பாயருட் சீர்நெலம்மே. 26

மேம்பட் டவர்புகழ் வீரநற் சேகரன் மென்மலர்த் தா, னேம்பட் டவர்கழ லேதொழு வானரு ளேக்கு ஞற்றத், தேம்பட் டவரனு னக்களித் தேதுயர் தீர்கவென் னச், சேம்பட் டவருண வீயுமன் னேபதஞ் சேர்ந்தனனே.

தனதத்த தானவைங் கோசங்க ணிங்கிநற் ருரகமாந், தினதத்த தானவின் சோதியைத் தானெனச் சேர்ந்து மெல்ல, மனதத்த தானதன் னுநந்த மோநத்தின் மன் னிற்பா, னுனதத்த தானநெற் ருயெனக் கேயன்றி யுண்டு கொல்லோ. 28

உண்டண்டம் யாவினு முட்புறம் பேசிறைந் தோங்கு மொன்று, கண்டண்டர் போற்றிடக் கூவினில் யாவருங் கண்களிப்ப. வண்டண்ட கோதினம் பாடிடுஞ் சீர்த்தநல் வல்லபத்தே, திண்டண்ட ராசின்ற கோவிலுட் டாயெனச் சேர்ந்ததன்றே. 29

சேருஞ் சிறப்பொடுங் கல்வியு ஞானஞ்சி றந்தவன் பாற், றேருஞ் சிறப்புறுஞ் செஞ்சடைத் தேவனுந் தேடுகின்ற, வாருஞ் சிறப்பறச் சாலியம் பாள்பதக் கன்புமிக்காற். சாருஞ் சிறப்புறும் வேலையுற் ருழ்தலுஞ் சார்தலின்றே. 30

இன்றேயெ னக்கரு ளீதியென் றேருதுவ னின்னெலன்னே, மன்றேயெ னக்கும தியெனத் தேய்ந்திடை வாடநல்குங், குன்றேயெ னக்குய மும்மையம் மேயிக்கு வலயத்தே, நன்றேயெ னக்குணம் யாவையுந் தியனு நண்ணுதற்கே. 31

நண்ணும் பரம்பொரு ளென்றெனக் கேஎல்கு நாயகிநீ, யெண்ணும் பரம்பொரு வேல்விடந் தியெம னென்னமன்னுங், கண்ணும் பரம்பொருப் பன்னவன் வார்முலைக் கட்டுமட்டும், பண்ணும் பரம்பொருந் தீதின்றி யேபன்னு பார்ப்பதியே. 32

பதிதந்த தாமுக மாமறைக் கோடியிற் பார்க்கிலொன்றே, விதிதந்த தாயிட வீரநற் சேகர வித்தகத்தோன், புதிதந்த தாமரைப் போதினைப் போற்றிப்பு கழுகிற்பான், றதிதந்த தாயன முண்ணுமன் னேபுந்தி தாதருக்கே. 33

தருதியம் பாசின்ப தாம்புய மாமலர் தந்துவிட்டாற், சுருதியம் பாவந்து நாவினிற் றேன்றிடுந் தோன்றிவிட்டால், விருதியம் பாசிற்ப னின்பெருங் கீர்த்தியை வீறியம்பிற், பொருதியம் பான்மன மதன்றருந் தியதும் போகுமன்றே. 34



ஏசும்ப ராதியைக் காதுசின் கீர்த்தியை யின்னெலன்னே, பேசும்ப ராமுக னுயினும் பேரருட் பேணுவன் யான். வீசும்ப ராசக்தி வீரநற் சேகரன் வேண்டுகின்ற, தூசும்ப ராதியர்க் கெட்டாத தென்சிரந் தோய்தலுண்டோ.

தோயத்து வந்துவந் தித்துநைந் தேத்திடுந் தூயசின்ற, னேயத்து வந்துவந் தத்தென்னு நீண்மறை நேர்சொலிற் போற், றேயத்து வந்துவந் த்யாசித்து த்யாசித்துத் தேனெலள்னே. காயத்து வந்துவந் தொன்றிடுந் தீதினைக் காதலென்றே. 36

காதனத் தாநங் கதிர்த்திடுஞ் சீர்வஞ்சிக் காநகக்கே, காதனந் தாதுனிச் சேருமின் கார்வயற் காத்தவன்னே, யோதநந் தாநமக் கட்செல்வம் யாவையு மோங்கவைப்பாள், சேதநந் தானென்னு மாதவர்க் கேற்றவின் செல்வியின்றே. 37

செல்வந் தலைதடு மாறுமென் றேயருந் தேவிநின்னைச்
செல்வந் தலைசமி தாவமன் மாதவர் செல்வமென்ப
ரல்வந் தலையல னையவைம் பாற்சுமை யம்மவஞ்சி
வில்வந் தலைமிலைச் சும்பரன் போற்றிடும் வேதமின்னே. 38

வேதந் தருமரும் வாயா யநுதிநம் வேண்டுகின்றேன்
மாதந் தருமர னுரா யணனுடன் மாதவரு
மோதந் தருமது பாதாம் புயமல ருன்னிமன்னத்
தாதந் தருமம தேகா தொழுகுதல் சாரவெற்கே. 39

சாரங்க மங்க மடையா துலகினிற் சஞ்சரித்தே
னுரங்க மங்க வரிவையர்த் தேடிய லறுகின்றேன்
சீரங்க மங்க மதுவாகி நின்றுந் தெளியுகில்லேன்
சீரங்க மங்க ளநுதங்கை யேபதஞ் சேர்தலென்றே. 40

சேரஞ்சு கஞ்சுவைத் தாடிடக் கேட்டுச்சி ரஞ்சலிப் போய், காரஞ்சு கஞ்சுகத் தோலுடைத் தேவனைக் காத லிப்போய், நேரஞ்சு கஞ்செயச் செய்திடு நீதியென் னீதியென்னே, யோரஞ்சு கஞ்சநல் லத்தனன் னேயிங்ங ஞேதெனக்கே. 41

ஓதங்க யற்கணு யர்பிடி வேடமி ஞெண்ணிறைக்கு
மாதங்க யற்கும ருளல்கொல் லோதயை மாசனுக்குத்
தீதங்க யற்கண கலவைத் தேவரு டேனெலன்னே
மீதங்க யற்கொர்சி ரமொழித் தான்பணி மேகமின்னே 42

மேகம் படிதரு பொங்கருட் சேர்ந்திட்ட மெய்த்தவர்க ளேகம் படியென வெற்கிசைத் தாரதை யேகவிட்டே மோகம் படிமிசை யுற்றுழன் றேன்முத்தி மோதமுண்டோ மாகம் படியெழு நாவநத் தேமன்னு மாமணியே. 43

மாமுக னுக்கருந் தங்கையு மாகியம் மாசிலைவம்
மாமுக னுக்குயிர் நாயகி யாகியு மாவலற்கு
மாமுக னுக்கெழி வம்மையு மாயவிம் மாசொரூவம்
மாமுக னுக்குற வாவதென் னேதிரு வாய்மலரே. 44

மலருங் கமலமு மங்கைய ரங்கையும் வாதுசெய்யு
மலருங் குழலொடு பாசியுந் தேனுறு மந்தடத்தே
பலருங் குறையற வேய்நெல்லை நாயகி பாதரித்த
முலருங் கடுவினை யாதலி ஞேதுமி ஞேர்ந்துணர்ந்தே. 45

உணரவ ரும்பொருள் யாவையு முள்ளத்து தித்ததென்றே
தணரவ ரும்பரந் தானுகி நின்று தவமியற்ற
வணரவ ருந்தலை மாலையற் காய்வயல் வாங்கியன்று
கொணரவ ருந்திய தாயே யருளைக்கொ டுவெனக்கே. 46



கொடுமன வன்பிணி யைக்கடந் தோர்வந்து கோதறமே, விடுமன வன்புக ழும்பதத் தோய்பதம் வேண்டினனீ, யிடுமன வன்புமிக் காருக்கு மேர்பய னேற்பவர்க்கும், வடுமன வன்புரி யாருக்கு மீந்தருள் வாமமின்னே. 47

வாமஞ்ச ரிதிரு நெற்றங்கை யேதிநம் வந்துவந்துன்
ருமஞ்ச ரிதர வெற்களிப் பான்றபை தானியற்ருய்
பூமஞ்ச ரியெரி யுற்றெனப் பூவையர் போகமுற்றே
யேமஞ்ச ரியெனை யாளலன் ரேவளிக் கேற்றதம்மே. 48

ஏற்றங் கொடியுடை நாதனைப் பாதியி லேற்ற நெல்லாய், காற்றங் கொடியிடை நாரியர்க் கூடிடக் காத லித்தேன், கூற்றங் கொடியிட லாமுன்ன மேனுமுன் கோமளத்தாள், போற்றங் கொடியிடு நாரெனச் சார்ந் தகம் போக்கலென்றே. 49

போக்கு வரவறு பூரண வுன்னைநற் புந்தியுள்ளே
யாக்கு வரவரை யஞ்சலென் றேயரு ளங்நெலன்னே
நோக்கு வரவழி வேயக மாயுற நோக்குதற்காய்
நீக்கு வரவரி நீள்விழி யீமய னின்மலியே. 50

மலிதந்த செல்வநற் சீர்வல்ல பத்தினின் மன் னெலன்னே. பொலிதந்த மொன்றுடைத் தேவனைப் போற் றிடப் புந்திதந்தா, ளலிதந்த ருன்பதங் குஞ்சியிற் கொஞ்ச வெற் காக்கலென்ரே, பலிதந்த வந்தரும் பாடலன் ருதலிற் பாலிநன்றே. 51

பாலிக்கு மண்ணலின் றங்கையென் ருயினும் பா னிறக்க, பாலிக்கு மண்டலிக் கங்கணர்க் கன்புற்ற பாட்டி பிட்டுக், கூலிக்கு மண்சுமந் தாருக்கு மாலையைக் கூட்டி யன்ரே, சேலிக்கு மண்டிடுஞ் செய்யினைக் காத்திடச் சென்றதன்றே. 52

சென்றுஞ் சிறுமியர் மாயைதன் னூடனந் தேடி
னைந்தும், பொன்றுஞ் சிறையுறு மென்மனந் தீதிது போத
முற்று, நன்றுஞ் சிறையளி பாடிடும் பாதத்தை நண்ண
வெண்ணி, யென்றுஞ் சிடவரு ளெற்களிப் பாயெங்க
ளேர்நெலம்மே.
53

ஏரந் தகனென யானிருந் தேயுமிங் கேநரர்க்கே [காய்க்
யோரந் தகனவின் யோகொன்றை யோதுவ னேதனக்
காரந் தகனனை யாவருந் தேடிடுங் கற்பகத்தைத்
தாரந் தகனல வாலிங்க னம்புரி தாயருளே. 54

அருளுங் குருபரம் போதினுக் காளென்ன வாடலல்லாற்
றெருளுங் குருபரம் பத்தியுந் தீநனுந் தேடுகில்லே
னுருளுங் குருபரம் பைத்தடம் பாம்பிறும் பும்மருட்டு
மிருளுங் குருபரம் பற்றிட னுயினுக் கென்றுகொல்லோ.

கொல்லமர் வந்துறி னுங்கலங் காதவக் கோவசியை
நல்லம யத்தினி லேயொழித் தோன்றிரு நாயகியைப்
புல்லம னைப்பொரு மைந்தனை யீந்தவிப் பொற்கொடியை
யல்லம ரும்படி பாடுமி னேடுமி னுரியரே. 56

ஆரிய மாமதி யார்தமி ழாமணி யாதியுமாம்
வீரிய மாமதி யாமுழ னேயறும் வீரிநெல்லை
சீரிய மாமதி தீரவி நோக்கெனச் சேகரித்த
காரிய மாமதி தேனளி மாநகர் காணுமினே. 57

மின்னே யனையநின் மேனியின் மேலிரு மேருவந்தே,
யென்னே யிருந்த தெனவிறை யேசவு மின்புறுசி, ரன்னே
யுனதிரு பாதங்கள் பாடிமிக் கன்புசெய்யேன், கொன்னே
கழிந்தது காலமிக் கோலமென் கோநெல்லையே. 58



கோகந கத்துறை செல்விய ரேத்துநெற் கோமளமே
பாகன கத்திய பத்திய மீதவர் பாலினிற்பக்
கோகந கத்தென பாடலு நீசெவி கோடனன்றே
யேகன கத்திறை வீமக லைத்தமி ழின்பமன்றோ 59

இன்பம் புலினுனி நீரெனத் தேரினு மிங்கிவற்றிற்
றுன்பம் பினுகினு மேமநந் தூசுறு துத்தமெத்து
மென்பம் பினினனி தேனென நாடலி லேங்குமம்மே
பொன்பம் புரையறு பாதம தோதிமைப் போழ்தலென்றே.

போழும வித்தையைப் போழ்ந்தெறிந் தேசுத போத
நர்க, ளாழும வித்தையை நன்கடைந் தேதுய ரச்சமற்று,
ரேழும வித்தையை யேபொய்யை யேயுன்னி யேக்கமுற்
றேன், பாழும வித்தையைந் தீரைந்து மேகநிற் பற்ற
வுன்னே 61

பற்றற் றவர்பணி யும்பரை யேயுனைப் பற்றிசிற்றல்
வற்றற் றவமுபல் காயமைங் கோசத்தை வாரியெற்றல்
கற்றற் றவர ற நூறம்மை யேயன்றிக் கார்நெலம்மே
மற்றற் றவறினை மாற்றிவைப் பாயிந்த மாசனுக்கே. 62

மாசுட லந்தெரி யாவண மாசுச மாதிமன்னி,
யாசுட லந்தனி னின்பினைச் சார்ந்தன ராசதற்றே.
ராசுட லந்தனி னென்பெருந் தீமன மந்நெலன்னே,
தேசுட லந்தனி யின்பசிந் தாடநிற் றேடலென்றே. 63

தேடத் திரிதரு மைந்தனன் றேதலைத் தேருகில்லா,
தோடத் திரிதரு வென்னநின் றேயுருத் தோற்றமித்தைக்,
கூடத் திரிதரு மென்னைநின் னுக்கிடக் கோறவுன்னுந்,
தோடத் திரிதரு ணந்தனைக் கூறுநெற் றாயவன்னே. 64

தூய்மையும் வாய்மையுஞ் சேய்மையெற் காமெனிச்
சொன்னெலன்னே, சேய்மையென் றுயிடச் செய்துவெங்
காதலைச் சேர்சகத்தே. மாய்மையற் றாற்றிவற் றுதசித்
தேவடி வாகியென்றுங், தோய்மையற் றுயருந் தாயுனைப்
பாடலித் தொண்டனென்றே.
65

தொண்ட ரநுதிநங் தோத்தரித் தேத்திடத் தோழ
னுற்ற, கண்ட மனையநற் கோவிலுட் சார்தத்தை கண்டு
சொல்வீ. ரண்ட மளவிடு பைங்தத்தை காளடி யன்குறை
யைத், தெண்ட முறுகுறை தீர்ப்பதன் றேபயன் றீஞ்
சொலுக்கே.
66

கேத மதமனுக் கற்றலொன் றேபயன் கேள்சுகங்காள்
போத மதமனு மின்றவர்க் காநெல்லை பூவினுற்றுன்
மாத மதமனு மன்ருெட்டி டாப் பல மாந்துதற்கோ
சீத மதமனு முங்களுக் கேதருஞ் செல்லுமினே. 67

செல்ல லொடுபிறப் பார்தலைச் சீயெனச் செப்புகிற்
பார், செல்ல லனையசிங் காரவைம் பாலுடைத் தேவிநின்சீர்,
சொல்ல லுறுமரும் பாடலைப் பாடிடத் தோமனுற்று,
லல்ல லதுவல வென்றனக் கேயரு ளங்நெலன்னே. 68

அன்னமன் னுளை யருநெல்லை யீசியை யார்வமிக்கே,
யுன்னமன் னுமன் னுமலியைப் போற்றிரிந் துண்டணைப்பா,
னன்னமன் னுரி யவர்தமைத் தேடிவெட் கற்றலைந்தாய்,
கொன்னமன் னுடி லெதுசெய்வை யோவுளக் கோகிலமே.

கோகில மேககண் ணுரைவிட் டேகலிற் கூட்டினின்று
மாகில மாயைதற் காரியத் தேயிருந் தஞ்சியஞ்சி
மாகில மாகிநின் றுற்றுகில் லேமினி மாசதில்லாப்
பாகில மேதரு வானெல்லை யாள்பதம் பாடுவமே. 70



பாடுவர் சிங்கள நீலியை மீயிடைப் பாவைதன்னை
வேடுவர் சிங்கரி மாமியை நெல்லையை வேதவைப்பை
யீடுவர் சிங்கநல் வாகசி யாகிய வீசிதன்னைத்
தேடுவர் சிங்கலி லாதவர் யாமினந் தேடிலமே. 71

இலமே யிருந்தறஞ் செய்யுகில் லேன்றுற வேய்ந்து
மிக்க. நலமே புரிந்தில னல்லது வல்லலின் ஞாநியல்லேன்,
மலமே யுறைதரு மாகத்தை யானென்ன மாயுகிற்பே,
னெலமே தயையொடு மாரமு தீதியிங் நீசனுக்கே. 72

நீசம டந்தைய ராசையற் றேதிரு நெல்லெனம்மே
கோசம டந்தவி ரக்கொற்ற வாளிறை கோவினல்லூர்
வாசம டந்தனி லுற்றவின் வீரவண் மாதவர்க்கே
நேசம டந்துநி தந்தொண்டு யான்செய்ய நேரவையே. 73

நேரங் கடத்தி யிடலென்கொ லோவரு ணெல்லெனம்மே
காரங் கடத்தி னுலவுநற் சீர்வன்னிக் கான்மயிலே
பாரங் கடத்தி லகமென்ன னீக்கிப் பரம்பரமா
யாரங் கடத்தி னிடமதற் றுலென்ன வாக்குதற்கே. 74

ஆக்கற் கரிதுகொ லென்னையு நின்னுரு வங்நெலன்னே
வீக்கற் கரியென வாகத்தை யான்கண்டு வீடுதற்குப்
போக்கற் கரியெனு மாயையின் மாதுயர் போக்குதற்கு
மாக்கற் கரியுண விக்களித் தோன்மனை மாறங்கையே. 75

தங்க விலங்கலை யங்கரங் தாங்கிய தாணுதன்னி
னங்க விலங்கலை யாதுறு சாலிநல் லாரமுதே
பங்க விலங்கலை யொத்தெளி யேன்படும் பாடறிவாய்
பங்க விலங்கலை யேலலொப் பாயெனைப் பண்ணலென்றே

பண்ணப்ப டாநெற்ப ரஞ்சுட ரேதிநம் பாடிநைந்தே,
கண்ணப்ப தாறென நின்றுன்னை நாயனுங் கண்டுகொள்ள,

விண்ணப்ப மானதிங் கொன்றுண் டுனதிடம் வேண்டு
கின்ற, கண்ணப்ப ஞுருறு மன்பெனக் கேதந்து காத்
திடலே. 77

காத்தா யரதந மா தென்ன வேசின்று கார்வயற்பாற்
பூத்தா யுலகினை வாள்கள வாணியின் போகமுற்றே
நீத்தா யெனவு முன் றன்னையின் றேசுவன் றீயனைநீ
யேத்தா யெனினுயர் முத்தியி லேமலை யீதிருவே 78

திருவருந் தித்தனி யேதவ மாற்றிடச் செங்கமலந்
தருவருந் திம்மர்க ளாமைவென் னேறியுந் தாண்டுகின்ற
மருவருந் தித்தம துநதிப் பான்முந்தி வந்துதிக்கு
மொருவருந் திக்கினெ லைகர்ப் பாடிட வொண்ணலின்
[றே 79

ஒண்ணக் கமலமி வாவிசி வத்துறு மொப்பினுக்கென்,
றெண்ணக் கமலமு னக்கெனத் தேற்றுவ ரேய்வநத்தே,
யெண்ணக் கமலம தென்னவுற் ருர்க்குற்ற வேர்நெலையாள்,
வண்ணக் கமலம துக்குடித் தாடுமென் வண்டுளமே. 80

வண்டுண் டயர்தரு தேனதிப் பான்மதி மான்வநத்தே,
யண்டுண் டமதுடை யானருந் தாய்நெல்லை யாள்பதத்தின்,
றெுண்டுண் டுயர்பத மீவதற் கேயெனத் தூயவர்க்கு,
டுண்டுண் டுடுடென் வேதங்க ளோதித்து லக்குமன்றே. 81

துலக்கு மரியினைத் தீனெனத் தாவிடுந் தூய்துலத்தே
கலக்கு மரிசெறி தீவநத் தேவந்து கண்டவின்றே
நெலக்கு மரிவள தாமரைப் பாதத்தை நேரிலன்பால்
விலக்கு மரிசனி தந்தெழு நாவினில் வெந்ததென்னே. 82

வெந்தண விற்பல யாகம தாற்றிடும் வீரவண்மை
யந்தணர் வந்தனை செய்பதத் தாய்பத மார்ந்தவெதற்கோ



ரந்தண ரும்பொரு ளீதரி ஞருனை யாவெறுப்பா
ரந்தண ரம்பிர மன்புரி யார்வனிக் காரமுதே. 83

தேனே யனையது நின்றிருச் சீர்த்தியென் றேவிளக்கித்
தானே யனைமது வா றுதிக் கூடுநற் ருவிவிம்மு
மானே யனையினி வேய்தரப் போற்றிடி னஞ்சுகங்கை
மானே யனைவிழி யோதியுன் ருள்வந்து மன்னுமின்றே. 84

மன்னன் றனுவணி சோர்வழித் தாய்மகிழ் மாறனைச்
செம், பொன்னன் றனுவணி நாயகன் போற்பதம் போற்ற
வையா, தின்னன் றனுவணி கோடரிங் காரையிற் கேகி
யில்லீ, கன்னன் றனுவணி னிங்குறச் சேர்த்தெனைக்
காத்தனையே. 85

தனையரு ளற்புத நெற்பரை யேயுனைத் தாழ்ந்துநின்ற
தனையரு ளற்பல மெய்ப்படு மாசது தாவினங்க
தனையறு ளற்பமி தொப்புற ருய்கடன் ருனறிந்தென்
றனையரு ளற்புடன் முப்பொழு தேயுறத் தாயருணீ. 86

நீமுத் தருமுற வேசிகழ்ந் தாய்திரு நெல்லெனம்மே
யாமுத் தனவிரு மைந்தருக் கூட்டிட வாமிரண்டு
மீமுத் தனுமிவ னென்றுல கேத்திட வென்றனுக்கொன்
ரேமுத் தமியுன தாட்பணிந் தேனுள்ள மோடுநின்றே. 87

ஓடரி தங்கம தொப்புறக் காண்கின்ற வொண்ட
வத்தோ, ரூடரி தங்குற ஞயனு மோயென வோவுரைப்பா,
ராடரி தங்குர லார்தடத் தாயரு ளாரழுற்பேர்க், காடரி
தங்கம முங்கிளி யேயளிக் கார்கடலே. 88

காரித் துலைதுடை கிணடைப் பானின்ற காமியனும்
வாரித் துவரித நெல்லையம் மேபதம் வந்தடைந்தேன்
றேரித் துரிசற வாழவைப் பாயெனிற் றேட்டமற்றே
பூரித் துறுபுர ணத்தின்ப மாவனற் போதமுற்றே. 89

போதந் திரமுற வோர்வடி வாகியிப் பூவிலுற்றுத்
தீதந் திரமம தேகருள் வீரநற் சேகரன்பொற்
பாதந் திரணன மாதினய போற்றிடப் பாதிகொற்றன்
மோதந் திரளுற வீயுநெல் லாயருண் மூடனுக்கே. 90

மூடத் தனமற லேற்றுவப் போடமுன் மோசநஞ்செய்,
தாடத் தனமரர் பேணெல்லை நாயகி யார்பதத்தைத்,
தேடத் தனைமனை யாதிய வாவறத் தேடுகில்லாய்,
கூடத் தனமல வீசந தாம்வித்தை கோட.லென்றே 91

கோடந் திடுமுட லைக்குறி யாநின்று கோகநகம்
வாடந் தியினினும் வாடினைந் தேனெனை வாடலென்றே
தாடந் திகழ்தர வென்மனத் தேதந்த சாலிபன்னை
யோடந் திநகர னுன்னுழை யாவந மோதுமினே, 92

ஓதும் பலமிலை யேசிவை யாவையு மோதலற்றே
வாதும் பலமிலை யென்றெழித் தேவந்நி மாவநத்திற் [னென்,
போதும் பலமிலை கொண்டெழுந் தீயினைப் போக்கினன்
மாதும் பலமிலை யீபதக் காந்தவ மன்னவுன்னே, 93

உன்னதி வந்துற வேட்டலொன் றேயன்றி யுற்ற தற்கா,
மன்னதி வந்தில னுவதெவ் வாறினி யாலமுண்டோன்,
மன்னதி வந்தனை செய்பதத் தாய்வந்நி மாவநத்தா,
யென்னதி வந்தரை யாதியி லென்றெண வெற்கருளே. 94

எற்கரு ளெற்கரு ளென்னலல்லா லுன்னை யெண்ணலில்
புற்கரு ணேசமு மற்றெழி யேனிழி போகமென்றுன்,[லேன்,
மற்கரு ஞாளியை யொத்துழல் வேன்வந்நி மாவநத்திற்,
கற்கரு மெய்யறி வைக்கற்று ளார்புகழ் கான்மயிலே. 95

காநகத் தேவருந் தித்தவத் தார்ந்தனற் காதலற்று, [தேன்,
ருனகத் தேவருந் துன்பத்தை யின்பெனிங் கோடினைந்



வாநகத் தேவருந் தேடிநன் றேவரும் வல்லபத்தாய்,
நானகத் தேவருந் திக்கென்ன வாழ்தலு நன்றுகொல்லோ.

கொல்லுங் கொடுவிழி யுங்குன்ற நேர்வருங் கோடனமு,
மல்லும் பகலினு மென்மனத் தேவந்து வந்தவந்தோ,
புல்லும் படுதுயர் சொல்லவற் றேவுனைப் போந்தனன்யான்,
வெல்லும் படியரு ளங்கெலன் னேயுயர் வேதமுற்றே. 97

முற்றுஞ் சமவறி வாமெனிற் போகமு மோகமெங்கே
பெற்றுஞ் சடவுரு மற்றது மிங்கெழ லெங்குறுங்கே
முற்றுஞ் சமுதுறு வாயதி னின்றிட வோமுரைத்தே
யற்றுஞ் சருதுரு மாரியை யீநெலை யாயருளே. 98

ஆயே னருமறை மாமுடி யென்னினு மார்கழற்கே,
நாயே னருகில் லென்னினு மான்மந நாரியர்பா,
லோயே னருவுத லென்னினு முன்மக னேநெலன்னே,
நீயே னருவரல் செய்குவை யோதரு ணின்மலியே. 99

நின்மல நிட்கள நித்திய நிச்சல நெல்லைபொற்று
டன்மல மேயற வேதொழு வாரவர் தாடொழுதாற்
புன்மல மாமுட னுனெனல் போயுயர் போதமுற்றுச்
சின்மல மாரலி லோயலில் சேர்வர்சி தம்பரமே. 100

திருநெல்லை யந்தாதி முற்றுப் பெற்றது.



உ

கணபதி துணை.

சிவ மயம்.

# திருக் கொற்ற வா ளீச ரந்தாதி.



சிற்சொருப மான சிவராச கட்டேசன்
பொற்சொருபம் போற்றிப் புகழவே—தற்சொருப
வானை முகத்தா னரவிந்த மாகதியற்
றேனை யெனக்கின் றினி.

## நூல்.

பூரணனே யின்பப் புராதநனே பொன்னளிசேர்
தாரணனே தந்தாயித் தாரணியின்—காரணனே,
மன்னவா ளீச மகிழ்ந திருநெல்லை
கன்னலே யென்னைமிகக் கா. 1

காரூர் மிடற்றானைக் கண்ணுதலைக் காணுமா
றாரூர்க டோறுநீ யுற்றுழன்றா—யேரூரும்
வந்நி வநத்தை வணங்கிலையா னெஞ்சகமே
யன்னவனைக் காண்பத ரிது. 2

அரிதா யமலமதா யாரறிவா யொன்றா
யுரிதோ லுடையானா மொண்சீர்—விரிதேனா
ராறே டுடையாருக் கன்பியற்று நெஞ்சகமே
மாறே டுடையார்க்கு மற்று. 3

மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க்கு டம்புமி கையென்றிங்—கற்றார்க
ளோதும் பெருமொழியை யுட்கொண்டு வந்நிவநத்
தாதியினை நெஞ்சேய றி. 4



அறிவே யெனதுருவ மாவான டைந்தேன்.
குறியேதோ யானறியேன் கூரோய்—பொறியோடே,
யோட வெனினுள்ள மோயா வளிநிகர்நிற்
கூடவெனி னோவசையாக் குன்று. 5

குன்றாக் குடியர் குறத்தி மணவாளர்
கன்றாப் புதல்வருமக் காமாமா—மென்றாக்கா,
ளீயசியைக் கொண்டுவர னீதியே நீலிமலை
யாய்வயலைக் காப்பதுவு மாம் 6

ஆமோ வலவோவென் றையமுறும் பாடில்லை
காமாரி யாமென்னுங் கட்டேசன்—பூமாதண்
வந்நி வநத்தை வளம்படவே நீயடையி
லுன்னதிநன் குள்ளமே யுண்டு. 7

உண்டோ விலையோதா னொள்ளிடையின் னெல்லைக்கென்,
றுண்டாம் பெரும்பீதி யுற்றோதான்—கொண்டாய்நீ,
நல்ல விடபாந நங்கொற்ற வாளீச
வொல்லையெ னக்கேயு ரை. 8

உரையா யசியுடையா யோகரமோ பாம்பை
யிரையா யரியாவை யேற்குந்—திரையாளு,
நென்மாதுங் காதலரு நீங்கார் முரணென்றோ
சன்மார்க்க சங்கரனா னாய் 9

ஆனா யுலகா யதனுண் ணுழைந்தனைநீ
வானேய் கடத்தின் வளனொப்ப—வேனோதான்,
பேதத்தைப் பேசிப் பிறழ்ந்து திரிகின்றா
ரோதத்தை வாளோயு க. 10

உகத்தொ லொடுமிகத்த லொன்றேனுந் துன்றா
திகத்தி லடிநாயே னின்பே—யகத்துறுமா,
செய்வாய் கழநித் திருநெல்லைக் கின்னமுதே
ஐவாளி ரதத்தா யான். 11

ஆனைமுக னுனையாறுமுக னும்மமானுய்,
வானைமுக னுனைய் வாளீச—வானையுகந்,
தேறினுய் நெல்லைக் கினியதவனுனுய்,
பாறினு யென்னையினிப் பார். 12

பாராதி யெட்டாய்ப் பரந்து விளையாட,
றேரா திருப்பார்க்குத் தெய்வமாய்க்—காரோதி,
னென்னு யகியோடு நீகொற்ற வாளீச,
பொன்னு லயமமர்ந்தாய் போய். 13

போக்கும் வரவும் புணர்வுமிலாப் பூரணத்தைத்,
தேக்குந் திரமநத்துத் தேன்முநிக்குத்—திக்கானிற்,
சாம முடிகாண்பார் சார்வான் வரந்தந்தா.
யேமமுற நின்கருணை யே. 14

ஏதோ வறியே னினிவருவ தெங்காயே,
மாதே சரணுய் மருவினேன்—நீதேதான்,
செய்து திரிகின்றேன் சிந்மயமாய் நின்றில்லே,
னெய்துவதிங் கென்னேயி னி. 15

இனியா யினுநாயே னின்றருளிற் சேர்ந்தாற்,
கனியாதோ நீனுள்ளங் கட்கோய்—பனியாலே,
வாடுங்க மலத்தில் வாடியதிங் கென்னுள்ளங்,
கூடுங்க ருணையினைக் கூர். 16

கூரா ரிறைவாளைக் கொண்டுபணி கொண்டாய்முன்,
னேரார் திருநெல்லைக் கேற்றேனே—வீரேசற்,
கென்ன வியற்றிநீ பிஙகரைத் தொல்லிலினு,
முன்னதியாய்ச் செய்துகொண்ட தோ. 17

ஓங்காரத் துட்பொருளா யொன்று யமலமதா,
யாங்கார நீங்கினர்க் காரமுதாய்ப்—பாங்காக,



நின்று னசியீச னீங்காம லெங்கெங்கு,
நன்றுய்ப்ப ணிந்திடவே நாம். 18

நாம வுருவெல்லா நங்கொற்ற நாதனைவிட்,
டாமனுவு மில்லையவ னுணையெனிற்—பீமமுறக்,
காய்வதுவு மாய்வதுவுங் கானிகர்த்த நெஞ்சகமே,
தோய்வதுவு மாராரைச் சொல் 19

சொல்லாய் மடநெஞ்சே சொன்ன மலைவிலியைப்,
புல்லாய்ப் புரத்தை யெரித்தானை—நெல்லாய்க்,
கினியானைப் போற்றுதி ருந்தாயே யென்னென்,
னினியார்ந்து துன்பளிப்ப தே. 20

தேனுர் கமலத் திரள்சேருஞ் செந்தடமார்,
வானேர் பணிகழநி வாளீச—மானுர்,
மயலிற்சு ழலாமன் மன்னிடுவா னியுன்,
புயலிற்க ருணையவுன் போது. 21

போததனைப் போக்கப் புகல்வாய் பெருநூலாம்,
வாததனை நெஞ்சகமே வாடாதே—தீதகலக்,
கள்ளந்த னைத்தவிர்த்துக் கட்கேசன் கான்மலரை,
யுள்ளபடி யுள்ளத்தே யுன். 22

உன்னவுன்ன வோடிவிடு முன்னுருவங் கட்கேச,
வுன்னுதி ருந்தா லுணரலாம்—பிங்நமிலா,
நல்லாற்றை விட்டுவிட்டு நாயே னலைந்தேனே,
சொல்லாற்ற லென்பயக்குஞ் சொல். 23

சொல்லிற் கடங்காத சோதியுனை வாதியர்கள்,
சொல்லிற் கடங்கச் சொலவுறுத—னல்லெழிலா,
ரம்பரத்தைத் திக்கா யணிந்த வசியீச,
வம்பரத்தைக் கட்டலையொப் பாம். 24

ஆமோ வயின்றிடுத லைம்முகத்தெம் வாளீச,
மாமா முகன்னியு மற்ருரு—மாமுகனு,
மன்னத்தின் பூரணியா ளாவியென வில்லாக்கா,
லென்னத்தை பண்ணுகிற் பீர். 25

ஈராறை யையைந்தோ டீர்நான்கிற் கப்பாலாஞ்,
சீராருங் கொற்றேசன் சேவடிக—ளோராமற்,
கற்ருற் கலைகளையே கண்டார் நகையாரோ,
பற்ருர் புரிவாரோ பார். 26

பாரோரும் விண்ணோரும் பற்றுப்ப ரஞ்சுடரைத்,
தேராதே நெஞ்சே திரிந்தெய்த்தாய்—பேரேது,
மில்லானே யென்ருலு மேற்ருனெங் கட்கேச,
னல்லார்தொ ழும்பதமே நாடு. 27

நாடிகழுஞ் சோரமுற னன்கெனினென் னற்ருதாய்,
தோடமுறென் றீமநதைச் சோரஞ்செய்—தோடிவிடு,
நாயே னெவர்பாலு நாட்டே னுனதாணை,
பேயேன்பொய் பேசுவனோ பேசு. 28

பேச்சும் பொருளும்போற் பேதையொடு நீநின்ருன்,
மூச்சும் விடப்படுமோ மோகத்தை—யோச்சமென,
மற்றவர்கள் கொற்றேச மாகருணை நீபுரியி,
லற்றுவி டலடியே னும். 29

ஆமோ வகிலத் தரும்போகி த்யாகிகடாங்,
கோமா னுனையன்றிக் கொற்றேச—சீமானே,
மாதுக்குப் பாதிகொடுத் தாடையென மாதிக்கை,
தீதற்று டுத்ததிரத் தே. 30

தேவாதி தேவன் றிருநெல்லை நாயகனற்,
பூவார் திருவடியிற் போந்தக்காற்—சாவாதே,



யோவ லெளிதென் றுயர்மா ளிகைமாட்டுக்,
கூவிய ழைக்குங்கொடி.

கொடிமேன் மலையிருக்குங் கொற்றேச ரூரி,
லடியா ரதனருகே யாரார்—பிடியோட,
வன்னம் பயின்றுவர வாவா குயில்பாடப்,
பொன்னம் மயிலாடும் போய். 32

போயழைகான் மைத்துனனைப் பொங்கரவ நாணுயாத்,
தேய்சருமங் கோவணமா யேனென்று—காய்கலுழற்,
கண்டரியுங் கீழ்வீழக் காணுக்குங் கட்கேசன்,
புண்டரிகத் தாணிதமும் போற்று. 33

போற்றுங் குமரேசன் பொற்றலையின் மேலேறி,
யாற்றிற் கரமிட்டே யாகாவென்—றேற்றுகணிற்,
காய்ச்சற்கோ கட்டழலுங் கங்கைபதுங் கட்கேச,
தூய்ச்சற்ற ணிந்ததுநீ சொல். 34

சொல்களனி லேகளமுர் தூய்ச்சிரசிற் பெண்ணிடபா,
னெல்லைமுகந் தோலிடையி னேரார்க்குத்—தொன்மாலர்,
சஞ்சேர்க்குஞ் சம்புசல பிந்துசல சஞ்சம்பா,
லஞ்சாலம் போலவனு லா. 35

உலாவித் திரிதேனே வொண்பசுவா மோதே,
னிலாகற் பகதருவோ நீள்கோ—னிலாவணியாய்,
சிந்தா மணியோ சிறுகல்லா மென்ருலும்,
வந்தார்க்கு தவும்வ ளன். 36

வளமார் கருணையினல் வாரிதியாய் வாடா,
வுளவாற்றல் பூரணமா யுள்ளாய்—களவாணி,
யென்ருலுங் காட்சியினை யெற்கேன ளித்திலைநீ,
கன்ருத நெற்பெணின்கொண் கா. 37

காலிலியிற் றண்மதியிற் காணென்பிற் கங்கையினில்,
வாலடலைப் பானெலையின் வார்முலையின்—மேலசியற்,
கச்சம் பிரியமசு சிசுசிகோ ரஞ்ச,
மெச்சம்பங் தந்தானு மில். 38

இல்லாண் மலைநீலி யின்றனய ரின்றீன்பெண்,
ணல்லாது வேறுநினைப் பார்ப்பில்லா—ரல்லலெனச்,
சங்கரனே சங்கரனாய்ச் சங்யாசஞ் சார்ந்தக்கா,
லிங்குரனி லிற்பேண லேன். 39

ஏனோ விரக்கந்தா னென்பேரி னிற்கிலைதான்,
வானோர் பணிகழநி வாளீச—நானோதா,
னன்பிலனோ வன்பிலனே லன்பதனைத் தந்துநித,
மென்புருகப் பாடவர மீ. 40

ஈயென்றே காட்டியிவ ணீர்பதினாறேரெயிறை,
யீயென்றா லீவாயோ வீர்வாளோ—யோயுளமாய்,
நின்னுருவத் தேநின்றா னீயருள்வா யாதலினா.
லன்னவணஞ் செய்வான ருள். 41

அருளே திருவுருவா மாரியனார்க் கேவல்,
புரியாது நெஞ்சகமிப் பூமி—தருமாலுற்,
றோடியு ழன்றிடுமா லோடா தருள்புரிவான்,
வாடிருடும் வண்மையனே வா. 42

வாளா வனையுவதி வாளாயான் வந்ததலான்,
மாளாத காதலினை மாய்த்துன்றன்—வாளீச,
சித்துருவை யேநினைந்து சித்துருவே யாயிலனோர்.
சத்துருவென் சித்தமதே தான். 43



தானே யலதுசக சீவபரஞ் சற்றமிலை
யேனோ வறிந்து மிடர்கின்றேன்—கோனசியாய்
நின்னருள்சற் றில்லையதே நின்மலனே காரணமாம்
பன்னுகுடம் போலதிலே பால். 44

பாலே மதுரமதாம் பற்றிவிடிற் சர்க்கரையை
மேலே விளம்பலெவன் மின்வாளோய்—போலேகே,
ணின்னை நினைத்தலதே நின்மலமா நேர்துதியே
னன்னயத்தை யென்சொலுவே னான். 45

நானோ வசுசி யெனி னன்காமோ வென்பாரங்
கானார் கசடனெனிற் கட்செவியின்—றேனாரே,
யென்னை யிகழாதே யின்னருடந் தாளுதியே
லுன்னதியுற் குண்டெனவே யுன். 46

உன்னை யலதொன்றை யுன்னேனே யிந்நாயே
னென்னை நினையாமை யேசலவோ—மன்னசியாய்,
சென்னியா லென்றதனைத் தீரமறந் தாய்கொன்னீ
சென்னியா றொன்றுடையாய் செப்பு. 47

செப்பிடிலோ நின்சரிதஞ் சித்திரமாங் கொற்றேச
திப்பியவை ராகியுமாஞ் சேர்ராகி—முப்பிரிவேற்,
கொண்டு நிராமயனாங் கொண்டும் பலியதனை
யண்டும கேச்சுரனா மால் 48

ஆலநிழற் கீழேயா மாச்சரியங் கண்டோமே
சாலமிகப் பாலியறிச் சாயகனார்—கோலமிகுஞ்,
சிட்டர்களோ சீர்க்கிழவர் செப்பிடலோ மோநமொழி
கெட்டவரா மையமதைக் கேள். 49

கேளுந் திருநெல்லை கேள்வனே யொன்றுரைப்ப
வாளின் றிநட்டில் வழக்கெடுக்கி—னாளபினைப்,

பொல்லாத பொய்ச்சான்று போடில்வரு கின்றேன்
வல்லையெ னக்கருள வா. 50

வாராவி டினும்வ ளநெல்லை நற்றூய்க்காய்ச்
சாராது ரைப்பேனச் சான்றதனைத்—தீரமுட,
னீயருளா தேகிடினு நென்மாநி லையாளோ
தாய்மநமுங் கல்லாமோ தான். 51

தானேவி ளையாடத் தன்சங்கற் பத்தாலே
வானேமு தவாய்வ குத்ததலாற்—கேனமுளா,
யுண்டோ சிறிதேனு மோதாயெங் கொற்றேச
மண்டானன் றிக்குடத்தின் மாண். 52

மாணர் மனோலயத்தை மாசற்றார் மன்னிடயான்
பூண ரரிவையர்தம் போகத்தை—வீணேதா,
ருடியு ழன்றேனே நங்கொற்ற நாதாகாற்
ருடியெ னவெற்க ருள் 53

அருளே யவயவமா மாகாகா நாடாத்
தெருளே திருவுருவந் தேரீர்—பொருளோதுங்,
கொற்றேசர்க் காதலினிக் கோண்மநமாம் வெம்பகையற்
றற்றாரே பற்றார்பற் றோர். 54

ஓர்கோம் புடையானே யோருருவா யிங்குற்றுப்
பார்கொற்ற நாதனைநீ பாங்கென்று—னேர்கொளுவீர்,
பார்த்தேனே பார்த்தவெனைப் பற்றிச்சு கோததியி
லார்த்தானே யந்தோவ வன். 55

அவனே யிவனு மிவனே யவனுஞ்
சிவனே யிவையாவுந் தேரீர்—பவநோயற்,
றார்வாழி தீக்கானி லாடும் பொருளீதே
பேர்வாழி சொல்லியிருப் பேம். 56



பேமற்றோ நாமளவில் பேரற்றோ மற்றோமென்
னுமற்றோங் கொற்றேசர் நாடுற்றே—யோமுற்றார்க்,
கென்றும்ப ணிசெய்வோ மேமாறோ மேயுலகின்
முன்றுன்பி னியிடைவோ மோ. 57

மோதப்பெ ருங்கடலே மும்மூலையா ணயகனே
யோதப்பெ ரிதருளு முண்மையனே—கோதற்ற,
முத்திசன் போற்று முளரிப்ப தத்தோனே
சத்திவா ளோயெற்குத் தான். 58

தானே யுலகன்றிச் சத்தியமே சத்தியமே
யூனர் சிறிதிலைமற் றோர்வீர்நீர்—கோனசியோ,
னன்னகரில் வீரேச னுயேற்கு ரைத்ததிதே
யெங்கர்க்கு மெட்டாதி தே. 59

தேவாதி தேவனிவன் றென்கழசி வாளீசன்
காவார் வசிக்கானைக் காதலிமி—தேவாதே,
தன்மநமே யாகித்த ணர்ந்தேபி ணமதியை
யின்மயமே யாகியிடு வீர். 60

ஈரார் கருங்குழலா ரீமக்கு ணபம்போ,
லோரா ருடனுறவோ வூன்றியெனு—நேராரும், .
வாளீசன் மாநகரில் வாழடியார் தாளிணையி
னுளாக நெஞ்சேய மை. 61

அமையாய் மடநெஞ்சே யங்கிங்கும் பற்றல்
குமையோ விதுவுண்ணக் கூறாய்—நமையாளும்,
வீரேசன் கொற்றேசன் வெற்றிநக ருற்றேநற்
சீராய ளித்தமொழித் தேன். 62

தேனர் குணமார் திருச்சநகன் போலேமற்
றேனே வுணராயி டர்நெஞ்சே—தேனுரேன்,
பாதம்ப ணிதருநற் பண்ணவனும் வீரேசன்
பாதம்ப ணிந்தென்றன் பால். 63

பாலார்க டலினையப் பாலகனுக் கீந்தருளு
மேலாங்க ருணையசி மேலோனே—நூலளவே,
யாகுமா நுண்ணறிவிங் கந்தாம ரைநீர்போற்
போகுமே யன்பருளுன் போல். 64

போலியுல கிதனைப் பொய்யென்றே யெண்ணுமற்
கோலியலைங் தேனே கோனசியாய்—பாலியென,
நின்றாட் பணிந்தேனு னியருளைச் செய்தெனையே
கன்றுக்க ருணையினிற் கா. 65

காடுங்க டிவீடுங் கண்ணுரு மொண்ணுரு
மோடுங்க நகமதூஉ மொப்பாக—நாடுமவர்,
வாழுங் கழநிநகர் வாளீச னேநினதாட்
டாழுவ ரமெனக்குத் தா. 66

தாரணியென் சொல்லன்றித் தாரணியென் ஞன்
றில்லை, பூரணிநெற் கொண்கனெனும் போர்வாளோய்—தார
ணியி, நின்பால டைந்தாரே நேரா விதைநேர்வார், மன்பா
லடைவார்போன் மன். 67

மன்னப்பெ ரியோர்கண் மாசிலா நிட்டையினை
யுன்னப்ப டுநீள்கா ரோதியரோ—டின்னட்பாய்ச்,
சேரவி ரும்புஞ்சி றியேனை யாட்கொள்வாட்
சாரவி ரும்புறுநா தா. 68

தாமரையைக் கண்டே தணந்தார்நற் றையலர்த
மாமரிபர் ணம்புசிக்கு மாரியருங்—காமரியே
நன்னெய்பா லேகொள்ளு நாயேன் புலன்ருண்ட
லென்னயமார் கன்னுவா யே. 69

ஏசாத நிட்டையி சைந்தாநங் தக்கண்ணீர்
கூசாத யிலக்கு றங்கமிசைப்—பேசாதே,
வந்துக கங்கூடி வாழுளு முண்டுகொலோ
தந்திரவாட் கொண்டருடா தாய். 70

தாயார் திருநெல்லைத் தாய்நேற் றந்தைகணத்
தூயோர் கடவுளுநற் ருேகையனு—மாயாத,
சேட்டரா நின்னடியார் சேட்டமுறுஞ் சுற்றத்தார்
வாட்டமிலை வாளெடுத்த வா. 71

வாக்கு மநமும் வருந்தித் திரும்புறுநீ
போக்கும் வரவற்ற பூரணனீ—காக்குமெழிற்,
காவலனற் கட்கத்தைக் கண்டுயிலக் கொண்டுவரு
மாவலனு நீயன்றோ வா. 72

ஆரார்ப ழித்தென்னு மாரார்து தித்தென்னுஞ்
சீரார்நி னதாளே சேர்ந்தேன்யான்—கூர்வாளோ
யென்னைக்க ருணைசெய நின்கடனு மென்கடனே
வுன்னைப்பு கழுதலே யோ. 73

ஓயாது ளப்பேய்தா னேடிப்ப டிமிசையே
வீயாம டந்தையர்மேல் வேட்கையுறுங்—கூயதனை
வேண்டா மெனவல்லார் வெற்றிவா ளோயுனையற்,
றீண்டாரு மில்லையெனக் கே. 74

ஏதக்க ளஞ்சியநா னென்ருலு நின்ருளை
யோதக்க மியேனி யோர்வாயால்—போதமருள்,
வீரமுத்தி யாரியனே வேண்டிக்கொ ணர்ந்தருளக்
காரைசெலுங் கன்னியின்கொண் கா. 75

காலைப்பி டித்துங்க டுமநதைக் கண்டித்தும்
பாலைக்கு டித்தும்ப லபுரிந்தும்—வாலைமண,
வாளனெனும் வாளனுனை வந்தடைவார் வந்தடையத்
தாளைப்பு கழுவன்பான் ருன். 76

தானேப கையுறவுந் தானேசு கந்துயருந்
தானேயு ருநாமத் தாரணியுந்—தானேதா,
னெல்லா மெனவே யெளியேற் கியம்பினைவா
ணல்லோய்பின் ஞுடுவதென் ஞன். 77

நாநாவி தவுயிரா நாதாநீ செய்பவஞ
மூஞ ரகமதியா மோதலெலாந்—தேஞருய்,
பேய்த்தேரே யென்றுரிய பேரின்ப மாயினபின்
ஞய்த்தேயெற் கந்தோவா வா 78

ஆக்கல ளித்தல ழித்தன்மு தலவெலா
நோக்கின் மநமொன்றே நுண்ணசியாய்—வாக்கிற்கு,
மெட்டாத நின்னுருவை யெட்டிவிடிற் சுட்டாதே
மட்டுண்டோ வின்பழியு மால். 79

மாலா யரஞய் மலரோஞய் மற்றவராய்க்
காலா யறநீயாய்க் கம்பாராய்—மேலசியோய்,
மெய்யா யுனையல்லால் வேறிலைநன் னீநானே
பொய்யோது மோமறைதான் போய் 80

போயெட்டிப் பாராதே பொய்ம்மாயா வாதமெனும்,
பேய்மட்டிப் பேதையுடன் பேசாதே — வாய்கட்டிப்,
பொல்லா வுளமொருக்கிப் பூரணமே காணென்ருய், கொல்
லேதி யோயுனையென் கோ. 81

கோஞம துமுநிவன் கோறவமே நற்றவமா
மாஞரு னதுவர மாண்பேமாண்—பேஞேர்க,



ளென்னவ ரம்பெற்ரு ரித்தகைய மெய்த்தவர்வா
ழின்னவ ரம்போலோதி லே. 82

ஏமாந்தி ருந்தேனே யித்துணையு மையய்யோ
நீமாந்த வைத்திலையே நீளமுதைப்—பூமாந்தண்,
வல்லபத்தி ஞயகனே வந்திலையோ பக்குவமுங்
கல்லிபத்திற் கிக்களிப்போய் கா. 83

காவிற்சொ ரிதேனே கண்டோநற் றேஞருய்
மாவிற்கு யில்கூவும் வல்லபமே—தேவிற்,
சிறந்ததிருக் கட்கேசன் சேர்நகராங் கண்டீ
ரிறந்திடினு நீர்மறவீ ரெல். 84

எல்லாம் புலப்பந்தா னென்றுரைத்த முத்தீசன்
சொல்லாற் சுகம்பெறலாஞ் சோர்வின்றி—யல்லாமல்,
வேறுவ ழியிலையெம் வெற்றிவா ளீசரைவிட்
டேறுங்க ரையேது மில். 85

இல்லா தறிவான்மூன் றேய்ந்திருப்ப தேமுத்தி
யல்லாமல் வேறின்றென் ருரியஞேர்—சொல்லாலே,
சொன்னவுப தேசத்தைத் தோமறுநற் கொற்றேச
வின்னபடி யென்றிலக்கி டே. 86

ஏதக்க டுவுடையோ ரின்னமுதீ வாரெனினு
மோதத்த லைமாலை யோரெனினும்—பூதரிவ,
ரோதத்த குமோவிங் கோர்வாரார் கொற்றேச
ராதலெலாஞ் சித்திரமே யாம். 87

ஆமெனினு நற்பவஞ யான்ரேர் பவந்துடைப்பன்
காமனெரி கோடிட்டிக் காரனுமே—யாமெனினுஞ்,
சீரார்ச மதிருட்டித் தேவனிவன் கொற்றேசர்
சேராரறி வாரோசெப் பு. 88

செப்பேம் பவன்சருவன் சீரார் பசுபதியா
மொப்பா ருருத்திரனே டுக்கிர னும்—மெய்ப்பீம,
னீசாநன் மாதேவ னென்றருள்வா ளீசனுடைத்
தேசார்ந்த நாமமதின் சீர். 89

சீரார் கழசித் திருவே திருநெல்லைக்
காரா வமுதே யருளுருவே—தேரா தார்க்,
கல்லேயா மாதியறுஞ் சோதியனே யாழ்நெஞ்சே
யல்லும்ப கலும்ம றி. 90

அறிவுருவாங் கொற்றேச னுனபினர் நோக்கச்
செறியுலகஞ் சித்துருவாய்ச் சேர்ந்தே—பொறியாறு,
மோடலொ ழிந்ததுவே யோர்சாந்தி வந்ததுவே
கேடதற வுற்றனமிங் கே. 91

கேதாரா போற்றியொரு கேடில்லா விசுவேசா
தாதாவே போற்றி சயபோற்றி—யாதியிலாய்,
போற்றியசீ யீசனே போற்றிநெலை நாயகனே
போற்றியுன தாமரையின் போது. 92

போதா ரயனுடனே புள்ளோனுங் காணுத
தாதாவே சீர்கழசித் தண்ணிறையே—நீதாதா,
நாயேற்குனைமறவா நல்வரத்தை நல்துதியேற்
பேயேற்கு முண்டோபி ணி. 93

பிணியார்ந்து மங்கும்பி ணவுடலைப் பேயே
னணியாமெ னக்கருதி யார்ந்தே—துணியாமற்,
றேயாம னின்னுருவைத் தோத்திரமுஞ் செய்யாம
லோயாமற் றுன்புற்றே னே. 94

ஓகோ திருநெல்லைக் கொப்பான நாயகரே
ஆகாயம் போலகண்ட மானவரே—தேகோகம்,



புந்தியினைத் தீர்த்தே புலையனையு மாட்கொளுவீர்
மந்திர வாட் கொள்பவரே மா. 95

மாவும் வளர்தெங்கு மாகத்தின் சோலையாங்
கோவிற்பெருமூ ரோய் கொற்றேச—கூவியிடுங்,
கோகிலமே போலமிகக் கூடிதனை விட்டொழித்திங்
காகிலனே நின்றுள ணி. 96

அணியும் பணிபோற்றி யம்பலவா போற்றி
பணியு மடியவர்தம் பாதங்—துணிவாக,
நிற்பாதி கொண்டதிரு நெல்லை வயற்கேகு
நற்பாதம் போற்றுவனே நான். 97

நானேநீ யாகிப்பன் னீயேபின் னுனுகி
யூனே முதலாய தோட்டிமிக—வானேவா,
னுனவா போலரிய வையாவெம் வாளீச
வானுமே நாமிருவோ ரா. 98

ஆச்சரியங் கண்டோமே யம்மா வசியீசன்
பேச்சிறக்கப் பண்ணுவனே பேணினரைச்—தூர்ச்சடிதன்,
போற்றும்பதமதனைப் போற்றியிடும் வீரேசன்
போற்றும் பதந்தனையே போற்று. 99

போற்றிநங் கொற்றேசர் போற்றுவார் பொற்கழல்கள்
போற்றிநம் வீரேசன் பொன்மலர்கள்—போற்றிமிகப்,
போற்றி கழசிநகர்ப் பொன்னடியார் பொற்றுள்கள்
போற்றிகிரிப் பாதமரைப் பூ. 100

கோவி லூர், திருக்கொற்ற வா ளீச ரந்தாதி

*முற்றிற்று.*



உ

### ஸ்ரீ உகந்த ஞான தேசிகர் வணக்கம்.

காமமே முன்னுல் கடும்பகை துறந்தே கரமேத பயிக்க பாத் திரமாய், நாமமே யுருவ மென்பது மறந்து நாடினின் னுருவினி னிலேத்தே, சேமமே யடையத் திருவரு ணயவாய் செல்வமே யென்னுயிர்த் தேவே, ஓமெனும் பொருளே பொருள் வைமா நகர்வா ழுகந்ததே சிகசிகா மணியே. 1

மணியோடு மோடுஞ் சமமதாய்க் கண்டு மாசதா சிவப்பிர மனேப்போ, லணிபெருஞ் சகஜ சமாதியை யடைந்து வாநந்த வாரியென் றடைவேன், எணியவை யினிய வன்பருக் குதவு மெந்தையே யெனக்கருள் புரிவாய், புணியர்வாழ் பொருள்வை மாநக ருறையும் போதனே யுகந்ததே சிகனே. 2

---

### ஸ்ரீ வீரபத்திர ஞான தேசிகர் வணக்கம்.

செய்யநற் குணமுஞ் செழுந்திருத் துறவுஞ் செமெ லாந் திருணமென் னேக்கும், ஐயற்பெற் றுய்ய வடியனேற் கருளா யம்பிகை பாகனே மநத்தில், மெய்யுறப் படுத்தி மேன்மையே மிகுத்து மேலவர் பணிந்திட விருந்தோய், துய்யனே வீரபத்திரத் துரையே துகளறுந் தேசிகோத் தமனே. 1

உத்தம குணங்க ளென்றுயா னடைவே னுயர்பத மென்றுயா னடைவேன், சித்திரப் பதுமை யொத்ததண் சமாதிச் செல்வந்தா னென்றுயா னடைவேன், முத்திரா மேசன் வணங்குறும் பதத்தோய் முத்தியின் வடிவமா மித்தோய், சத்திய ஞான வடிவமா முதத்தோய் சற்குரு வீரமா தவனே. 2





### ஸ்ரீ சிங்கார ஞான தேசிகர் வணக்கம்.

மாதவர் வணங்கும் ஞானசிங் கார வள்ளலே மா சௌந் தரிய, மாதெனு மனேமுன் னருனிய கவியை மகிழ்ந்து நீ யருளிடல் வேண்டும், தீதுறு சிறுவ னுதலின் மறந்து திரியினும் பொருளினே மறவேன், ஓதிட லெளிதெம் முமையமை யும்பா லுயர்தருந் தேசிகோத் தமனே. 1

சுடரிழை வேண்டிச் சுந்தரி தோன்றிச் சொல்லுத லெளிதுகோ லடியேன், மடமையை யறுக்கு மாண்புடை யிறைவ மைந்தனுக் கருள்செய லுரித்தே. குடவளை தாவும் வயலுடைப் பொருள்வைக் குருபர பரமசித் தியனே, தட முலே மாதர் மயக்கறுத் தருளும் சத்திய ஞானதே சிகனே. 2

---

### ஸ்ரீ முத்தைய ஞான தேசிகர் வணக்கம்.

எங்கிருந் திடினு மெழிற்பத மறவா வியல்பது மின் குண வியல்பும், பங்கமில் பாலர் போலவே பயிலும் பான் மையு மெனக்குநீ யருள்வாய், தங்குறு பதத்தி லிருந்துல கனைத்துந் தான்றுரும் பெனவினே யாடும், துங்கமெய் யிறைவ முத்தைய ஞான தூயமெய்க் குரவனே போற்றி. 1

முத்திரா மேசன் முத்தந்தந் திடலான் முத்தைய னெனும்பெயர் புனேந்தே, யித்தரை யிடையெம் போலிய ரிறையை யெளிதினி லறிந்துவாழ்ந் திடுவான், தத்துவ நிலேயை வழக்கினி லுணர்த்துந் தயைமிகுந் தேசிகோத் தமனே, சித்தரும் பரவும் பொருள்வைமா நகர்வாழ் செல் வனே ஞானதே சிகனே. 2

---

### ஸ்ரீ சட்டை யப்ப ஞான தேசிகர் வணக்கம்.

கருணேமா நிதியின் கானிழன் மருவிக் கழனிமா நகர் முதல் பொருள்வை, யருணெறி யெனவிவ் வகிலருக்

குணர்த்த வாரிய பரம்பரை வளர்த்தும், தெருணிறை குரவ சட்டையப் பேசச் செல்வனே பல்வளத் தாசை, மருணெறி யடிய னுய்ந்திட வருளாய் மலரடி வணங்கிவாழ்த் துவனே. 1

சநகனைப் போலு மதிகசும் பீர சம்பிர தாயமே யிலக் கும், அநகனே யடியர்க் கருள்செயு மிறையே யடியனுக் கநுதிந மருளாய், பநகனும் பணியும் சட்டையப் பீச பாரி னற் றிலகமாம் பொருள்வைத், திநகரன் மறையும் பொழி னக ருடையாய் செல்வனே ஞாநதே சிகனே. 2

சுபம்! சுபம்!! சுபம்!!! ஆகக் கவி 10.



உ

ஓம் மகா கணபதயே நம:

## ஸ்ரீ சுவர்ண புரீசுரர் சௌந்தரிய நாயகி யந்தாதி.

### விநாயகர் வணக்கம்.

வலம்புரிந் தடியவர் வண்ங்கி வாழ்ந்திடும்
பொலம்புரி யிறைவனைப் பொற்புறு மிறைவியை
மலம்புரி துயரற மகிழ்ந்து பாடிட
நலம்புரி மாமுகன் நளிநம் போற்றுவாம்.

---

யிறைவ தாகிய நின்மல வறிவினை நிகழ்சரா சரமெல் லாம், முறைவ தாகிய வகடுறு முமையினை யொருபுடை வைத்தானை, யறைவ தாகிய பொருள்வைநன் னகரினி லமர்ந்தருள் சுரந்தானை, யிறைவ வெம்பெரு மானென வநுதிந மிறைஞ்சியேத் திடுவாமே. 1



இடுவ தென்னைகொ லன்னமே யடியவர்க் கென் றுணர்ந் திடநாடோர், தொடுவ னையுறுஞ் சுந்தரி மந்திரத் தோகையள் தொல்லோராம், நடுவி னின்றருளி ருகந்ததே சிகன்முத லுயடி யேனீருய்க் குடிவ ளர்த்தினள் குறை யெலாந் தவிர்த்தனள் குரைகழல் தொழுவாமே. 2

தொழுத முதுநின் றறிவினிற் றொடர்ந்திடுந் தூயமெய் யடியார்க்கும், பழுத றுத்திடும் விகற்பமில் பான்மையைப் பண்பிற னளித்தானை, முழுது டற்பொரு ளாவியை யளித்துயான் முதமொடுந் தொழலென்றே, தழுத முத்த மெய் யன்புடன் பொருணகர்த் தண்ணிலாத் தரித்தோனே.

தரித்தி ரந்திநம் பொருளினை விழைதல்போற் றமிய னேன் மநநாளும், வருத்து வெங்கொடுங் காமமுற் பகை யெலாம் வகைவகை பொடிந்தேக, வருத்த லென்றுகொல் லாநந்த வமுதினை யடியனேற் கெனவேங்கும், திருத்தி யாளுதல் நின்பரஞ் சௌந்தர்ய தேவியே தெரியாதோ. 4

தெரிவு மற்றெழுந் தெரிவிலா மையுமறத் தெவிட்டி டாப் பதத்தேகி, மருவு மென்மநந் திருசிய மறதியா மங் கையை மணந்தாடி, யருவ மாயிட லென்றுகொல் லறி கிலே னடியனேன் குலத்தேவே, தெரிவை பாகனே பொருள்வைநன் னகருறந் தெய்வமே சிவனேயோ. 5

சிவனை யாடிடக் கண்டுள மகிழ்ந்திடுந் தேவியே யென் றுயே, கவன மென்னிடத் ததிகமாய்ச் செலுத்திடல் கடன் கடுக் கொடியேனுன், பவந வெவ்விரை மநத்தினன் பய னறு பஃறெழுமின் மிகத்தேடும், அவனி னத்தள னிதி யன் றழகினுக் கழகளித் திடும்வாழ்வே. 6

வாழ்வும் வையமும் வழங்கிடும் பொருள்களும் வந் துறு மனையாவும், தாழ்வு செய்திடு மெனத்தெரிந் திருந்து

மியான் றழுவிட ஙினைந்தாவா, ஆழ்வ தென்னையோ வறிந் தில னையனே யடியனேன் றனைக்காப்பாய். மாழ்வ தின்றிய பொருள்வைமா நகர்வளர் வள்ளலே மாதேவா. 7

மாது செய்திடுஞ் சூதிதென் னன்னைகேள் மலைக்குய முதற்காட்டிக். கோத ளித்திடு மநத்தினை யழுத்திடுங் குவ லய மெய்யாக்கும், ஆத லினின தடிமல ரடைந்தன னயற் கதி யதுகாணேன், நீத விர்த்திடு துயரெலாஞ் சௌந்தர்ய நின்மல நிதியாயே. 8

நிதியி னைவெறுத் தடியவர் துறவினி னிகர்சுக ரேனவோத, அதிம துரமெய் யறிவினி னழுந்தியே யாநந்த சுமானுர், மதிகெ டுந்தடி யடியனே மநஞ்செலு மார்க் சுமே யினிதாகக், கதியு றுதலும் விதிகொலோ பொருண கர்க் கடவுளே கண்பாராய். 9

பாரை யாண்டுவின் பாதலத் தாணையைப் பகலிராப் பல்லூழி, யாரை யாவென வண்டங்க ளாயிரத் தெட்டினை யடைந்தோனுஞ், சூரை வென்றசிங் காரனைப் பெற்றிடுஞ் சுந்தரி யெனையாள்வாய், தேரை யாயினு நீர்பெற வில்லை யோ தென்னவன் பெருவாழ்வே. 10

வாழி யையனே பொருள்வைமா நகர்வளர் வள்ளலே வழியாக, ஆழி ஆழியாய் வந்தவ னல்லவோ வுனைநினை மந னுகிக், நோழி கூவுமுன் னெழுந்துனைப் பணிந்துவெங் குறையெலாங் குறைப்பாயென், மாழை யங்கிரி வில்லனே யெனத்திநம் வழுத்திட வழங்காயே. 11

காய நீரினிற் குமிழிபோ லழிவது காரிகை யார்போகம், மாய மல்லவோ விதைத்தவிர்த் தாளுதல் மாதநின் கடனு கும், தாயு னதரு ளில்லையேற் றமியனேன் றரணியி லென் செய்வேன், நோய கன்றிலாக் குழவிபோல் வாடியே நொந் திட னலனன்றே, 12



அன்றெ னக்கொரு வருந்துணை யென்மந மதனெடு நான் சேரேன், என்று கொள்ளினு மதுவிடா தென்றனை யிழுத் திடு முலகூடே. வென்ற வைம்புலக் காட்சியர் வணங் குறும் வேதமெய்ப் பொருண்ஞாநக், குன்ற மெய்யனே யருளுதி பொருணகர்க் குலவிடும் பெருமானே. 13

பெரும னுந்தொழும் பெருமையாய் சௌந்தர்யப் பெற்றியாய் பிழைநாயேன், ஒருமநத்துட னின்றனை யுன் னிடா துழன்றிட னலந்தானே, கருமை தீட்டிய கண்ணி யர் மோகமுங் காயநா னெனருனும், பிரம வாநந்தப் பீடைக ளல்லவோ பேயனேற் கருளாயே. 14

ஆயும் போதினி லதுநிலை யாயிடு மருமைதா னெதுவாகும், தூய மங்கையும் பொருள்களு மென்செயுந் துயர்மாநந் தனக்கீயும், மாய மல்லவோ விவையெலா மெனவெணி மயங்கிடா துனைவாழ்த்தில், தோயு மாநந்தத் தெல்லையென் சொல்லுதி சொர்ணமா புரிநாதா. 15

நாத முங்கடந் தொளிர்ந்திடு நாயகி நவிலெழிற் பெயர் வாழ்வே, ஆத காதவ னெவெனை யெண்ணினு லடியனே னென்செய்வேன், நீதி யாகுமோ பெற்றவள் கைவிட னினக்குஞ்சம் மதந்தானே, வேத நாயகி பொருள்வைமா நகர்வளர் வித்தகி மெய்த்தாயே. 16

மெய்யைப் பொய்யென வையனே மேலவர் விளம்பியு மறியாமன், மெய்யை மெய்யென வுழன்றன னடியனேன் மிளிர்மல மல்லாமல், துய்ய நற்பொரு ளுண்டுகொ லிதன் கணே துயர்க்கெலா மிடனுகும், செய்யுங் காரிய மறிகி லேன் பொருள்வைமா நகருறை சிவனேயோ. 17

சிவசி வவென மநநினைந் தநுதிநஞ் சிந்தைதா னகலா மல், தவம்வ ளர்த்திடல் சதாசிவப் பிரமம்போல் தமியனே

னென்றேதான், உவம னின்றிய முலையினிற் பாலுகுத்
துலகினைக் காத்தாளும், நவச வுந்தர்ய நாயகி நளிநமே
நாயினேன் சரணுகும். 18

ஆகு மிங்கிது வருநல மல்லது வாகிடா தென
வாழ்ந்தே, போகும் பொய்மநப் பின்னரே தொடர்ந்தியான்
போவது மறியாயோ, ஏக மெய்ப்பொரு ளென்றுநா
னடைவதோ வெளியனே னென்செய்வேன், மோக மற்ற
வர் தொழுதிடும் பொருணகர் முதமொடுந் துதைவோனே.

துதையு மென்மந நின்பதத் துகளினிற் றுட்டவா தனே
தானும், அதையுஞ் செய்திட முடித்திடா திடர்செயு மம்
மையே வலர்ந்தேனியான், கதையென் சொல்வது கால
மூன் றறிந்திடுங் கன்னியே யெழிற்றுயே. சுதைய ருளுதி
கந்தனுக் கெனமிகச் சுகமுற வடியேற்கே. 20

அடிகள் கன்றிடச் சுந்தரப் பெருந்தகைக் கன்றுதா
ளூரில், பொடிகள் குன்றிட நடந்ததை நினைந்திடும் புண்
ணிய ரெண்ணுமன், மிடிக ளொன்றிடும் வாழ்வினி லாழ்
வரோ மெய்யரு ளடையாமல், படிகள் வென்றிடும் பொரு
ணகர்ப் பண்ணவ பாவியேற் கருளாயே. 21

அருளு மெய்யு ருநீகொள லன்றியு மப்பனுக் குரு
வீந்த, தெருளு ருவளே தெய்வமே யெனைப்பெற்ற செல்
வமே யிமவானி, பொருளு றுநகர்ப் புண்ணியப் புதல்வியே
புங்கவர் மிகப்போற்றும், இருளு ருடரச் செய்வளே சௌந்
தர்ய வின்பமே யென்தாயே. 22

வேறு.

என்மந மறிவினி லைத்துல கியற்கை யெண்ணிடா
தேகமா யிலங்கிப், பொன்மலை யடுத்த காகமே யெனயான்



பொற்புற விருக்குநா ளுளதோ, பொன்மலி நகரென் றம
ரர்க ணெருங்கிப் பூசைகள் செயமிக மகிழ்வோய், நன்மந
வழகின் னுயகித் துணையாய் நாயகா நம்பனே யன்பே. 23

அன்புரு வான,வின்பமே யடியே னன்னையே முன்
னையே நினது, துன்பமில் பதத்தைப் பம்பின னெனினுந்
துயர்மந மாற்றுத லாற்றேன், என்பெருந் துணையே யென்
னுயி ருருவே யெளியனேற் கருள்புரி தேவே, மன்பெரும்
பொருள்வை மாநக ருறையு மரகதச் சௌந்தர்ய
மாதே 24

மாதரின் காதல் மயங்கிட மயங்கி மலவுட லமுதமாய்
மநத்தில், தீதுற நினைந்து துயருறு நினது செல்வமெய்க்
குமரனெற் கருளா, யோதுத லகன்ற வொருமநத் தவர்க
ளுண்ணினைந் துருகியே வாழ்த்தும், தீதகல் பொருள்வை
மாநக ருறையுந் தேவனே மூவர்கண் முதலே. 25

முதலொடு மிடையுங் கடையது மில்லா முதல்வியே
முத்தர்தம் வாழ்வே, நிதநினை மறவாச் செல்வமே யடிய
னித்தலும் வேண்டுவ வருளாய், விதம்வித மாக வேண்டுவர்
வேண்டும் விழைவெலாம் விருப்புட னருளும், புதர்பணி
பொருள்வை மாநகர் பொலியப் பொருந்திடு பொற்பினு
யகியே. 26

நாயினுங் கடைய நாயினே னெனையு நாடிநின் னடிய
ரிற் கூட்டிப், பேயெனு மநத்தை யடக்கிட வருளைப் பெரி
தினி னருளினு யடியேன், றூயவப் பதத்தை மறந்திருந்
தயின்று துகளேயே சிரங்கொள லழகோ, வேயுறு தோளி
பங்கனே பொருள்வை வேந்தனே சாந்தனே விமலா. 27

விமலமெய் யடியர் போற்றுறுங் கருணை விமலையே
யமலனுக் கினியாய், முமலமு மறுக்கும் வழியினை யளித்து

மூற்றுறும் வகையளித் திலேயே, கமலேமெய் பணியுங் கக
கமா நகர்வாழ் காதலி மாதவர்க் கினியாய், குமலம தறுக்குங்
குரைகழ லுடையாய் குவலய மீன்றதுஞ் சரியே. 28

குஞ்சர வதனன் குமரவே ளிருவர் குளிர்ந்துவாழ்ந்
திடுதல்போ லடியேன், மஞ்செழிற் களத்து மாணிக்க
மலேயே மங்கையின் பங்கனே கங்கைச், செஞ்சடை நட
நச் செல்வனே பொருள்வைச் சேவக வாழ்ந்திட வரு
ளாய், துஞ்சலற் றிடுவர் தொழுதிடு மிறைவ துய்யனே
மெய்ம்மறைத் துணிபே. 29

துணிந்தவர் வேதத் துணிபினே யுளத்திற் றுன்னிநன்
னிலேயினேத் துதைய, மணந்தபுன் மகளிர் போகமே
விழைந்து மாழ்கிட னீதியோ வருளாய், குணந்தரு நீறு
மக்கமா மணியுங் குலவுசெங் நாவிலேங் தெழுத்து, மணிந்
தவ ருறையும் பொருள்வைமா நகர்வா ழும்மையே யழகினு
யகியே. 30

அழகுரு வான வமுதினே யணேத்து வாலவெங் கொடு
மையை யடக்கும், அழகநின் னுருவ மியாவுமென்
னுளத்தி லகர்நிச நினேந்துநின் னிடத்தே, மழையெனக்
கடலி லழுந்திநின் மயமாய் மாசுகம் பெறுவதென் றறி
யேன், பொழினிறை பொருள்வை மாநகர் வாழும் போத
மெய் யுருவனே பொருளே. 31

பொருளென லுனேயல் லாதுமற் றெதுவும் பொருந்
திடா தாதலாற் புகழோர், அருளிடு நினது திருவடி
யணேந்து வன்புரு வாயின ரடியேன், இருளினி லிருந்திங்
கேங்கியே வாடி யென்செய்வ தெனவறி யாமன், மருளுத
லழகோ மாதுநீ யிருப்ப மாழையம் பதியினர் வாழ்வே. 32

இனன்மதி யழலே யெழிற்கணு யுடைய வெம்பெரு
மானடி யவரை, மானினேங் துலக வாழ்க்கையை வெறுத்து



மற்றவர்க் கேவல்செய் வாழ்வை, மனுமற மில்லார் மநு
டரோ வறியேன் மற்றவர் கூட்டமே யருளாய், பொனி
னிறை நகரிற் பொலிந்துவா ழிறைவ புங்கவர் போற்று
புண் ணியனே. 33

புண்ணிய பாவ மறிந்திடார் கோயிற் புறந்திரிந் தறிகி
லார் நினது, கண்ணிய சரிதை செவிகொளார் கரத்திற் கடி
மலர் நினக்கெனக் கொய்யார், விண்ணவர் வணங்குந்
திருவுலாக் காணுர் வீணரென் னுலகினிற் கண்டார், நண்
ணின ரெதனே யருள்செயா யழகி நுயகி சாயக நயநீ. 34

நயநற் கயல்கள் கருணேயி லாட நற்குழ விகளெனும்
வெயிலாற், துயமரை விரிந்தின் னமுதினே யுகுக்கக் குமர
ரெம் போலியர் பருகத், தயவுட னடைவர் தாபமே தணிக்
குந் தடவடி வாகிய தாயை, மெயிலுறு மிறைவ மேன்
மையை யருளாய் மிளிர்பொரு ணகருறை யிறையே. 35

இறைவனுக் குரிய விருந்துய ரகற்றி யெழிற்குயத்
தமுவலா லினிய, சிறுவரெங் களுக்குப் பசிப்பிணி யோடுஞ்
செனமவெம் பிணியறுத் தருள, நறைமலர்ப் பாலின் றீர்த்
தமு மமைத்த நாயகி நாயினேற் கருளாய், சிறையளி
பாடும் செழும்பொழிற் பொருள்வைச் சீர்நக ருரைந்த
செந் திருவே. 36

திருவினே யணேக்குந் திருநெடு மாலேத் திருக்கணேப்
பறித்திடத் திகழ்த்தும், அருவனே யடைவ தெங்ஙனே யென
வென் னகமிக வஞ்சிய தருளாய், வெருவலெ னினேநான்
சோதியே னென்னு விளம்புதல் வேண்டுமென் னேயா,
மருவுறு பொருளே யடியவர்க் கியு மாழையம் பதியின்
மன் னவனே. 37

மன்னவர் வாழ்வும் வானவர் வாழ்வு மற்றவ ரடைந்
திடும் வாழ்வும், தென்னவன் புதல்வி யாகிய தேனே தெய்
வமே யென்மநத் தெளிவே, பின்னது வாக நின்பதப்
பேறைப் பெரிதுதா னடைந்திட வருளாய், முன்னவ
ரிடத்திற் சுடரிழை வேட்ட முத்தமே சத்திய முதமே. 38

முதமெனத் தோன்றும் விருத்தியு முதிரு முழுதையு
மெங்ஙனே யறியென், னிதமொழி மறந்திங் கின்புரு
வடைய விடம்பொரு ளேவலி லியைந்தே, நிதநித மலைத
ரகுங்கொலோ வருளாய் நித்திய முத்தசத் தியனே, மதர்
விழிச் சௌந்த ரியவமை கொழுந மதகரி யுரித்தசே
வகனே. 39

சேவக னெனக்குத் திருவரம் வேண்டுஞ் செய்யதாள்
பரவுதல் சிவமாய்ப், பாவக மாதல் பண்பதாய் நிலைத்தல்
பண்ணொடு நின்புகழ் பாடல், மூவுரு வினையும் வழிபட
மொழிதல் முத்துவெண் ணகையரை மறத்தல், சாவினை
நினைத்த லருளுவாய் பொருள்வைச் சௌந்தரி யம்மையே
தவமே. 40

தவமிக வேண்டுந் தவிர்ந்திடா தடியர் தயவினை
யடைந்திட வேண்டும், பவமகன் றிடவெற் கையனே
யிதனைப் படியினி யாயின், உவமனிங் கெவரெற் குறைத்தி
டாய் பொருள்வை யும்பனே யும்பர்கட் கரசே, நவநவ
நீத னுருவனே வசிட்ட னுடிடு நாதனே நடனே. 41

நடநவில் சிறிய தண்டையந் தாளன் நாயினைப் பொரு
ளென நயக்கும், கடமத கரியா னிளையசிங் காரக் கதிர்
வடி வேலவன் கருணைக், கடல்வடி வான ஞாநமெய்க்
குருவின் கண்ணொடு கண்ணணைத் தருளும், சுடரிழைத்
தாயே யடியனுக் கருளாய் தோகையே வாகைமா
லையளே. 42



வேறு.

மால யனொடு மகஞ்சத மியற்றினன் மருவும்,
கோல மாதங்க நகருறை கொண்டலே யடியேன்,
நாலு மூன் றையு மடைதர நயந்தருள் புரிவாய்,
நீல கண்டனே யண்டர்கள் நேடுநின் மலனே. 43

மலம்பெ ருகுட லுனென மதித்துமங் கையரான்,
நலம்பெ றவலை நாயினை நாடியே யருள்வாய்,
குலம்பெ றப்பெரும் புகழையு மிமக்குன்றின் குமரீ,
பொலம்பு ரிக்குறும் பொற்பெனும் பொற்பினை யகியே. 44

பொற்ப மர்திரு மங்கையன் பொற்குவி யலினைப்,
புற்ப தித்திடப் பொருள்வைமா நகர்புக விதனைப்,
சிற்ப ரபிற வாதசெஞ் சேரியென் றிடலான்,
நிற்ப ரவிடின் னென்குறை நிமலமெய் யறிவே. 45

அறிவ தாகிமெய் யாநந்த நித்தபூ ரணமா,
யுறைவ தாகிய மெய்யினை யுழன்றிடு மெனக்கு,
நிறைவ தாகிய மநத்தினி நின்மலை கொடுப்பின்,
அறைவ தாருனை யழகினுக் கழகுசெய் யன்னே. 46

அன்னை யப்பனு யாருயிர் போற்றிட வமர்ந்தே,
வுன்னை யுன்னிலர் மறைப்பொரு ளெனவுய ருளத்தே,
என்ன செய்தனர் மாநுட ரிம்பரி லிருந்து,
பொன்ன கருறை புரமெரி கரியின்போர் வையனே. 47

போர்செ யுங்கணுங் கரங்களும் புகழ்பதம் பிறவும்,
வார்செ யுமுலை சுரந்தருள் வழிதலும் வடமும்,
ஏர்செ யுமறை மந்திர யுருவமா யிலங்கல்,
ஓர்செ யுமந மொண்பத மடைதறிண் ணமதே. 48

திண்ணங் கண்ணிய சிவலிங்க வடிவமாய்த் திகழும்,
புண்ணி யன்றிரு மறைமனுப் பொதிந்தவ னெனவே,
எண்ணு மெய்யவ ரெய்திட லிருங்கயி லையதே,
வண்ண மங்கவன் வழங்கிடல் வழியடி கொளவே 49

கொள்ளு மெய்க்கர மலரிணைக் குமரிநின் கழலின்,
மெள்ள வைத்திட வன்புடன் மிளிர்தவம் வேறே,
தள்ளு கோடியி லெளியனைத் தணந்திடா தருளும்,
அள்ளு மெய்யரு ளுருவமே யழகுசெய் யனையே. 50

செய்ய செல்வத்தில் வித்தையே சிறந்தது வேதம்,
ஐய மேலது வதனினு முருத்திரி யதினும்,
துய்ய வைந்தெழுத் துயர்வதி னுயர்வினு முயர்வாம்,
உய்யும் பொன்னக ரிறையவ னுருச்சிவ மனுவே. 51

சிவசி வையெனச் சிந்தனை புரிந்துசெந் நாவால்,
நவந வமுடன் கோடியெண் ணவின்றிட நளிந,
பவன்ப தஞ்சிறு பதமெனப் பெரும்பதம் பலிக்கு,
முவமை யில்லருள் கொழித்திடு மழகியென் னுமையே. 52

உமைய வட்கரு ளும்பனே பொன்னக ருயிரே,
எமையு யச்செயக் கலியினி லெதுவுள தியம்பா,
யமையு மதுநன் னுமமே யலதுமே லதுவாய்க்,
கமைத ரும்பெருங் கருணைசெய் கண்கண்மூன்
[றுடையாய். 53

மூன்றெ னுங்குணங் கண்முலை புவநமு முகிழ்த்த,
தேன்ற தும்பிய மொழியனுய் சிறுவரோ விருவர்,
வான்றி கழ்ந்திட வடியனை வரவுசெய் திடினே,
தோன்று மும்மையென் தொல்புக ழழகமை தொகையே.

தொகையி றந்தன வுயிர்களும் வினைகளுந் தொடர்பாம்,
வகையி றந்தன போகமு மங்ஙனே வகுக்கின்,



நகையி றந்தவிவ் வுலகநின் னுருவலா துடேன்,
பகையி றந்திடும் பொருள்வைநன் னகருறை பயனே. 55

பயமு றுத்திடும் பயோதரப் பயத்திறற் பணிந்தேன்,
நயமு றுத்தியென் றனையினி நடுங்கலென் றருளாய்,
துயர றுத்திடத் திருவுருத் தாங்கியே துலங்கும்.
கயலு றுத்திய கண்ணியே கவின்பெயர்த் தாயே. 56

பெயர்க ளாயிரம் பெற்றிக ளாயிரம் பிறங்கும்,
செயல்க ளாயிரந் திருவுரு வாயிரஞ் சிறந்த,
முயல்க ளாயிர மென்னினு முன்னவ நினக்கு,
அயல்கொ ளுந்திர னில்லையி லாடகப் புரியாய். 57

ஆட கப்புரி நாற்புறம் காவிரி யருவி,
யோட கத்திற மென்னவே யுன்றிருக் கருணை,
நாட கத்தின ருட்புற நாடியே நடிக்கும்,
வீட கத்தியன் பெறவருள் விமலையே யெழிலே. 58

எழிலு ருக்கொடு தாருக வநத்திடை யிலங்கிக்,
கழல்ப ணிந்திட முநிவருக் கருளிய கருணை,
யழலு ருமநமெனதுபெற் றிடுமெனி னையா,
கழியு மென்வினை கநகநன் னகருறை கரும்பே. 59

கரும்பும் வேபெனக் கண்டுங்கற் றுண்டெனக் கழறும்,
விரும்பு நின்மொழி யென்மொழி யொடுநனி விரவித்,
துரும்பு லகென வெண்ணிநின் றுணையடி புணையா,
யரும்பி நின்றிட லென்றுகொ லழகம்மை யறைநீ. 60

அறைவ தென்னினி யாடகப் பெருநக ரமர்வோ,
யுறைவ துன்கழ லன்றியென் றனுக்கொன்று மிலையான்,
மறைவ குத்தது மங்ஙனே யாதலின் மலர்நீ,
குறைவ தற்றிடும் படிக்கருள் குரவனே யருவே. 61

அருவ மாகியு மருவுரு வாகியு மமரும்,
உருவ நாயகி யும்பர்க ளுயகி யுலகின்,
பருவ நாயகி பல்லுயிர் நாய்கி பகர்வா,
யொருவ றிவுரு வாயிட வுபாயமெற் குயர்வே. 62

வேறு.

உயர்வ திம்மநு டப்பிறப் போரின்வெங்,
துயர றுத்திடத் துங்கமெய் யாதலின்,
அயர்வ தென்னினி யாடக நாடுளாய்,
செயன்மி கச்செய்கை சீர்த்திய தாகுமே. 63

சீர்த்தி வாய்ந்தசெ ழும்புனற் காவிரிக்
கீர்த்தி யென்னக்கி ளர்கரு ணைநதி,
நேர்த்தி யாகநி தநிதம் பாய்த்திடின்,
பூர்த்தி யாமநம் பொற்புறு மன்னையே. 64

அன்னை யென்னவ ருள்வீர சேகரன்,
என்னை முன்னமெ ழிலறி வாக்கினன்,
என்னி னுங்குறை யெய்திடு மேமவூர்,
முன்ன வாமந மூற்றிட மூழ்கிடே. 65

மூழ்கி நெற்றியி னீறினை மூடியே,
தாழ்க வின்கலன் கண்மணி தாங்கியே,
சூழ்க வேவலஞ் சுந்தரி மந்திர,
மாழ்கு மால்பிற விப்பிணி மாயமே. 66

மாய வன்பிர மன்பணி மன்னனே,
ஆய வன்பருக் கன்புடை யாடகத்,
தூய நாயக தாங்கிட லென்றுதான்,
வாயு மாமநம் வாங்கிடந் தோன்றியே. 67



தோன்றி டும்பொருள் சுந்தரி நீயலா,
லான்ற கேள்வியி லங்கிய மில்லையால்,
வான்று லங்கிய மாடநி றைதரும்,
பூன்ற பொன்னகர்ப் புண்ணியர் புங்கமே. 68

புங்க வர்க்கெளி தோவுனைப் போற்றுத
லங்க வர்க்கரும் போகம மைதலான்,
இங்கெ னக்கரு ளீந்திடி லுயினேன்,
துங்க பொன்னகர்த் தூயவ தூயனே. 69

தூய வன்புடைச் சுந்தரி தோடமின்,
ருய வன்பினி னின்பத மம்மையே.
மேய நன்மந னென்றுகொன் மேன்மையா,
யாயி யாகுவ னன்றறுந் துன்பமே. 70

துன்ப வின்பந்து தைந்துது தைந்துதோய்ந்,
தன்ப தாகவி டயத்த முந்தியே,
யென்ப தாயின னென்பதம் பெற்றிடின்,
முன்ப பொன்னகர் முத்திவ டிவனே. 71

வடிவ மாகிவ ழங்கிட லென்முனே,
துடியி டைச்சுக சுந்தரி யம்மையே,
படியி லென்றுப கர்ந்திட வேண்டினன்,
அடிய னின்னடி யல்லத றிந்திலேன். 72

இல்லை யுண்டோ டிருள்பக லென்றுசொல்,
சொல்லை யுந்தவிர்ந் தின்பசொ ரூபமாய்,
நல்ல மெய்ப்பத நாடிட லுனென்ரே,
கல்லின் வில்லுக்க நகந கர்க்கணே. 73

கண்ணி னுஞ்செவி தன்னிற்க ருத்தினும்,
உண்ணி கழ்ந்தொளிர்ந் தாயெனி னும்பர்சேர்,

விண்ணி னும்புகழ் சௌந்தர்ய வித்தகி,
யெண்ணி லென்பத மென்னவி யம்புமே. 74

இயம்ப லென்னையெ ளியடி நாயினேன்,
பயம்பெ றச்சிறு பாலகன் பாடல்போல்,
நயம்பெ றத்திரு நல்லருள் நண்ணினுன்,
சுயம்பொ ருணகர்ச் சுந்தரன் றேழனே. 75

தோழ தாததொ குசகத் தொன்முறை,
யேழை மைந்தனுக் கெய்திட லில்லையால்,
வாழ வைத்திடின் புத்திர வல்வழி,
மாழை நன்னகர் மன்னிடு மம்மையே. 76

அம்மை மெய்யில மர்ந்திட லா னுனக்,
கெம்மை யாளவ ருள்செய லின்பமே,
சும்மை யன்றுசு வர்ணபு ரிதொழும்,
மும்மை யாகிய மூவர்மு தல்வனே. 77

முதற்சி ருட்டியி லையென முற்றலார்,
சுதைச்சொ ரூபமெய்ச் சுந்தரி யம்மையே,
விதச்ச கமுன் றன் மெய்யில்வி வர்த்தமாம்,
அதைத்தெ ரிவரிவ் வாண்டவர் கூட்டமே. 78

கூட்டங் கூட்டுகந் தையென்கு லவிய,
நாட்ட மோசக மென்னமெய் நாட்டிடின்,
றேட்ட மேயறி யென்றனன் றேவர்சேர்,
சேட்ட மாம்பிற வாச்சேரித் தேவனே. 79

தேவன் மெய்தொழச் சிக்கென முக்கிய,
ஆவ வென்னம்மை யாரமு தத்தாு,
மீவ தென்றுப ருகியி ருந்துயான்,
மூவ ரும்பணிந் தேத்திட முந்தவே. 80



முந்தி யேமுகுந் தன்பணி சிக்கலுட்,
பந்த நீங்கிடப் பார்ப்பதி யோடுநீ,
அந்தி யும்பக லுமமர்ந் தாயரு,
ளெந்தை யேபொருள் வைப்பதி யேந்தலே. 81

ஏந்தி டுமழின் மேனியு மின்னெழிற்,
கூந்த லுங்கரு ணைக்கணுங் கொள்ளைகொள்,
சாந்த முந்திகழ் சௌந்தர்ய நாயகி,
போந்தி டின்மகம் போதமும் வேண்டுமோ. 82

வேறு

வேண்டாமையெ னும்விழுச் செல்வம்வி ரும்பி னேர்க்குத்,
தூண்டாவிளக் காகிவி ளங்கிடுந் தோன்ற லேயோ,
ஆண்டாருகந் தையன டியவ ரன்பினுனே,
பூண்டேனிலை யன்பைப்பொரு ள்வைப்பு ரத்தின்வாழ்வே.

வாழ்வாவது மாயமெ னுந்திரு வாக்கினுனும்,
தாழ்வேதிநங் கண்டும நங்தெளி யாததாழ்ந்தோன்,
பேழ்வாய்திறந் தேதிரி பெற்றியென் பேசுகிற்பாய்,
சூழ்வார்க்கருள் சுந்தர நாயகி தோமிலம்மே. 84

அம்மாவிது வென்னபொய் மாயம றிந்திலேனியான்,
சும்மாவிருந் தார்சுகங் கைகண்டு தோற்றவுந்தான்,
வெம்மாயப்பெ ருவனத் தேயுழல் வீணனுனேன்,
பெம்மான்பொருள் வைப்பதி மேவிய பெற்றியோனே. 85

பெற்றந்தனிற் பிஞ்ஞக னேடருள் பேயனேற்குச்,
சுற்றித்திரி வஞ்சகன் றற்குமே தோற்றிவைப்பான்,
முற்றுமுலைச் சுந்தர நாயகி முன்வந்தென் றன்,
குற்றங்களை வேறுது ணையிலை கொண்டலன்னுய். 86

கொண்டல்வளர் சோலைகள் சூழ்ந்துகொண் டாடும்வண்
லண்டர்தெரிந் தாற்றிடப் பூசைய ருளுகிற்கும், [டா,
பண்டெந்தைபொ ருள்வைப்ப தியுறை பாதிமாதோய்,
கண்டென்றுசு கித்திடு வேன்கழல் கண்கண்மூன்றோய் 87

ஓயென்றிவ் வுலகுறும் வாழ்க்கை யுவர்ப்பதென்றோ,
நீயென்றருள் பாலிப்பை யோசிகழ் நீலமேனித்,
தாயென்றிடுஞ் சுந்தர நாயகி சாற்றுகிற்பாய்,
வாயின்றிய நாயினன் நின்புகழ் வாழ்த்துவேனே. 88

வாழ்த்துமடி யார்க்கருள் வள்ளலே வண்பொருள்வைச்,
சூழ்த்தும்பெரி யோர்புகழ் சுந்தரி தோழனேயான்,
பாழ்த்தும்பிற விப்பிணி வாட்டிடப் பங்கமுற்றேன்,
தாழ்த்துந்தலை நின்றிருத் தாளினிற் றுழவையே. 89

வையம்புகழ் சுந்தர நாயகி வாழ்வெனக்கே,
செய்யென்வினை தீர்த்திடு சிற்சொரூ பத்தின்றேறல்,
பெய்யென்மன மேகுடிகொண்டுநீ பேணுமன்பால்,
பையனென வேமற வேலினிப் பண்பதாயே 90

பண்பும்பொரு ளும்மெனப் பார்ப்பதி பற்றிநிற்குந்,
தண்புண்ணிய மூர்த்திபொ ருள்வையிற் றுணுவேயென்,
புண்பண்ணிடு முள்ளமு னக்கினிப் புங்கமாகிப்,
பண்பன்னிட நாவையு மெந்தைப ணித்திடாயே. 91

பணிவேண்டிச்சிங் காரமெய்த் தேசிகன் பா லுரைத்த,
வணிபோலினி யெங்கள்வ யமிக வாயினுயென்,
றெணிநாயின னின்றும கிழ்ந்தன னென்னையின்ற,
மணியயகுண சுந்தர நாயகி மாசிலாளே. 92



வேறு

மாசதின்றிய மன்னவ போற்றிமெய்ம் மாதவர் மிகப் போற்றுந், தேசி கனுகந் தையனற் றிருவடி திநந்திநம் பணிந்தேத்திப், பூசை செய்திடு மாண்டவன் பொற்பதம் புகழ்வழி யடியேனுன். ஆச தின்றிய பதமெனக் கருள் செய்வா யம்பிகா பதிபோற்றி. 93

வேறு.

பதியுந்திரு வும்படர் மாதரு பண்பென்யாவும்,
விதியின்பய னென்றுநி னைந்தருள் வேண்டுகின்றேன்,
கதியெற்கிலை வேறுக ருணைசெய் காணென்னம்மே,
துதையுமலர்ச் சேவடி போற்றிது களில்தாயே. 94

வேறு.

தாயு மானவ போற்றிமெய்த் தயாபரத் தாணுவே மிகப் போற்றி, நேய மானவ போற்றிநின் மலையுடன் நிதிதுனும் பதியூடே, தோயும் வாநவ போற்றியெந் தோன்றலே துகளிலாய் மிகப்போற்றி, நாயி னேற்கருள் செய்திடும் நாதனே நளிநமென் மலர்போற்றி. 95

வேறு.

மலரடி போற்றி செம்பொன் வைத்தமா நகரில் வாழும், குலதெய்வம் போற்றி மெய்யைக் குலவல்செய் யம்மை போற்றி, புலர்வதம் முன்ன முன்னைப் பணிந்திடப் பணிப்பாய் போற்றி, நலமுறு சுந்த ரஞ்சேர் நாயகி போற்றி போற்றி. 96

வேறு.

போற்றியுன் வாழ்வென் வாழ்வாய்ப் பொருந்திட வைக்கும் நாத, போற்றிமெய்த் தொண்டர் போற்றும் பொருள்வைமா நகரின் வாழ்வே, போற்றிநல் வெண்ணீ யப்ப னுருவமாய்ப் பொலியுந் தேவ, போற்றியென் றனையு மெய்யாய்ப் புகழ்ந்திட வைத்த கோவே. 97

வேறு.

கோவே போற்றி யுயிரில்வளர் கொழுந்தே போற்றி நாற்றிசையு, மூவா திருக்கு முதல்வர்புகழ் முதலே போற்றி யான்புகழும், நாவே போற்றி சுந்தரநா யகியே போற்றி நளிந பதத், தேவீ போற்றி குருவடிவாய்த் திகழ்வாய் போற்றி மிகப்போற்றி. 98

வேறு.

போற்றி போற்றியொண் காள கண்டனே புண்ணி யா புகழ்க் கண்ணி யாஙிதம், போற்றி போற்றிவெண் ணிலவு சூடிய புங்க வாவருட் டுங்க மெய்யனே, போற்றி போற்றி கங்காத ராஙிதம் புரமெரித்தசீர்ப் போத வேதனே, போற்றி போற்றியம் பிகையின் பாகனே பொருள்வை மாநக ருறையு மேகனே. 99

வேறு.

ஏகிடா தெங்க ளிடமிருந் தருளி யெங்களுக் கருளு வாய் போற்றி, மோகமே துடைத்துச் சோகமே யறுத்து முத்தியீ யம்மையே போற்றி, வேகமே யொழித்துச் சாந்தி யே மேவ விரும்பிய வன்னையே போற்றி, பாகுலா மொழி மெய்ப் பண்ணவி பொருள்வைப் பதியுறை தேவியே போற்றி. 100



வேறு.

போற்றியென் னுயிர்க்குயி ராகிய பொருளே புகழ் பொருள் வைப்புரி புரியென வுறுவோய், போற்றிமெய் யுப நிடப் பொருளுறும் பொருளே புண்ணிய முனிவர்கள் புகழ்ந்திடு மிறையே, போற்றிநற் சுவர்ணபு ரீசநற் புநிதா போர்செய்சிங் காரனின் றுதையெந் தந்தாய், போற்றிநஞ் சித்திவி நாயகற் பயந்த பூரண னேயரு ளாரண போற்றி.

வேறு.

போற்றியே யுகந்த தேவீ புண்ணிய வதியே போற்றி, போற்றிவீ ரேசற் பெற்ற பொருள்வைவா ழும்மே போற்றி, போற்றியிந் நகரில் வாழ்வோர்க் கருள்செயும் புகழே போற்றி, போற்றியென் னம்மே போற்றி போதமெய் நிறைவே போற்றி. 102

சுபம்! சுபம்!! சுபம்!!!

ஸ்ரீ சுவர்ண புரீசுரர் சௌந்தரிய நாயகி யந்தாதி,

முற்றும்.



உ

சிவ மயம்.

ஓம் மகா கணபதயே நம:

## செல்வ விநாயகர்,

# செம்பொன் மாலை.

### மங்கலம்.

கல்வி யும்பெரு செல்வமுங் கழன்மலர் பரவும்,
ஒல்வ ணக்கினர்க் கருள்வனே யுகந்ததே சிகற்கு,
நல்வ ளனுறப் பொன்றரு நாதனைப் பாடச்,
செல்வ மாமுகன் சேவடி சென்னியிற் சேர்ப்பாம்.

திரிசக மதனி லுவமைநின் றனக்குத் தேசிகோத் தம
விலை யுளதேல், பரிசம்பொற் றகைமை யளித்திடுந் தனது
பான்மையை யளித்திடா துனது, வரிசையை யருள வீர
மா தவனுய் வந்தனை யெனின்வழங் கிடலோ, தெரிசநம் புரி
வர்க் கிகபர சுகத்தைச் சேர்த்திடும் செல்வமா முகனே. 1

என்னதா னுரைத்தும் பயன்கொலென் னையா வேழை
யர் சுகம்சுக மெனவே, பன்னலென் றனைவிட் டகன்றிலை
பாவி பழவினை யழகினை யுடையேன், உன்ன லுன் றனையா
னெருமநத் தோடு முருகியே யென்றுதா னருளாய், கன்ன
லுஞ் செந லுங் கலந்திடும் பொருள்வைக் கடிநகர்ச் செல்வ
மா முகனே. 2

திருசிய மறந்து சித்தமு மிறந்து சிற்சுக வாரியிற்
கரந்து, ஒருசிவ மாகித் துயரெலாந் துறந்து வொப்பற
நிற்குநா ளுளதோ, வருசினங் கொளும்வண் டண்டர்கள்
பரவ மலர்தொறு நறவினை யருந்தித், திரிசிரி சோலைப்
பொருள்வையம் பதிவாழ் செஞ்சுடர்ச் செல்வமா
முகனே. 3

காற்றினி லலையுஞ் சருகென வினையின் காற்கொடு
காயமுந் திரியக், கூற்றினை யுதைக்குந் தாளனுர் குமர குமர
வேள் முன்பனே குருவே, ஏற்றுடை யீறைவ வென்று
யான் றுதித்து விம்பரில் வாழுமா றருளாய், நாற்றிசை
பரவும் பொருள்வைமா நகர்வாழ் நாடருஞ் செல்வமா
முகனே. 4

தீமநஞ் சிறிது மென்மொழி செவிகொள் செறிவிலை
செறியுமா றருளால், காமனை யெரித்த கண்ணுத லீன்ற
கரிமுக கடனின தலவோ, காமனைப் பழிக்கு மங்கையர்
வயலிற் கழைமணி கலந்தநெல் வாரிப், பூமனைக் கேகும்
வளனுடைப் பொருள்வைப் பொன்னகர்ச் செல்வமா
முகனே. 5



நூலினி லுழன்று நூலிடை யுழன்று நூனெறி
நுழைதரா நுணியன், பாலக னெனினு நினதடி பரவும்
பான்மையன் மேன்மைய னலவோ, காலனுங் கலங்கு
மாடவர்க் கவரக் கமழ்தருங் கற்பினர் வாழும், கோல
மெய் யுடைய பொருள்வையம் பதிவாழ் கொண்டலே
செல்வமா முகனே. 6

எங்குகண் டிடினுஞ் சிவமய மாகி யெழிற்சம திட்
டியை யடைந்தே, தங்கிடக் கிருபை புரிதரல் வேண்டுந்
தந்தியுந் தந்தியுந் தனைந்து. பங்கமில் குடஜ வநந்திரி
போதும் பரமநிற் பூசைசெய் பொருள்வைத். துங்கமெய்
யிறைவ வருடருங் குரவ துகளறுஞ் செல்வமா முகனே. 7

உவமையற் றழிவற் றெருகிரி யையுமற் றுயர்ந்தநிட்
களகுண ரகித, அவமயன் மாயை யற்றமை யானே யவிழ்ந்
தெலா விகற்பமு மவிர்ந்தே, சிவமயத் தூய போதநின்
றனையே செவ்வனே யகமெனச் செறிவேன், நவநவப்
பொருள்வை நகர்வளர் துரையே நாயக செல்வமா
முகனே. 8

எனதறி யாமை யியைபுறப் பெற்றே யிருங்கரு மச்
சழக் குழன்று, உனதருள் கொடுமன் னுறப்பிரிந் தறிந்திங்
குய்யுமா வாழ்த்தின னருளாய், தனதனும் விரும்புந் தந
நிறை பொருள்வைத் தாயர்கள் கற்பினில் வடமீன், கன
தையி லுலவுங் கடிநகர் வாழுங் கருணைசெய் செல்வமா
முகனே. 9

மாயையின் வயத்திற் றுயின்றிடை யிடையின்
மன்னு றுங் கனவள விலவாய்ப், பேயகத் தெழுந்த பெற்
றியை நினது பெருமொழி கெடுத்ததென் வியப்போ, நாயகன்
சுவர்ண புரிப்பெரு மானு நலமிகு மழகியுங் கூடித், தூய
வெற் கருளத் தரவருங் குமர துன்பமில் செல்வமா
முகனே. 10

பகுதியின் படிக ளாகிய காயப் பண்பினிற் படிறனே
னகமாம், விகுதிகள் புரிந்து வியப்பொடுந் திரிந்து வீணினி
னுளெலாந் தொலைத்தேன், தகுதியென் றரியப் பகடுகைப்
பகடு தளைத்துச்செய் வளர்த்துமெய்ப் பொருள்வைத்,
தொகுதியில் வளருந் தோமிலா முதல்வ சுகவுருச்
செல்வமா முகனே. 11

உண்மையின் விடய மசுத்தந்துன் பநித்த முளந்தனி
லிதையுணர்ந் திருந்தும், வெண்மையே யன்றே விரும்புறல்
விழைவை வேரொடுங் களைந்தருள் புரிவாய், தண்மையாற்
பெரிய சந்திர முகித டங்கலிற் பொங்குவெங் கனலி, லிங்கி
தப் பொருள்வை நகரிலங் கிறைவ வென்னுயிர்ச் செல்
வமா முகனே. 12

சாத்திர சாலந் தணந்துபுன் றொழிலுஞ் சாடியே பால
ரைப் போலும், கோத்திர முதல வினைவனை யாமற் கோதி
லாப் பூன்றநின் பதத்தில், நேத்திரந் திறந்து மநநனி யிறந்து
நித்திய வாழ்விலென் றிருப்பேன், வேத்திரங் கரங்கொள்
வேலவன் றமைய வியன்றருஞ் செல்வமா முகனே. 13

கண்ணினு லெதையுங் காணில னுகிக் காதினு லெதை
யுங்கேட் டிலனுய்த், திண்ணமா யுளத்தி னினைத்தில னுகித்
திகழ்தருங் குருடொடு செவிடு, வண்ணமாய்த் திரிந்து நின்
பதத் திருந்து வாழவென் றனக்கருள் புரிவா, யண்ணலே
யரசே யானைமா முகனே யரும்பெருஞ் செல்வமா முகனே.

இகழ்கல னுகி யொன்றையு மினிதா யிருங்கரங் கவர்
துள மகிழ்ந்து, புகழ்கல னுகிப் பூரண வறிவிற் புணர்ந்ததன்
மையினுள மிகவே, மகிழ்வுறு மாரக் குழம்பினிற் குளிர்ந்து
மதகய மெனத்திரி வேனே, அகழ்வுறு மிடத்தி லாடக
மெடுக்கு மரும்பதிச் செல்வமா முகனே. 15



மங்கையம் பெருமான் பொருளினைப் புதைத்து வைத்
திடு மகிமையே. மலராள், இங்குறு பூசை புரிந்தசெந்
திறனே விந்திர னுதியர் வணங்கும், பொங்குறு தவத்தர்
வாழ்தரப் பெற்றே போற்றுத லுபநிடப் பொருளைச்,
செங்கைமத் தகம்வைத் தாண்டமெய்க் குரவ தேவனே
செல்வமா முகனே. 16

வசிட்டமா முநிவன் வாழ்ந்துமெய்த் தவத்தை வள
ர்த்திடும் வண்மையோ மாயோன், சுசிட்டமாய்த் துலங்கி
யருள்செயுந் தொடர்போ தொடர்ந்துவா சிட்டமுங்
கிதை, விசிட்டர்கள் பரவும் பொருள்வைமா நகர்வாழ்
வேழமா முகவசிங் காரச், செசெட்டைமா மயிலின் றுணை
வனே மணங்கொள் சித்தியின் செல்வமா முகனே. 17

சித்திமா முகனென் பெயரொடு மமர்ந்தாய் தேசிகர்
மாசில்பூ சையினில், உத்தம மாழை யுகந்ததே சிகர்பா
லொள்ளிய சந்தபி டேக, சித்தியி னிமித்தங் கொடுத்தலி
னடிக்குஞ் செல்வமா முகனெனச் சிறந்தாய், முத்தியை
யடியர்க் குதவிடும் பரம மோதகச் செல்வமா முகனே. 18

சூரியன் குளிர்ந்து தோற்றினு நிலவு சூடுடன் றுலங்
கினு மெரிதான், ஓரியல் கீழி லொளிரினுங் ககநத் துறினு
மே விழுதுடுக் கணங்கள், நேரியல் மாறி நிகழினு மாயை
நிகழ்த்திய சாலமீ தென்னுப், பூரிய நிலையில் மாறிடா
தருள்வாய் பூரணச் செல்வமா முகனே. 19

நாசியி லமைத்த நோக்கொடு மெவையு நாடிடா நன்
னிலை மையினில், பேசிடா தரிய தத்துவத் தழுந்திப் பெரு
கிய காவிரிக் கரையி, லேசிட வெவரு மிருந்துவாழ்ந் திடுத
லென்றுகொ லிமையவர் புகழ, வேசிகள் மேன கையினைப்
பழிக்கும் வியனகர்ச் செல்வமா முகனே. 20

ஞாலமென் பாயிற் குடங்கைமெல் லணையாய் நாடிய விரதியைக் கூடிக், கோலமா யிருத்த லென்றுகொல் லறி யேன் கொடுஞ்செயல் செயமிக விழைந்தேன், ஆலமே யமுத மாக்கிய பரம னுடைகப் புரியில்வா ழிறைவன், நீல மெய்யழகி யணைத்தருள் குமர நின்மலச் செல்வமா முகனே.

ஒருவரு மில்லாக் காவிரிக் கரையி லுயர்கொடி வீட் டில் வெண் மணலில், இருவரு மொருவ ராகியே யிருமை யெண்ணிடா தருஞ்சுகக் கண்ணீர், மருவுற மகிழ்ந்து மலர வன் வாழ்வும் மண்ணென வெண்ணுமா வெண்ணுய், தருவநத் துறையும் வீரசே கரனுந் தண்ணருட் செல்வமா முகனே. 22

சீருலா முகந்த தேசிகன் வீர பத்திர தேவன்சிங் காரக், காருலாங் கருணை நாதன்கம் பீரக் கவின்முத்தி நாதன்சட் டேசப், பேருலா மிறைவன் முதலவர் போற்றப் பேரருள் சுரந்தநீ யெனக்கு, நேருலாம் பதத்தைக் காட்டிடா தென் னே நேரிலாச் செல்வமா முகனே. 23

உண்முகத் தமுதம் பருகியே கரத்தி லுற்றிடு முணவை யுட் கொண்டே, தண்முக மாகித் தாயென நினைந்து சந்ததந் தெருவிலே ஐடனுய், விண்முகத் தவர்க டுதிசெய மகிழ்ந்து வீற்றிருந் தருளுநா ளுளதோ, கண்முகத் தெணியே கந்த னெ டாடிக் கலகஞ்செய் செல்வமா முகனே. 24

நீடிய பரம சிவத்தினி னிலைத்து நிசசுக ரசமிக மாந்தி, வீடிய லெதுவு முணர்ந்தில னுகி வெளியினிற் பாடியுஞ் சிலபா, லாடியுங் கிடந்து நிட்டையே புரிந்து வமர்ந்திட வருட்னைப் புரிவாய், வாடிடா வலபை வளமண வாள மகிழ்வுறுஞ் செல்வமா முகனே. 25



நின்றிரு வருளிற் பரசுகக் கடலி னிகழ்தரு பேனமுன் னுலகம், என்றனி யுருவ மானபின் னேக்க வெங்குயான் செலல்செயல் கோட, லின்றெதை வீட லிகழ்புக ழெங்கே யேகிய தறிகிலே னெனினும், நன்றதி னிலைக்க வருடெருள் வடிவ நாதனே செல்வமா முகனே. 26

மாயையா கியதோ ரெழிலியிவ் வுலக மழைத்துளி தெளிக்கமற் றறிவாய்ச், சேயையொத் திலங்கு மென்னையென் செயுமோ செயமப செயமிறை யிலையால், தூயையாம் நினது திருவடி மறவேன் றுதிக்கையாய் துதிக்கையெற் கருள்வாய், நாயையும் பொருளென் ருண்டநா யகனே நம் பனே செல்வமா முகனே. 27

வாக்கொடு காய மாநத மாக வயங்கற மறமெனக் கருமந், தேக்குறு முலகின் மூன்றினுங் கரியாய்த் திகழு மென் றனைச்செய லென்னே, போக்கொடு வரவ தின்றியே பொலியும் பொலம்புரி யிறைவர்பெற் றெடுத்த, நாக்கினில் வளருந் தெய்வமே யெனது நாயக செல்வமா முகனே. 28

புயங்களோர் நான்கும் முக்கணுங் கயத்தின் புழை முகச் செக்கர்மா மேனி, நயங்கமழ் பாச வங்குசத் தோடு நாடிய மாயைபி னேடும், பயங்கழி தரசிற் போற்றுத லென்றூ பகலிராத் தெரிந்திடா வண்ணம், சுயங்கதிர்த் தொளிருஞ் சுவர்ணலிங் கேசர் சுதனெனுஞ் செல்வமா முகனே. 29

பிரமநா யகனே பெருஞ்சுரா சுரர்கள் பேசுறும் பூசனை புரியும், வரமுறுஞ் சித்தி புத்தியா மனைகள் மருவிட விரு புடை மகிழ்வோ, யருமையா மன்பிற் குருகிடு மிறைவ வம்பிகை நந்தன வெளியே, னிருமையைப் பிரிக்கு மிறை வனே மறையி னிரும்பொருட் செல்வமா முகனே. 30

தன்னியன் மிகவுந் தன்னிய னானே தமியனேன் பிறவி
யைத் தவிர்ப்ப, நின்னுடை யருளை யருளலா லின்றே நிமல
மா மெடுத்தவிப் பிறப்பும், கன்னலின் றரளங் கரிதருந் தர
ளங் கடைகளிற் கடைச்சியர் கொடுபோய்ச், செந்நெலுக்
கீயும் வளநக ரிறைவ சீருடைச் செல்வமா முகனே. 31

தயிரொடு மதுநெய் கலந்ததெள் ளமுதுந் தகும்பலாக்
கதலிமாங் கனியும், பயறொடு திலத்தி னுருண்டைமோ
தகங்கள் பக்குவ மாகவே கொடுத்து, உயும்வகை பூசை
செயுமன்பர் தமக்கங் கொண்பத முதவிடு முரவோய்,
கயமுக வடியர் தயைமுக வெனது கணிமுகச் செல்வமா
முகனே. 32

தாயுநீ தந்தை தமையனீ தமக்கை தம்பியும் தங்கை
யும் நீயே, தூயநீ மைந்தன் பந்துவு மாகித் துலங்குவை
துதிகுல தெய்வம், நீயலா லெனக்குப் பிறிதிலை யதனா னின்
பரம் யானரு ணிமலா, காயமே யினிவந் துருவண மருடி
கவின்மலர்ச் செல்வமா முகனே. 33

நனவொடு கனவு துயில்களிற் புரியும் நல்வினை தீவினை
நினக்கே, யினமுடன் றந்தே னிடர்கெடு பாவ மிரிந்திட
நினதெழிற் பதுமக், கநகபா துகையைக் கழுவிய தீர்த்தங்
களிப்புடன் கொண்டன னடியேன், தநமக டவத்தைத்
தடையற நடத்துந் தண்ணருட் செல்வமா முகனே. 34

ஒன்றதா யுலக மனைத்துமாய் நின்றா யொள்ளொளி
யிறைவனே மறையோ, ரென்றபின் னிருமை பேசுதல்
பழிப்பே யுயர்தவ மின்றெனல் வெளியே, சென்றதை நினை
யா திருந்தெழில் வரவைச் சிறிதெணு நிகழ்வினை மறந்து,
வென்றவர்க் கருளும் விமலனே வெட்ட வெளியெனுஞ்
செல்வமா முகனே. 35



இவன்மிகச் சபலன் குழவியா யிருந்து மிருந்தயித் திய
ரையே யழிப்பன், நவவினி யெதனைச் செய்வனோ வந்தோ
நானறிந் திலன்முநி வரனே, உவமையி லுமையு முரைத்
திடச் சிரித்தங் குமையமை குறங்கின்மீ திவரும், சிவவடி
வான செல்வர்வாழ்த் திறைவ செழுமறைச் செல்வமா
முகனே. 36

கணங்களுக் கிறைவ சேட்டவே ரம்ப கபிலமங் கள
நிதி கருணோய், குணங்களுக் கிறைவ வரதனே துண்டிக்
குருபா சிவசுத வுமையீ, மணங்களுக் கிறைவ வென்றுயான்
வழுத்தி மகிழுத லென்றுகொல் லறியேன், பிணங்களுக்
கிறைவ னாகியே யெய்த்தேன் பேருருச் செல்வமா முகனே.

கயமுக வரிட்ட மகோதர கருணைக் கடல்சித்தி புத்தி
நா யகனே, குயமுகங் குகிய நலமென மருண்டு குழிவிழு
மடியனுக் கருள்வாய், வெயில்பட மடவர் மேனிலம் புகுந்
தும் விண்ணெழுஞ் சோலையாற் றடையுண், டொயி லுடன்
றிரும்பும் வளனுறு பொருள்வை யொண்ணகர்ச் செல்வமா
முகனே. 38

பற்றில தாகித் தனித்தொளிர் மனம்போற் பதுமநா
யகனும்பண் ணவர்சூழ், பொற்றிரட் கதிபக் குலிசனுஞ்
சுகத்தைப் பொருந்துரு ரென்னவும் பொருளிற், பற்றினை
விடுக்கா தறிவிலார் போலப் பந்தமே யுறுதலென் னரு
ளாய், வெற்றிவே லழகன் மெச்சுறக் கனிகொள் வேழமே
செல்வமா முகனே. 39

மநந்தனி கறந்தாற் பற்பவீ றெழுந்த மாருத மெழுகட
லெழலும், இனுந்திந கரர்க ளீரறு பெயர்க ளெரிக்கினு
மெரிசொரிந் திடினும், துனுந்துயர் திலத்தின் றுணையுமே
யிலையாற் றுண்டிநா யகவதை யருள்வாய். தனந்தனித்
திரியு மன்பர்கள் போற்றுந் தாணுவே செல்வமா முகனே.

ஆசையின் மநத்தி னருந்தண்மை நிறைவோ டழகெனு
மூன்றினுக் குவமை, தேசுறு நிலவு பாற்கட றிருவின்
பெட் புறு முகமனு காதேல், மாசறு நிலைமை யடையுமா
றருளாய் மன்னன்மா முசுகுந்தன் போற்ற, வேசில்சுந் தரனு
யிருந்த வெம்பெரும வின்னெழிற் செல்வமா முகனே. 41

மநந்தனை யொடுக்கல் தெய்வமா மருந்தா மற்றதன்
பயன்பிறப் பறுதல், வநந்தனி லிருந்த மெய்த்தவ ருரைத்
தார் வழங்தை யெற்குவைத் தியனே. கநந்தநங் காட்டிக்
காசுகள் பேசுங் கணிகைய ருருப்பசி நிகர்க்கும், வகந்தனிற்
குடச வசித்தருள் பவனே வள்ளலே செல்வமா முகனே. 42

கோடிமெய்க் கணக்கி லாண்டமா வலியுங் குணமிகு
பகீரத விறையும், நாடியவ் வுலகை வெறுத்தன ரென்று
னாயினே னச்சுத னலனோ, வாடிப விடையை மலைநகைத்
தெனைக்கொள் வம்மர்கள் துன்புறல் காணென், ருடிம
வடிவே மங்கைய ரமரு மருநகர்ச் செல்வமா முகனே. 43

ஆயுளோ வற்ப மையகோ தொழில்க ளளவிலை யள
விலை யவற்றில், நோயுக ளுறவே வியமநத் தோடும் நொண்
டிய கரமென வலைந்தேன், பேயுட னாடும் பெருஞ்சதா சிவ
மாம் பிரமநன் னிலைபெற வருளாய், நாயினுங் கடைய
நாயினுக் கையா நாதனே செல்வமா முகனே. 44

வாயொரு கோடி பேசிடும் வடித்து வணங்கிலா மந
முல கெல்லாம், போயலைந் தொன்றும் பொருந்திடா வருந்
திப் புகுந்திடு மடக்குமா றருளாய், சேயொடுந் திரித னங்
கைமார் தேவி சிறியசிங் காரனோ டுலவ, லாயொளிர் பொ
ருள்வை வளநகர்க் கரசே யரதநச் செல்வமா முகனே. 45



சந்தந மபிடே கித்திட வேண்டிச் சதுர்முக னொக்கு
மெய்ஞ் ஞாந, வந்தனி யுருவ னுகந்ததே சிகன்பா லளித்த
பொற் காசைநீ யமைபால், வந்தநம் புரிந்து வாங்கினை
கொல்லோ வழங்கிடா தெடுத்துவந் தனையோ, கந்தனுக்
குரிய காசது தானோ கழறுதி செல்வமா முகனே. 46

நினைபவர் தமக்கு நின்மல பதத்தை நிகரற நொடியினி
லுதவும், அனையுயர் கருணை யுருவனே யெனினு மடியனை
நினைந்திடா தெனையோ, வினைபல பலவே வெங்குண மிக
வோ வேட்கையே வடிவனோ வெய்யோன், றனைக்குளிர்
மநனோ வருளுதி தயையாற் றற்பரா செல்வமா முகனே. 47

காலமோ கடிது கழிந்துகொண் டேகக் கடையனேன்
கழல்கரு தாமல், ஞாலமே லுழன்று நாத்தடிப் பேற
நவின்றுகொண் டிருந்திட னலனோ, ஆலமே யமுத மாக்
கிய சுவர்ண வருநகர்க் கிறைவனு மழகார், கோலமா
மாதும் பெற்றருள் குமர குருபர செல்வமா முகனே. 48

புன்மண நிறைந்த வவயவ மதனைப் புனுகுசவ் வா
தென நினைந்து, கன்மமே புரியு மேழையைக் காத்தல்
கடனின தல்லவோ கருணை, நன்மண வடிவ நாற்புறம்
விருத்த நல்லகா விரியரு விகள்பாய், தன்மநன் னகர தனிச்
சுடர் விளக்கே தாணுவே செல்வமா முகனே. 49

நாரியை யுடைய சீரனே போக நலமெலா நமக்கென
நினைவன், காரிகை விடுத்து வாதனை விடுத்த கல்விதேர் முநி
வரன் கருதான், வீரிய மிகுக்கி னோஜசாம் புகழும் விளங்
இடு களங்கமில் பதமாம், ஒரியல் பருளி னுய்யலா மருள்
செய் யொண்புகழ்ச் செல்வமா முகனே. 50

மன்னனு யிருந்தென் மங்கைய ரறுவர் மலரடி வருடி யென் மாமேற், சொன்னபீ டிகையில் வந்திடி னென்னே துறக்கவிந் திரனுறி னென்னே, இன்னலே யில்லாப் பதம டைந் தல்லா வின்பமெய் துறவிலே யருளாய், கன்னனே யென்னக் கொடையர்வாழ் பொருள்வைக் கடவுளே செல் வமா முகனே. 51

நிட்டையி லிருந்து நிகிலமு மறந்து நிகரிலாச் சுகக்கட லழுந்தின், பட்டவித் துயர மியாவுமே பயனும் பாடமாத் திரத்தினிற் பயனில், துட்டர்கள் வரினுந் தொடர்பினு லறத்தைத் தொடர்ந்திட நடந்திடும் பெரிய, சிட்டர்வாழ் பொருள்வை வளநக ரிறைவ தொந்திமெய்ச் செல்வமா முகனே. 52

வேதமோ தியருஞ் சாத்திரந் தெரிந்த விமலரும் விபு தரு மிருப்பக், கோதததே வடிவ மாகியு வெனையுங் கொள் ளுத லருள்செய லெனனே, நாதனுந் தாமு நடத்திய தவத் தால் நகரெலா மருந்ததி வசிட்டர், ஆதல்செய் வடமீன் வளர்தரு நகர வம லனே செல்வமா முகனே. 53

சிவவடி வலது செகமிலே யிருப்பின் செப்பலெப் படி யுண்மை விடுத்திங், கவமதே யறிவை யன்றியொன் றதனை யையகோ மநத்தினி னினைத்தல், தவவடி வெடுத்துந் தமி யனே னலேதல் சந்நிதித் திருவுள மறியும், உவமனே யில்லா வறத்தின ருறையு மூருளாய் செல்வமா முகனே. 54

அடையவேண் டியதை யடைந்தின்ப மாகி யமர்ந் திடா தையகோ பறவை, கடையதே யாய தருவிலங் கென வே கழித் திடின் வேசரி யென்பர், முடையுடை யாக்கை யகமென லொழித்து முத்தியை மேவுநா ளுளதோ, விடை யினில் வருமெம் முயிர்த்துணே யாய வேதமார் செல்வமா முகனே. 55



நிராசையை யலது தெய்வமு முண்டோ நிகழ்த்துதி யென்பதை யுணர்ந்தும், துராசையின் மூழ்கித் துயர்க்கட லாழ்ந்து துஞ்சுத லழகுகொல் லுரையாய், வராசலன் புதல்வி சௌந்தர்ய வல்லி வயிறுதோய் வாரணு நநனே, பராசரன் புதல்வற் பாரத மெழுதும் பண்ணவ செல்வமா முகனே. 56

உளநினே வில்லாப் பரபதத் தநிச மொன்றியே துயரெ லா மொழித்துத், தளர்வற விருத்த லென்றுகொல் லறியேன் றயவுசெய் தருளிடல் வேண்டும், களவுறு மநத்தன் கய வரி னுறவன் கண்ணிலாக் கசடுறு மேழை, யளவறு பாவி யடியனே னநக வறிவுருச் செல்வமா முகனே. 57

கருதிய கருத்தை யொடுக்கியே விகற்பங் கழன்றதிண் சமாதியை யடைந்தே, வருதிரை யோய்ந்த கடலென விருக்கும் வண்மையென் மீதிரு கால்கள், ஒருதரு வென்னு வுறைவிடஞ் செயுமா வும்பவெற் கருளுநா ளுளதோ, ஒருதிரு மொழியிற் பிறவியை யொழிக்கு முயர் குருச் செல்வமா முகனே. 58

சகந்தனிற் பிறந்த பிறவியை யோரின் சண்முகன் றமையநீள் கடலி, னுகந்திரு கரையின் மணலினு மதிக முனேத்துதி யிப்பிற வியினும், அகந்தனிக் கரியென் றறிந் திடா தொழியி னேயகோ வுய்வதெப் படியோ, உகந்தசற் குருவின் வழியடி நாய னுனியருள் செல்வமா முகனே. 59

பயந்துமெய் மறந்து படியினி லுழன்று படிறுடைத் தேகமே யகமாய், நயந்துகொண் டாடும் புலேயனே னின்ரு ணுடுவ தென்றுகொல் லறியேன், வியந்துஸ்வர் ணேசேர் மெச்சிட வெளிதின் மிளிருஞ்சங் கற்பத்தா லுலகைப், பயந்தவள் பயந்த பண்ணவ கரியின் படிவனே செல்வமா முகனே. 60

எதனையா னென்ன லிச்சட மாகி யெனதென விருப் பதுள் ளெந்தாய், வதநமெய்க் கரியி னுருவனே கரியாய் வயங்குத லென்றுகொல் லருளாய், சுதனென விருந்தும் மூவரை யேவுஞ் சுதந்தர சொல்லணு வாற்றல், மதநனைப் பொடித்த மதநனே விதந மாற்றிடுஞ் செல்வமா முகனே. 61

விடயவா நந்த மற்பமா மதனை விரும்பியே துயருறன் மலையாம், தடையிலாப் பிரம வாநந்த முளத்திற் றங்கியு மங்கின னிதிமேற். படர்விழி யிலர்கள் படர்ந்தென வந்தோ பாவியை யாளுத லென்றோ, நடநநா யகன்றன் புதல் வனே நளிந நற்பதச் செல்வமா முகனே. 62

தன்னுளே விகற்பித் தெழுந்ததோர் விகற்பந் தவிர்ந் திடிற் சகமிலை யறிவே, மன்னுறு மநமு மதன்மய மாகி மலர்ந்திடு மகிழ்ச்சியும் பெருகும், அன்னதே யியற்கை யென்னினுஞ் செயற்கை யஞர்க்குழு வண்மிய தென்னே, அன்னையே முன்னம் பாற்கொடென் றழுங்கு மரும்பெருஞ் செல்வமா முகனே. 63

மறைமின லிடிகள் மலைகடன் முதல மாண்புடைப் பொருள்களைக் கண்டும், குறைநெடுங் கணியின் மைந்தநீ யிலையென் குறையகன் றிலரறி விலர்கள், தறையிடுங் குழலி நிழற்றழை நோக்கித் தழைநிறை வயலெனத் தயங்கும், மழைநிறை பொழிலி னெழிலுறும் பொருள்வை மாமணிச் செல்வமா முகனே. 64

மெய்யினி னீறுங் களத்திற்கண் டிகையும் விளங்கு கைச் செபமணி துலங்க, பையவே வாயி லைந்தெழுத் தம ரப் பதநின தாலயஞ் சுழலக், கையுறப் பயின்ற மெய்யடி யவர்க்குக் கயிலையோர் காதம தாகச், செய்யுமெய் யுருவ வையனே துய்ய தெய்வமே செல்வமா முகனே. 65



நரைசரை யடைந்து நடைமிகத் தளர்ந்து நயநங்கண் மிகவும்பஞ் சடைந்தும், குரன்மிக மெலிந்துங் குழைசெவி யவிந்துங் குறுகியே மெய்யெயி றொழிந்தும், வரமுறும் விழைவு கிழமுரு திருத்தல் வழங்குதி யெதனினு லென்றே, திரமுறப் பணியு மன்பினர்க் கருளுஞ் செல்வமே செல்வமா முகனே. 66

செல்வமுஞ் செருக்குந் திருநிகர் மனையுஞ் சிறுவருஞ் சேனையு மேனைக். கல்வியுங் கலனுங் கலவியுங் கவினுங் காடுகள் மேடுகள் பிறவும், கல்வனை நமன்றன் றூதுவர் வரினே கடுகள வுதவுமோ கழறாய், நல்வழி யருளு நாயக தூய நம்பனே செல்வமா முகனே. 67

கங்கையின் புதல்வ னெனப்பொறி யடக்குங் கடுந்திற லடைந்திட லென்றோ, திங்களிற் குளிர்ந்து திநகர நிருளச் செயுந்தவ வொளியுடை யவர்கள், பொங்கியே போற்றும் புண்ணியா நண்ணுப் புலையனுக் கருளுவாய் பூன்ற, துங்க மெய்யறிவே முத்தனே நித்த சுத்தனே செல்வமா முகனே.

குருவடி வாகி வீரமா தவனுக் குவலயத் தெனைநிகர்த் தெழுந்து. ஒருவடி வருளி நின்றதை நோக்கி னுயர்வதா மொண்டனிப் பிறவி, மருவுறும் பயனைக் குறைவிலை யெனினு மநமொடுங் கிடமருந் தருள்வாய், தெருவினி லிருந்து பணிபவர்க் கருளுந் தேவனே செல்வமா முகனே.

நின்னுடை யெழில்கொ ணின்மல மேனி நிரந்தர மென்மநத் திருப்பப், பன்னுறு முனது நாமமென் னுவில் படர்தரக் கிடைத்திடி னுய்ந்தேன், தன்னுறும் பெரியர் தவம்புரி மகிமை தங்கிய பொருள்வையிற் றங்கும், பொன் னெழிற் பூசை கொளும்புழை வதநப் பூரணச் செல்வமா முகனே. 70

விகற்பமி லாங்ம வத்துவில் விசுவம் விரிந்திடன்
மெய்ம்மையி னிலையால். அகப்படு மிதனை மறந்தநு திநமு
மையகோ வெய்யதி லுழன்றேன், சுகப்படும் வழியி லுள
நிலைத் திடுமா சொரியருள் சுந்தர முருகன், றகப்பனுக்
கருள்வன் றமையனே சாந்தத் தவவுருச் செல்வமா
முகனே. 71

அலைந்திடு மநமே யுலகம தாகு மலைவினை யறுத்திடி
னுலகங், குலைந்திடுஞ் சுகமுங் குவிந்திடு மிதனைக் குமதி
யான் குயிற்றில னென்னே, மலைந்திடும் பிறவிக் கஞ்சுறும்
பெரியர் மருவியே பிறவியில் சேரி. மிலைந்திடும் பொருள்வை
யரசுசெய் விமல மின்னெழிற் செல்வமா முகனே. 72

விருப்பொடு வெறுப்புஞ் சந்தத மேவி வியனுல
குண்மையென் றெண்ணி, அருப்புப்பொன் முலையார்
மோகமே சிரங்கொண் டலைதர னுயென வழகோ, கருப்
புவின் மாரன் கடிமலர்ப் பகழி காணுபு கண்டிறந் தெரிந்
தோன், பொருப்புவில் லழகன் புதல்வனே யமுத பூரணச்
செல்வமா முகனே. 73

நாமமொ டுருவ நழுவிட னுனென் னுடிடும் விடய
மென் னெனதென், பூமமெய் யுருவ மன்றியொன் றேனும்
பொலிந்துரு தாதலிற் புகலோய், சேமவப் பதத்தை
யடைந்திட வருளாய் செல்வர்கள் தாநீர் பெருகக்,
கோமகிழ் பொருள்வைக் குரிசிலே மறைசொல் குணநிறை
செல்வமா முகனே. 74

காரணம் விடுத்துக் காரியம் வாக்கிற் கதித்திடு மல
துவே றிலையால், ஆரண மதுவு முவமையொ டருளு
மையனே யதன்கணே நிலைப்பான், பூரண கிருபை செய்
திட வேண்டும் புகழ்வதென் னியறி யாயோ, வாரண மூகவ
வண்பெரு வயிற வடிவுடைச் செல்வமா முகனே. 75



குறையிலை நினது பதமலர் குறுகிக் குவலயத் துறு
பவர்க் கெனலான், மறைமொழி நினைந்து மறுவின னடி
யன் மாணருள் தந்துகாத் திடுவாய், மறையரைப் போலப்
பறையருங் குடைய மகிழ்தருங் காவிரி விரியும், நறைமலர்ப்
பொழில்சூழ் பொருள்வையம் பதிவா ணுயக செல்வமா
முகனே. 76

உண்டதே யுண்டு முடுத்ததே யுடுத்து மோதிய கலை
யையே யுரைத்தும், கண்டதே கண்டுங் கலவியே கமழ்ந்
துங் கடையனு பிடிற்சிரி யாரோ, பண்டொரு தவனுக் கிர
வினிற் றூது பரவைபாற் சென்றவ னீன்ற. விண்டவர்
வணங்கும் விமலனே முமலம் வீட்டிடுஞ் செல்வமா
முகனே. 77

மண்டலம் புகழ வாழ்ந்தவர் தாமு மடிந்தபோ தொன்
றையு மருவா, தெண்டிசை யேக வெறிந்திடா துறைந்திங்
கென்பயன் கண்டன னடியேன், தண்டமுங் கருணை யாயு
றப் புரியுந் தண்ணளி வீரமா தவனு, யண்டர்கள் புகழ வந்
தரு ளிறைவ வரும்பொருட் செல்வமா முகனே, 78

தந்தையோ சிவமெய்த் தாயரோ சிவைநற் றமையரோ
நீயுங்கந் தனுமே, செந்திரு மாமி சீரரி மாமன் றிகழுமைத்
துநனயன் றமக்கை, யந்தண னுவில் வீற்றவ னெனவே
வையவிம் முறையுற வருளாய், கந்துக முலையர் நிறைதரும்
பொருள்வைக் கடவுளே செல்வமா முகனே. 79

முலையினுந் தகரத் தலையினு முடுத்த முளரியங் கலையி
னுங் கருங்கண், வலையினு நிதம்ப வலையினு மலையும் வஞ்ச
னுக் கருள வெண் ணுவையோ, தலையினும் வணங்கிக் கலை
யினு முளத்தைத் தளையுமெய் யடியவர்க் கருள்வோய்,
புலையனுந் தவளக் கலைதிரு நீற்றைப் பொதிநகர்ச் செல்
வமா முகனே. 80

மலவுட லதனின் மயங்கலென் னேரின் மாலல துளது கொன் மருவா, ரிலங்கலே நகைத்த வெழிற்சுவர் ணேச னெழிற்பெயர் நாயகி யீன்ற, தலவிநா யகனே தயைநிறை கண்ணு தக்கசிங் காரவேற் றமைய, மலமற வருள லென்றெ னக் கையா மாசிலாச் செல்வமா முகனே. 81

மெய்யறு விடயந் தனைச்சுயம் விடுக்கின் புகழ்திகழ் வீடுமா மதுவே, பையவே யகலி னுயிரையுங் கொண்டே பரதவித் திடவலி தேகும், ஐயகோ விதனை யுலகின ரறியா வரியமா யையின்செய லென்னே, வெய்யவன் விழுகாச் சோலேசூழ் பொருள்வை வித்தகா செல்வமா முகனே. 82

சிங்கமே லமர்ந்தெண் புயத்தனு கியதுஞ் செறிமயி லாறுதோட் டிகழ்வும், இங்கித நான்கு புயங்கய வதந மிரத்தமெய் யிருபுய வெளுமை, யங்கமா கியது மநுதிந மநத்தி லன்புட னினைந்துவாழ்த் திடுவேன், சங்கரி குமர சங்கரி மருக சந்ததச் செல்வமா முகனே. 83

கயமுகன் பால சந்திரன் சாக்ஷிக் கணபதி துண்டிநா யகனே, டயமுறு மிறைவன் றமையசிர்ச் சிந்தா மணியணி யையனே யென்னு, நயமுடன் செபித்துப் பரவியே வாழ்த்து நாளுமுண் டோவென நினைவேன், பயமற வருளும் பண்பனே மறைகள் பகர்ந்திடுஞ் செல்வமா முகனே. 84

அறுகொடு நீரு மளித்திடும் பாலர்க் கரியகல் வியினை மிக் கெளிதில், மறுதிநத் தருளும் மாண்புமற் றெவர்க்கு மருவிடுங் குருவர வருளாய், சிறுவருந் தேவர் குருவொடும் வாதிற் செயங்கொளு மாற்றல்கைக் கொண்ட, நறுமணச் சோலேப் பொருன்வைநன் னகர்வா ணுதனே செல்வமா முகனே. 85



வாதனை யிலது மங்கைய ராசை மறந்துமற் றைய ரையான் காணின், திதகல் தாயென் சௌந்தர்ய தேவி திருவுரு வெனமந நினைய, நீதரல் வேண்டு மருளினை யுனையா னித்திய மறந்திடே னிமலா, போதொடு நீர்கொண் டருச்சனை புரியும் பொருள்வைவாழ் செல்வமா முகனே. 86

நினைநிதம் பணிந்த வௌவையாந் தேவி நிகரறு மதநனைப் பொடித்தே, யனையென விளங்கல் கண்டுயா னினதம் மடியிணை மருவின னருளாய், புனைதரு மாலே யமரர்கள் கவரப் புரிசைக ளிலங்குறும் பொருள்வைத், தனைநினை யமலர் வணங்குறு மிறைவ தற்பரச் செல்வமா முகனே. 87

சுகமய மாகுஞ் சொல்லுறு முலகஞ் சொற்றிடி லுண்டெனப் பெரியர், நகைமய மாகு நாவிலே வளரு நற்றவ மிலரறி வாரோ, மகமய மாகும் பொருள்வைமா நகரின் மாகமோ மாகரை மறைக்கும், புகைமய மாகு மெனப்புகழ் நகரப் புங்கவச் செல்வமா முகனே. 88

தகர்சிரந் தாங்கு மகிமையே யலது தங்கிடும் பயனிலே சிவன்றன். பகையெனல் வெளியா யிருக்கவுஞ் சிவனைப் பாடிடா வன்மையென் வன்மை, புகாருஞ் சீட ருடல்கெட வேவும் புங்கசிங் காரவே லிறைவன், அகங்குடி கொளுமென் னண்ணலே யரியோ யப்பனே செல்வமா முகனே. 89

வெளியிற்செல் காற்றிங் குளின்முனின் மீண்டு மிளிர்தரா விடினென்னு மிவைகள், களியிற்சென் றிருத்த லென்னையென் றுள்ளே கருதிடிற் பெறுதலாம் நினது, அளியிற்செய் பாத மாநந்த வடிவ வம்பிகை நந்தந மழையின், தெளியிற்செய் விளையும் பொருள்வைமா நகர்வாழ் செழுஞ்சுடர்ச் செல்வமா முகனே. 90

தன்னுடற் றசையை நுகர்ந்தில ரழுகித் தளைபுழு வொழுகயத் தசையை, மன்னுபொற் கலத்தி லமைத்துள மகிழ்ந்து மலப்பொதி நிரப்புவர் மறைத்தே, இன்னவ ரிவணின் றேகினெந் நரகை யெய்துவ ருரைத்தியெங் குரவ, பொன்னுறை பொருள்வை மாநகர்ப் புரிய புன்னகைச் செல்வமா முகனே. 91

மறுடனு யுற்றேன் கலைகளுங் கற்றேன் மலரடி பரவிடப் பெற்றேன், எனுடல்வே றறிவு வேறெனப் பெற்றே னிலங்கது மியானெனப் பெற்றேன், இனியருஞ் சிவந் முத்தியி லிருந்திங் கின்பமே யடைந்திட வருளாய், கனிநிறை பொழில்சூழ் பொருள்வைவா ழிறைவ கண்ணு தற் செல்வமா முகனே. 92

மாமிறந் தரிய வாதனை யிறந்து மன்னிய சமாதியி லிருந்து, கனவறி வுருவாங் கண்ணினி னினைக்காண் கரு தரும் பாக்கியங் கதுவும், திடமெனக் குளதோ திசைமுகன் படைப்பைச் செய்யுஞ்சிங் காரவேற் றமைய. அனமகிழ்ந் தடங்க லழகுட னிலங்கு மருநகர்ச் செல்வமா முகனே. 93

கனியினிற் பிரிய நினக்கென வறிவேன் கந்தனு நீயு முன் முரணித், தனியனை வலம்வந் துற்றதா லெனது தனை மாக் காயயி லாபோ, இனியெந்நா ளறியே னின்புரு வாகி யிந்துவைப் போன்முகங் குளிர்ந்து, தனியனு யிருத்த லறிகிலேன் றயைசெய் தமையனே செல்வமா முகனே. 94

தண்டையந் தாளுந் தனிப்பெரு வயிறுந் தலையினற் பெருமையுந் தாவி,விண்டல மேவு மூஷிக நடையும் வேண்டிய கொடுத்திடுங் கொடையும், அண்டர்கள் போற்றும் பூதவே தாள வரியதோர் படையுங்கண் காணல், துண்டிரா ஜேச வெந்நா ளுரையாய் துகளறுஞ் செல்வமா முகனே. 95



கெட்டதே நினைந்துங் கெட்டதே மொழிந்துங் கெட்டதே யியற்றியும் திரியும், மட்டியா மெனையு மடிமையாய்க் கொண்டே மலரடி பரவிடச் செய்த, சிட்டமாக் கருணை யென்னென வுரைப்பேன் செழுந்திரு வமைத்துப்பூ சனை செய், யிட்டனு ரீன்றவிறைவளே நிறைவே யின்பமே செல்வமா முகனே. 96

அறிவுரு வாய வருவமே யகில வறிவுறு மருவுரு வரசே, பொறிசெலு மரிய வுருவமே கரியின் புடையமர் வல்லபை கொழுநா, நெறிசெலு மடியர் தவவுவர் மண்ணுர் நிகரறு பொருள்வைமா நகரோய், மறைமுடி யறையு மாண்புமிக் கவனே மணிமுடிச் செல்வமா முகனே. 97

முப்புர மெரிக்க வெந்தையு மகிடன் முடிகொள வன்னையு மாமன், செப்புமா வலியை யாழ்த்திட மதநன் செயங்கொள வுலகினை முருகன், கப்புறு கயத்தின் முகத்தனைக் காதக் கடையனேன் மநத்தினைக் காத, அப்பமு மவலுங் கொளுநினை யலதிங் கடைந்திலஞ் செல்வமா முகனே.

எனையறி யாதிங் கெவ்விடத் திருந்தோ வெழுந்திடும் வாதனைக் குழுக்கள், உனையறி யாமற் றடுத்திடுஞ் சாந்தி யுறச்செயா தொடுக்கிட வருளாய், வினையறி யாமல் வெளியுளில் விகற்பம் விரும்பிடா வறுகைச் சமாதி, தனையறி யோகர் போற்றிடு மிறைவ சாந்தனே செல்வமா முகனே.

மூவர்கள் தமக்கு முத்தொழி லளித்த முதல்வனே நின் கழல் போற்றி, ஆவல்செய் சித்தி புத்திவல் லபையார்க் கருளிடும் வள்ளலே போற்றி, ஏவுமெம் முகந்த தேசிகன் பணியு மெழிற்கழ லிறைவனே போற்றி. மாவுறும் பொருள்வை வீரமா தவனே மகிழ்தருஞ் செல்வமா முகனே. 100

சுபம்! சுபம்!! சுபம்!!!

செல்வ விநாயகர் செம் பொன் மாலை

முற்றும்.



உ

ஓம் மகா கணபதயே நம:

சிவ மயம்.

# சௌந்தரிய நாயகி
# பிள்ளைத் தமிழ்.



### விநாயகர் வணக்கம்.

திருவளர் பொருள்வைத்த சேரியிற் றெய்வமா தேசி
கோத் தமர்கள்வாழ்த்தத்-தேவதே வென்றுபுகழ் மூவர்கோ
னவதார தேசிகனு கந்ததேவன், தருவளரு சமிவநத்
தேவியா ரருள்பெற்ற தாயினுமி கக்கருணையான்-தாண்டவ
னெ னுந்தெருளி ணுண்டவன வற்குமரு டாதாவு மாகி
யுள்ளோன், உருவளரு மன்பினுக் குள்ளகமி கக்கரைந்
தூற்றெடுத் தென்னவோத - வோருபத் தரைமாத் திரைப்
பொலங் காசுதரு மொண்களிற் றைப்பணிகுவாம், கரு
வளரு மண்டகோ டிகளெனக் கதுவியுங் கன்னியென
வேதமோதுங் - கவுரியாஞ் சவுந்தர்ய வவுரியாங் காகயற்
கண்ணிசெந் தமிழ்தழையவே.

## முதலாவது
## காப்புப் பருவம்.

---

### திரு மால்.

கொடிகொண்ட தேரின்மிசை யேறிவந் துறவினர்கள்
கூடிநிறை போர்க்களத்தே-கூடாது போரென்று நாடாத
விசயனைக் கூடுநீ வாடலென்கொல், துடிகொண்ட மறை
யின்முறை மூவாறு மோதியே தூண்டியரு டேவதேவைத்-
துங்கநா ரதர்புகழ வங்கனைக ளுடனின்று தூய்மைகாட்



டியவிறைவனைச், செடிகொண்ட பலமலர்க ளுளவிடுநெடு
தூவியே செயசெயவெ னப்போற்றுதுஞ்-சிறியனையு மொரு
பொருள தாகவெணும் வீரநற் சேகரத் தெம்பிரானை, யடி
கொண்டு பரவுமா றின்றருளு செல்வியினை யாரழகு நாமி
யானை-யாரணந் தேடரிய தேவியைப் பொருள்வைநக
ரரசியைக் காத்தருளவே. 1

### பரம சிவம்.
வேறு.

தாரைக ளுயக சேகர னைச்சக தாதர மாகரனைத்-
தாரைதரச் சயை கந்தர தாரசு தந்தர னைச்சிவனைக், காரைய
சாயக கங்கைய னைத்தில கங்கண தானவனைக்—கங்கண
விடதர மங்கையி னிடதர கயிலைய னைத்தொழுவாம்,
காரையி னிலாயியை யேவிய தேவியைக் காயமு தற்கரி
யைக் - காணுவர் பேணுவர் நாணுவ ராணவங் கருதா ரொ
ருதாயைச், சீரைய ருதருண் மாதிரி மாதவ தென்னன
ருஞ்சுதையைச்-செந்திரு வாணிபு கழ்ந்திடு சுந்தரி சேவக
காவெனவே. 2

### சித்தி விநாயகர்.
வேறு.

மாசகன்ற வடியர்திந மநம்பணியு மவனை-மாமறைக
ணேதிமொழி மலர்ந்தருளு பவனை, வீசுகின்ற புகணிறைந்த
வீரமா தவனை - வீதிதொறு மெளிதமரும் விண்ணவர்விண்
ணவனைச், தேசிகன்றன் பூசையினிற் றிநமமரு பவனைச்-
சித்திவிநா யகநம்பிர ணவனையடி பணிவாம், பேசுகன்று
நினைதொறுமே பேரமுதே யூட்டிப் — பேணுசவுந் தரிய
மெனும் பிடியினைக்காத் திடவே. 3

### முருகக் கடவுள்.
வேறு.

அம்மை சினந்து கனன்றனளா லைய நினது சென்னி
மிசை-யார்ந்த வனையை யெங்கேனு மகல விடுத்தி யென்ன
வுமே, செம்மை யறிந்த சண்முகனே சிரத்திற் சிரமே

யுறைந்தவட்குச் - செல்லுங் கதியைப் புகல்கவெனச் செந்தீப் பறந்த சேடமுக, மிம்மை யுததி சலதிசல நிதிநீ ராழி யூழிகட-லென்ன வருளு மாறுமுகத் திறையைப் பணிந்து துதித்திடுவாம், மும்மை மறையின் முடிகளினு முடுகி மோந நிலையுற்ற-முநிவர் கனியுஞ் சவுந்தரிய முதல்வி தனைக் காக் குகவென்றே. 4

நான் முகன்.

புகுந்து மரையிற் றேடியபின் புரிந்து தவத்தைத் திருவருளாற் - புதல்வர் பதின்மர் முதலாகப் புவந மேழே மூவற்றுளவாஞ், சகந்தந் தினிதின் விளையாடுஞ் சதுர்மா முகனைச் சதுர்மறைதேர்-சாம்ப்ர தாயப் பெருவாழ்வைத் தாழ்ந்து வணங்கித் துதிக்குதுமால், உகந்த குரவன் றனை யுதவி யுலக முய்ய வுவந்தருளு - முமையென் னமையைக் கமையானே யுயர்ந்தோர் காணு முண்மையினைப், புகழ்ந்த தவர்க டவம்புரியச் பொருள்வை நகரி லெழுந்தருளும்-போத வடிவச் சவுந்தரியப் புநிதப் பொருளைப் புரந் திடவே. 5

தேவேந்திரன்.

வேறு.

பெரும்போர்பு ரிந்தபிர தர்த்தனற் கிததமப் பிரமமாம் வித்தையதனைப்-பேசுமுப தேசமிகு சாத்திரதி ருட்டியாற் பெருவாம தேவனென்னக், கரும்பேவி லாளனைக் கண்ட கண் ணுளனைக் கமலால யத்திலுதவுங்-கார்வாக னப் பெருந் தார்வாக னற்படைக் கையனைக் கைதொழுதுமே, விரும்பேமெ தொன்றையு மொன்றைய மின்றியே வீடாம லகமென்குவேம் - வீணுள்கள் போக்கிலேம் வாணுள்க ளுணுளும் வீடுளே மென்பருள்ளச், சுரும்பையருள் வல்லியைச் சொல்லியரு ணெல்லையைச் சுந்தரக் கொப்பு டையளைச்—சுந்தரியை யந்தரியை யந்திர துரந்தரியெந் தோகையைய ளித்தியென்றே. 6



திரு மகள்.

வச்சத் தலத்தி லெழுந்தருளி வழங்கி யிருநால் வகையாக - வடுவின் கநக தாரையினுல் வள்ளக் கனியின் வளத்தையருள். புச்சப் பொருளெம் பொலம்புரியர் பொருள்வை நகரி லெழுந்தருளப் - புரிந்த தவத்தால் வரம்வாங்கும் பொன்னின் பதங்கள் போற்றுதுமே, பச்சைப் பசிய கொடியாளைப் பாலைப் பயக்கு மடியாளைப்-பகரு மிடையின் மிடியாளைப் பார்முன் னுதவும் படியாளை, இச்சைக் கிசைந்த பதத்தாளை யெளிய னுளத்தி னிதத்தாளை - யெழிலின் வடிவத் திறத்தாளை யினிது காத்தல் கடனென்றே. 7

கலை மகள்.

வேறு.

மூவிரவு சதநோற்ற முடிப்பதுமன் பத்தினிக்கு-முளரியடி முடிசூட்டி முற்பிறப்பும் பிற்பிறப்புந், தாவுவண்டத் தொகுதிகளுந் தனிகாட்டி யினியறிவைத் - தானறிய நனி காட்டுங் கலைமகடன் றுடொழுவாம், ஆவிரவி மதிபூமி யம்பநல மநிலமொடு - மம்பரமு மாகியவை யாகாளை யசங்கத்தான், மேவியகம் பிரமமென மிளிர்ந்தாளைச் சவுந்தரிய-மெல்லியலை நல்லியல்பான் மேலாகக் காவெனவே. 8

துர்க்கை.

வேறு.

மதுகைடப தூமிர லோசந மகிடாசுர சும்பநி சும்பரை-மதமேமிகு சண்டனை முண்டனை வதமேபுரி சோணிதபீஜனை. யதமேசெயு நாயகி யாகிய வடல்கோளரி மேல்வரு மாயியை - யலரேகொடு நாளுமெய் யன்புட னடிமாமலர் பேணுது மாணுற, பொதுமாமறை யோதுத போதநர் புகழேமிக வன்பொடு மின்பியைப் - புரமேபுரி மாநெறி

தூளிகொள் புதுமாமரை போதிய தேவியை, அதிபாதகமீர் மனு வாடிய வடியார்துயர் சேய்மைய தாயிட - வடியேன் மய லோயிட வேயரு ளழகாம்பிகை யைத்தனி காக்கவே.9

சப்த மாதர்கள்.

வேறு.

விரிசிற கெகிநம துறையபி ராமியை மறையாளை-விடையிடை யடைமக தீசிபி நாகியை யிறையாளை—விதிகௌ மாரியை மயின்மிசை நெடுவே லிளையாளை-விரையா வரியினி லமருந ராயணி வளையாளை, பரியரி யிவருவ ராகிய லாயுத முடையாளைப் - பழவிழி பதுசத கரிவரு குலிசப் படையாளைப் - பழுகழு தெழுகளி காளி யைச் சூலம தணிவாளைப் - பதுமம தெடுகர மொடுமடி யனுமடி பணிவேனே, பரனரை யரனொடு பரவிட நிரவிடு பணியாளைப்-பளகிள கிடவடி யடியனின் முடிமிசை யணி வாளைப்-பரமப ரமுமில பகிரக மிகமில படியாளைப்-படுதர மதியரு மிடுதர மிலவல வடியாளை, உரகரி யொடுவிரி கரி யென வுறைதர வுரியாளை - யுறுநினை வுகளற வுணர்வது மறவுறு மரியாளை - யுதவியும் பதவியும் பணிகளு மணி கொள வுரவானை - யுதவிய பதவியன் முதல்வியை யதிதிதி புரிவானே. 10

முப் பத்து மூவர்.

வேறு

இருவர்ம ருத்துவ ரெண்மர்வ சுக்களொ டிரா ருதித் தர்—இனியவு ருத்திர ரேகா தசரிவ ரென்றன்ம நத்தின ராய்க், கருவுத ரத்திடை யைவகை கடையதி லெண்வகை கதுவாமே—கடையனை விடையனை யடையென வருளிய கருணைப் பெருவாழ்வை, அருகுக னையன் சடையினி னதியென் அம்புலி யென்சிகையில்—அவியுணி நுதலென்



அரவிறை யுரனிற் புரளுத லென்னன்னே, கரியுரி கடியென் சகநம திடையிற் காணுத லென்னீண்டே — கழலுதி யெனநா ணகைமிகு கவினைக் காத்திடல் கண்டீரே. 11

1. காப்புப் பருவம் முற்றிற்று.

---

இரண் டாவது

## செங் கீரைப் பருவம்.

வேறு

---

ஹேரம்ப வேனம்ப வென்கணென் நின்சினுங் கென் காதை வன்கந்தனு—மீர்த்துத் திருக்கிற னேன்கந்த விச் சேட்டை யென்கண்கண் முன்பெண்ணினுன், ஆரம்ப நின்னதும் ஆனைமுக வாகுமோ வம்பவென் றும்பிக்கரம்-அளவிட்ட ளந்தனன் என்னவவ் விருவரையு மாலிங்க நம்புரிந்தே, நீரன்பு கண்சோர நின்றனம் பால்சோர நிர்த் தபர்த் தாவைநோக்கி—நீர்பாரு மென்னவே யையனைக் கியமாற்ற நீண்மகிழ்வு நீடுமன்னுஞ், சேரம்பு தங்கணிறை நீபால யத்தேவி செங்கீரை யாடியருளே, சிக்கற்க டுத்த பொருள் வைக்கும்பு ரச்செல்வி செங்கீரை யாடியருளே. 1

ராமனிற் பூமிகேள் பீஜங்கு பேரனில் லாங்கலம் பல தேவனில் - ராஜமகி ஷம்பாநு மைந்தனின் நல்லிடப நாத நின் பாற்பாலமோ,சேமதிரி சூலமாம் வாமயான் நின்னன்ன சீனிதா னம்புரிகுவேன் - சேய்சின்ன வன்மாடு மேய்த்திடு வன் கின்னையான் செய்பயிக் கந்தன்னிறுற், பீமவுக் கிர வாம தேவனே மேழியைப் பிடிகிருஷி பெரிதுசெய்தி-பேருரு மென்றுபுன் னகையுடன் பெருமனொடு பேசுஞ்ச வுந்தரியமே. சேமம்பு தைத்தெடுத் தேதும்பு ரித்தேவி செங் கீரை யாடியருளே. சீமுகப் பூமாதி தேவதே வேசினீ செங் கீரை யாடியருளே. 2

வேறு.

அவனித ழைந்திட லரனும யங்கிட லன்றிய தின்ருகு-
மவனும யங்குத லணிமனை கொண்டிட லம்பிகை யரு
ளின்றி, யெவனுமி யைந்திட லெளிதல வென்றெணி யினி
யம கற்கூவி - யெதிரிற வம்புரி சதியென வனையும்மி னிதரு
ணின் சுதையாய்ச், சிவனைம ணந்திடு மெனவய னேவித்
திகழ்மந் தரமேவிச்-சிவையைநி னைந்துத வம்புரி தரவே திரு
வரு ளால்வெளியாய். அவணயன் வேட்டவ ரத்தைய ளித்
தவ ளாடுக செங்கீரை - யளகைநி கர்த்திடு பொருள்வைந
சுர்க்கனை யாடுக செங்கீரை. 3

வேறு.

சிங்கம மர்ந்தவி ளங்குயி லம்புய சிந்தா நந்தார்தஞ்—
செநநமு மரணமு நொடியினி றுடியளி சென்ரு ளும்
பாவை, பொங்குரு யங்களு மங்கர மிந்துமு கந்தேர் செந்
துவர்வாய்-பொலியவு நலியகல் வரதமு முதவிய பொன்ருய்
கண்காண, துங்கமெ யன்புநி றைந்தவ னுந்துதி துஞ்சா
னஞ்சேலென் - றுகளில் மகளென மருவுறு வரமெனத்
துஞ்சா னஞ்சார்பாய். செங்கணி தங்கவ ரங்கம முங்
கொடி செங்கோ செங்கீரை-சிறியக ரியைய ருள்பொருள்
வையில்வளர்பிடி செங்கோ செங்கீரை. 4

வேறு

சிறியநற் சிசுவாய்வ ளர்ந்தவீ ரணிபரண தேவியும்
நாரதனுறச் - சிவனையே கொழுனனு யுறுகெணுத் தொழு
தெழச் சீர்விரத நற்றிங்களில், நெறியினிற் செய்துதவ நீள
வுஞ் சிவனையே நேர்ந்துமண வினைமுடித்து-நிமலனுட னிம
வரையி லளவிலவி லாச்சுக நிகழ்போக மநுபவித்தே, வெறி
யினிற் சலதமுற வெயிலறத் துகினகிரி விரிசிகர மேவி
வாழ - வேண்டியே யரனுடன் னுல்லாச சல்லாபம் வியனு
றக் கொண்ட மயிலே, செறியெழிற் சிங்கார வேலற்ப யந்த
தாய் செங்கீரை யாடியருளே - சிவணுபொழி லுவணமயில்
பொருள்வைப்பெ ரும்வாழ்வு செங்கீரை யாடியருளே. 5



வேறு.

இங்காக ரங்கிருமி கங்காதி தங்குமிரை யெங்கேவி
ரும்பலிதனை - யின்றேக டிந்திடுதி யென்றேமொ ழிந்திடினு
மின்பாம னந்தனியல்பைச், சங்காரி கொன்றிடுதி சம்பாகு
வேயசசி பிம்பாபி ராமமுகனுற் — சம்பாதை பம்பமுத
வெண்பால்சு ரந்துவரு தண்டார்கு யங்களணியாய்,
எங்கார ணந்துறைகள் எங்காண வம்பறைகள் எங்கேநின்
பொன்சரணுறல்—என்ருலு மொன்றிடுவன் மன்ருடு நம்
பரம ரின்றேக மொன்று மிறைவி, சிங்கார வேலனகர்
தங்காவ ருங்குமரி செங்கீரை யாடியருளே — சிந்தாகு
லந்தவிர வந்தாள்பெ ருங்கருணை செங்கீரை யாடியருளே. 6

வேறு.

நாடாது பெண்ணென்று மாணென்றும் நால்வ
கையை நண்ணுது கண்ணுதுபார்-நானிலமும் மேனிலமும்
நன்னிலமும் புன்னிலமும் நமதுவடி வானபரனே, வீடாது
நாடவுரை யாடாது கூடியே விண்ணவரு மெண்ணிட
மிகா — வீதிதொறு மாதியாய் வாதியரும் வாழ்த்தவே
வேறறுவ தென்ருங்கொலோ, தேடேது காடேது தென்
முகனு நற்சதா சிவதேவ னுங்காண்டியா-றேவாதி தேவர்
தொழு மூவாத பெண்ணரசி திருவருள் செய்வதுடனே,
சேடாதி செய்துதிந மோடாது றுந்தேவி செங்கீரை
யாடியருளே — சீவாதி மூவகையு மேவாத சிற்சொருபி
செங்கீரை யாடியருளே. 7

வேறு.

உரையுணர் வின்றிய வொளியிரு ளின்றிய வுன்ரு
ளொன்றேயா — யுனவுன வந்திடு கடபட மென்றுணர்
வுந்தா நின்ருலும், புரையறி முன்றிகழ் திரிபுடி யொன்றது
பொன்ரு நின்றேதான்—புரணம றிந்திடு கரணமி றந்துறு

பொன்ருளொன்ருகி, கரைகளி கன்றிய பெருமய லின்றிய கன்றேயென்ருேதக்—கருணைசி றைந்திடு மதகரி தந்திடு கஞ்சே மஞ்சேயோ, திரைகள லேந்த்டு திருபொருள் வைச் சிவை செங்கோ செங்கீரை—திநகர னுங்குறு பொழில் பொருள் வைச்சுவை செங்கோ செங்கீரை. 8

ஒன்றினெ டொன்றுக லந்துறு கங்கையு மொன் றெமன் றங்கையுமே — யோதிடு மங்கையு மொன்றுத டந்திரை யொண்ஜா லங்களினுல், வென்றிடு நன்றெளி தந்துப டிந்தவர் விஞ்சைய நெஞ்சையருள்—வீசுபெ றுந்திரு வேணிபு ரைந்திட வெண்டர ளம்பதுமம், துன் றிய மரகத மணிகள்ப திந்திடு துங்கா ரந்திரயம்— துரிசற வரடிட பரசிவ ரசிகே துடியிடை முடியாடச். சென்றெ ழின் மேனியு கைந்திடு சிவையே செங்கோ செங்கீரை— சிவசிவ வென்பவர் சிந்தையின் சுந்தரி செங்கோ செங்கீரை.

வேறு.

தேடுமி ரம்பைதி லோத்தமை மேனகை யூர்வசி சேர்ந் தாடத்—தேர்நட ராஜன் சந்நிதி யாடத் திருமைந் தருமாட, கூடிடு மயன்முத லமரரு மாலுங் கும்பிடு போட்டாடக்- குறையறு திருவுங் கலேயுறு தருவுங் குறுநகை கொண் டாட, பீடறு முனிவரு மிருடிய ரெவரும் பின்பின் னின் ருடப் — பேரண் டங்களு நாயக ரெவரும் பெரிதுற வேயாட, ஆடுவ ரெவரையு மரட்டிடு தாயே யாடுக செங் கீரை—யாடக மென்பதி யன்பொட மர்ந்தாய் ஆடுக செங்கீரை. 10

செங் கீரைப் பருவம் முற்றிற்று.

---



மூன் ருவது

## தாலப் பருவம்.

வேறு.

தக்கன் மகளென் றுடலிருந்த தகைமை தணந்து தணவாத-தவத்துக் கிரங்கி மேனகையின் றனிச்சே யாகிக் காளியெனும், மிக்க பெயரைப் புனைந்தருளி விளையாட் டயர்ந்து மிளிர் துகிந—மிகுந்த கிரியிற் றவம்புரிய மிலேந்த சிவனை மிகத்தேடி, புக்க வமர முநிவரன்றன் பொழியு மொழியாற் சிவசேவை-பொருந்திக் களித்தங் ககர்நிசமும் புந்தி யதிலே சிந்திக்குந், தக்க விறைவி பொருள்வைநகர்த் தாயே தாலோ தாலேலோ — தமிய னுயிருக் குயிரான தாயே தாலோ தாலேலோ. 1

தார கமட னஞுரு றுத்தத் தபித்துத் தேவர் தடுமாறிச்- சதுரா நனனைச் சரண்புகுந்து சற்று மாற்றே மோலமிட, வீர வரன்றன் வீரியத்தால் வீரி காளி தனக்குதிக்கும்—வீர குமரன் வீழ்த்துமென விசிகை யலரோன் றனைவிடுப்பச், சோர மதனுஞ் சிவன்விழியிற் றேன்று மழலாற் றூளா கச்—சோதி யவனைத் தோய்வதற்குத் தூய தவமே மேய தெனச் சார வுளத்திற் சிந்தைசெயுந் தாயே தாலோ தாலேலோ - தவமெய்ப் பிரம நிட்டையரு டாயே தாலோ தாலேலோ. 2

சிவனை விரவத் திருந்திநமுஞ் சிறந்த தவமே மிகக் குயிற்றச்—சிவனும் வடுவாம் வேடமொடுஞ் செறிந்து சிலவா தம்புரிந்தே, யவன்றன் னிடத்திற் றிடதரமா மன்பு காணு வவண்டோன்ற—வரனை மகத்தாம் வைபவத்தி லணைந்து மணந்தின் புற்றிடவும், உவமை யிலனுங் காளி யென வுரைப்ப வெம்பித் தவம்பம்பி—யுயர்ந்த விணின்கங் கையின்மூழ்கி யுதய மாகிக் கவுரியென, சிவன தருத்தங்

கொளும்பொருள்வைத் தேவி தாலோ தாலேலோ—செம் பொன் மேனிச் சவுந்தரியச் சிலையே தாலோ தாலேலோ.

வனிதை யறுவர் சுரர்நதியும் வனியு மினிய வழிவிழி நீர்—வழக்கு மிகுத்தங் கெழிற்குமரன் வயங்கு முனதன் றெனதெனவே, புனிதை புனித னுடன்போதப் போத மூர்த்தி தனைப்பார்த்தே—பொருத லெவன்சொல் லெனப் பரமன் புதல்வ னுனதென் றுரைத்தருளக், கனதங் கண்க ணீர்நிறையக் கங்கை முதலோர் கைதொழுதல்—காணு யாகிக் கரதலத்திற் கவினை யணைத்துக் கனிமுத்தந், தனியத் தனிய முகந்தருளுந் தாயே தாலோ தாலேலோ - தநயற் கினிய தாலாட்டுந் தாயே தாலோ தாலேலோ. 4

வேறு.

கானிற் கருதரு வேனைப் பெறுபரை களியிற் பெரு மொழியிற் - கவினைக் கரமுற சிவனிற் றரகரை கண்டனு மண்டுசுகம், வானிற் பொலிதர வேனைச் சொலிமுதல் வழி யிற் பருவழியில் - வரவிற் பயனற வுயவுற் றுழியர வன்கர சங்கரனும், நீசிற் புழிமக னுனத் தலைவிக ணிகழப் புகழ் பெறுதி - சிகரற் றனையென வகழற் றியவனே ஞெண்டுக டொண்டுபுரி, தானக் கயல்வயல் பொருள்வைப் பதிமதி தாலோ தாலேலோ — தவளைக ளரவுக ளுறவுறு தலநிதி தாலோ தாலேலோ. 5

வேறு.

பிருங்கி காலர் பிழைமொழியிற் போக வதியின் மநோன்மநிசி—பெரிய தவத்தி லருந்தாரா வதியென் பெயரிற் பில்குசுயம், வரங்கண் டதனிற் சந்திரசே கரனே வரணம் புரிந்தருளால்—வயங்கும் புதல்வ ரிருவரையும் வகித்துச் சுகித்து வளர்வளஞ்சேர், சிருங்கை யருளே காசிநகர்ச் செகதாம் பிகையே திருநெல்லாய் — திருநற்



களரி னமுதனையே திருவா ரூர்நீ லோற்பலையே, தரங்க நாகை நீலாய தாக்ஷீ தாலோ தாலேலோ—தருங்கற் பகமே யெவற்றையும்பொற் ருயே தாலோ தாலேலோ. 6

கனவிற் கண்டு பயந்தெருமை கனிய வினிய காளி யெனக்—கரங்கள் பதினு றுடன்றேன்ற வரங்கள் வேட்ப வுனையிறுங்கால், எனவிற் பதத்தி லிருத்திடுது பிரம்பற் கருளி மகிடியகட்—டிறைவ னுனது வடிவானு னிந்த முறைமூன் றுவதுவாம், முநிவன் மொழியு முனிந்தபுரந் தரனு மாலை முடிந்தணிய—முதன்மை யெனது பரபதத்து முனது சிரத்தும் முற்றுமெனுத், தனவற் கருளுந் தமநி யப்பே ரூராய் தாலோ தாலேலோ—தமியன் கரியாய்க் கரியினுந் தாயே தாலோ தாலேலோ. 7

வேறு.

புகலுல காயதம் பவுத்தஞ் சயிநம் புதுவை ணவ மார்க்கம் - பூரணத் துவிதம் நகுலீ சமதஞ் சைவஞ் சோக நெறி, அகலிர சேசுர மவுலோக் கியமே யக்கக் கான்மார்க் கம் - அயமனு சயிமிநி பாணினி சாங்கிய மரவப் பெரு யோகம், இகலுறு மிவைகள் ஏணிய வாயினும் இனியறி வெனையெய்த - இளநில வணியுமி றையவ னணியே யிணை யறு மெனவோதிச், சகலமு மெனது வடிவென வருடி ருத் தாயே தாலேலோ—சதுர்மறை பரவும் பொருள் வையில் விரவுந் தாயே தாலேலோ. 8

வேறு.

தக்கன்ம கத்தை யொ ழித்திடு முக்கிர சண்டீ தாலேலோ—தன்னையு பாசனை யுன்னுவ ருக்கரு டாயே தாலேலோ, மிக்கபி ராமணி யாதிய வெண்மரா மேலோய் தாலேலோ—மின்னுகா மாக்கியை பென்னமி ளிர்ந்திடு மேதாய் தாலேலோ, புக்குவே தாளப யிரவர் பூசனை பூண்

டோய் தாலேலோ — பொன்னருள் செய்துவ ரந்தரும் புண்ணிய புஞ்சே தாலேலோ, பொக்கனை யும்பொருள் செய்தபொ ருள்வைத்த பூரீ தாலேலோ - புன்னடை போக்கிப் புழைக்கரற் காட்செய்த போதே தாலேலோ. 9

வேறு.

கமலைக் கருள்புரி யமலைக் கொருசிறு சமலத் துலவு வனே—கருதுற் பவமற வருசிற் பவமுறு கதியிற் பதி வுறுவேன், அமிழ்திற் சுவைதரு தமிழிற் பொலிதுதி யறி வுற் றவரறைவார்—அடியர்க் கடியவ னளவெத் தகைய வன் அன்னண மன்னுறவே, கமையிற் புகழுமை கரி பொற் சரணுறு கருணைப் பொருணயமே - கடையற் குயர் தரு நடையிற் றருமெனல் கண்கூ டெனவாகுந், தமையற் புதமிகு தமிழிற் புகழுவ ருயே தாலேலோ—தருவிற் றரு பொருள் வையினிற் றனிமணி தாலோ தாலேலோ. 10

மூன் ருவது தாலப் பருவம் முற்றிற்று.

---

நான் காவது

## சப் பாணிகைப் பருவம்.

---

வேறு.

வாகுவசு தேவனும் வாசுதே வன்கிட்ட வரைபாக வதமோதினன் - வருசிராத் தனுமைந்த வாஞசையான் மக மாற்ற வனிபன்னி கன்னிவிழையா, ஆகுதியின் முயலவும் அங்கனை யுதித்தளவி லருள்வசிட்டன் மாற்றவே - யச்சுத்தி யும்நனும் அரசாப சரமூழ்க வாகலினை யரையருளினுல், ஏகுதலு மோதவே யாகியது ருதவாக்குப் பிரமுஞ்சன் ரேவதியுடன் - இறைதுர்த்த மன்மனுவென் ரைவதன் முத லாக வெத்துணையர் தத்தமக்கார், தாகவத மாகுவித பாக வத மகிமையாய் சப்பாணி கொட்டியருளே. 1



நாநாவ கைச்சரித நிறையிரத வாலயம் நாகதரு கனி சுவைப்ப-நண்ணுத ரச்சுகன் பவவேலை யளவினீர் நனிகடந் திடுந சையினுன், தானுகு மன்பினுடன் வியனுறச் சவணித்த சவணிப்பர் யார்த ரணியிற் - ருண்டார்க லிப்பயம் மாண் டேகொ முக்கனுந் தணவாத தீவினையனும், ஈனுர தரும னும் எனல்போல வினவினும் இவண்விபுல போகநுங்கி- யிறைவிசின் பதமுறுத நிண்ணமா மாதலின் என்போல்வ ரைக்கூவியே, தானுக வருள்கருணை மானமறு மென்றுநீ சப்பாணி கொட்டியருளே - தாமரைப் போதுபுரை சேம நற் செங்கைகொடு சப்பாணி கொட்டியருளே. 2

மானுடப வம்பெற்று மருவியெவ் வங்கமும் மலர் வாரி ருந்தவழியும் - மரணபவ வர்ணவத் திடர்கடத் துங் கப்பன் மன்னியுமுன் னுரகோ, தானுடலெ டுத்துமென் றஞ்செவியி ரண்டினுந் தாவியே பழமொழிகளைத் - தாரு ணச் சுநவினை தாண்டிலார் மாண்டுளார் தந்தாப முந்த வந்தோ, வானிடவு தலைகடன் மூழ்கவும் பிரமாதி மாம றைக டுதிதந்திட-வருபரித் தலையினு லரிபரித் திடுமன்னை வாடினே னஞ்சலித்தே, தானுடக் கும்பவந் தானுடங் கச் செங்கை சப்பாணி கொட்டியருளே- தானந்த வம்பொ ருள்வை வாநந்த ருங்கருணை சப்பாணி கொட்டியருளே. 3

சிரவணப் பெருமையிற் பொருளினைப் பெறுதலாஞ் சிரவணமு மூவிதமதாம்-சிரவணஞ் சாத்விகம் வேதசாத் திர மாதி ராஜசஞ்சா கித்யமாம், சிரவணந் தாமதஞ் சமரமொடு பரகறை செப்பவையு முத்தமாதி-சென்மமறல் தன்மமுறல் போகமுற லென்னவாந் தன்னதும் பொதுபிறவதாம், அர வணக் காததா யிகளுடன் னரியுடன் னமரிலே யகனிமித் தம்-அன்னைகதை வினவிடின் அருள்வளரும் அருண்ஞான மாமென்ப வருள்புரிகுவாய், சரவணப் பெருமனைத் தாங் குங்க ரங்கொண்டு சப்பாணி கொட்டியருளே - சலசமொத் திடுகரஞ் சிரம்வைத்த பொருள்வையாய் சப்பாணி கொட்டியருளே. 4

வேறு.

எங்குநி றைந்தப ரம்பொரு ளாகிய வின்பே யன்பா ரும் - இன்சொன்ம டந்தாய் கஞ்சமெ மூந்தா யெஞ்சா விஞ்சையளே, பங்கஜ னங்கஜ னெங்குஜ னும்பணி பஞ் சார் செஞ்சரணே - பந்தம கன்றொழி சிந்தனை வந்தெழு பண்பீ தண்பாவாய், சங்கைய றும்படி செங்கையு றுங் கனி தன்றே சொன்றேதான் - சம்பிர மஞ்சக நம்பியு ணர் தரத் தண்டா மண்டருடாய், கொங்கைகள் பொங்கவ ருங்கரி யுண்கருள் கொட்டுக சப்பாணி - கொண்டனி ரம் பிய பொன்பதி யம்பிகை கொட்டுக சப்பாணி. 5

வேறு.

காதேபி றந்துவெறுந் திதேபு ரிந்திருவர் காளிங்கன தருள்பெரு-காணுன்மு கப்பிரமன் விணுன்ம கப்பெருமை கானேரெ னக்கழறவும், வேதாவ ரிப்புகுத வோதாத ரிப்ப தில ஞதாயெ னப்புகழவும்- வீரிய ரப்பிரிய சூரிய ரியைவிழி காரிய ருளவரியாங், கீதாரி யோனும்பஞ் சமோதாச கத்தி ரங்கள் கீழாக வாழவுமையைக் - கீதம்பு ரியவரு ணீதம்பெ றவரமுங் கேதந்து ருவினனெனு, தாதாவ ரிக்குமரு டாயே பொ ருள்வைநகர் சப்பாணி கொட்டியருளே - தாளேம றக்குகில நாயேற்கு ரியகதி சப்பாணி கொட்டியருளே. 6

வேறு.

விதுவணி பரமன விட்டுணு விட்டப ரம்மேட்டி-விய னுற வடியிலு வப்புற னெக்குவி தித்தோத, முதமுறு கவு ரியி லக்குமி கற்குமு ளத்தாளே - முறைமுறை யருளிய மைத்தவ ளற்பந கத்தாவிற், சதசத வளவின்மு முப்புவ னத்தையு றக்காட்டிச் - சனிபுவ னமதுதி சத்திதி தித்திச ரித்தாடும், பொதுமத கரியைப் பயந்தவள் கொட்டுக சப் பாணி — பொருள்வையி லருளுமி ளம்பிடி கொட்டுக சப்பாணி. 7



வேறு.

பஞ்சவி தஞ்செய்கி ருத்திய முற்றொரு பற்றுத லும்மி லளாய்ப்-பலவித வேஷவி லாசகு தூகலம் பண்ணுறு பண் ணவியாய், எஞ்சல்கு ணஞ்சகு ணத்திலி ருத்தியி ளைப்பற முற்படுவோர் - இறைவிசி னறிவுறு மனமுறு மெனமறை யேத்தும கத்துவமே, செஞ்சர ணங்கன காங்கத மஞ்ச லுஞ் சீர்மது டந்திகழச்- செயமரை முகிமுயர் குயமருள் சுயல்விழி சிந்தனை வந்துதவுங், குஞ்சர னங்குக னைத்தரு பொற்புமை கொட்டுக சப்பாணி - குறுகினர் கழலிணை பவதவ மணையனை கொட்டுக சப்பாணி. 8

வேறு.

காசிரா சன்குமரி கல்யாண நாடியே கண்ணகலி டத்தி னின்றுங் - கவிகைமுடி மன்னவர் மன்னவுங் கன்னியுங் கருதுநற் காட்சியானை. யேசிரா சன்னெவனை யும்வேட்டி லேனிடரி லிமயமா வல்லிகாப்பள் - என்றிடத் தந்தையு மன்றிரவின் மணமுற்ற விறையவரெ மூந்தபோது, தேசுரா சிப்பொலிவ தெத்திசையும் வீசவே சிங்கமேல் வந்துத வியே - தேவால யங்கொண்டு காசியில யோத்தியிற் றிகழு மெய்த் தேவியுமையே. தாசரா சர்க்குதவு செங்கரங் கொண்டுநீ சப்பாணி கொட்டியருளே - தாசனிவ னும் மெனு வருள்புரித றகுமென்று சப்பாணி கொட்டி யருளே. 9

இருவருட முதறரச் சம்வற்ச ரம்வரையு மிளமின்கு மாரிதிரிமூர்த்-திகல்யாணி ரோகணி காளிசண் டிகைசாம் பவீதுர்க்கை சுபத்திரையெனு, வருமுருகண் மிடிபகை வதையாயுள் வளருகை மாதங்க மகன்முதலவும்-வண்கல்வி வெற்றியின் பயிசொரிய மன்னர்மயல் வன்றொழிற் சாதக

மொடு. பரவுலக சுகம்வாஞ்சி தார்த்தம்ப யந்திடல் பறந் திடும் நோய்க ளெனவே- பகருமந் திரமுடன் னவவிரவி லன்பறப் பாதங்கள் பரவவருள்வாய், தருவருடு சந்திரன் மந்திரப் பொருள்வையாய் சப்பாணி கொட்டியருளே— தாயுனது வடிவமாம் யாவுமென வெண்ணீ சப்பாணி கொட்டியருளே. 10

*நான் காவது சப் பாணிப் பருவம் முற்றிற்று,*

ஐந் தாவது

## முத்தப் பருவம்.

---

வேறு.

வேத விறைவன் சுதனிலது விலக லிலது வேதனை தான் - விமலே யருளைப் பெறுதிரென விண்டு விளம்ப விண்ணோரும். கோதி றவத்தைக் குறிபேணக் குமரி நவ யவ் வசுமாதா - கோடி கோடி யிரவிமதி குழுமி_யெழு மின் னெளிமேவித். தாது புரையு மதரமொடுந் தரணிக் கசுக தாடங்கஞ் - சலச லெனக்கிங் கிணிமுழங்கத் தனிமே கலையி னெடுந்தோன்றி, மோத முறநீர் விழைந்ததென மொழிவாய் முத்தந் தருகவே - முத்து நகையும் வைத்த பொருளு முதிர்வாய் முத்தந் தருகவே. 1

தேவ ரிறைவி தலைக்காணுத் தெருமந் தலமந் தன்புமி காத் - திரண்ட மறைகண் மொழிகளினுற் சிறந்த பூசை பறந்தியற்ற, மேவுங் கவுரி யிமமலையின் மின்னுந் தன்னேர் சொன்னயற்கு-மிலேமின் குமரன் மிளிர்ந்துமது மிடைக்கு மிடுக்கண் படுக்குமெனு, ஆவி யனையா யாரணங்க ளறை யும் பொருளை யருடியென - வமுத முவட்ட விமமனற்கங் கருஞ் செம் பவளந் திறந்தருளி, மூவர் மொழிக்கு மூலமென மொழிவாய் முத்தந் தருகவே — மூட லோட வருள் பொருள்வை முத்தே முத்தந் தருகவே. 2



பிரம மெனது நிர்வசநம் பிறங்கா மாயை காரண மாம் - பெரிய பகுதி தவந்தமமாஞ் சத்தி விமரி சையஜை முதல், விரம மிலேயான் சுயவொளியா யழியேன் பரமப் பிரேமையனுன் - விசுவ மசத்தா தலினசங்க னிறைந்தோன் ஞான வடிவேயான், கரும முதலாங் கருவிகள்கொண் டுலகை யெழுப்புங் காதலுடன் - கருதல் கிரியை வருத ரஹ்ரீங் கார மநுவாச் சியமாவேன், பரம நிலையை யிங்ஙன ருள் பணிப்பாய் முத்தந் தருகவே-பரமன் விடவெப் பகற்று பொருள் வைப்பாய் முத்தந் தருகவே 3

விண்ணு மநில வனல்புனலும் விரியுந் தரையு மொலி முதலா - விலிங்கங் கலப்ப விராட்டுவரும் விமலத் துளமும் விழிமுதலாம், நண்ணும் ரஜசிற் றெழிற்புலனு முயிர்ப்பும் நாடிற் பகுதியிரு - நாட்ட மாக வீசாதி நனவின் விசுவா தியுமாவர், கண்ணு முயிர்கட் கநுக்கிரகங் கருதி யீசன் பலவகையாய்க் - கமழு மெனதாற் றலைக்கலந்து கருணை மிகவும் யானுனுற்றப், பண்ணு மெனநன் கருளுந்திருப் பவள முத்தந் தருகவே - பதியப் பதியர் துதிபொருள் வைப் பதியாய் முத்தந் தருகவே. 4

வேறு.

விதித முறுமிவை யறிவ தலவிலை வினவ லயலென மனனினுல் - விழுவ முழுவது மெனது வடிவென விமல மதியினி லுணர்திநீ, பொதித லெனேயல தெதுவு முளதெ னல் புதிது கதியதி லாமையின் - புகல வெமதமை முழுது நினதுள புரைய தறமுரு காணுமா. முதிதை யருளென விரவு மமரரு மொழிகொள் விழிகள ரும்பவே-முநிவர் கண நிறை யினிய வுருவினை முழுதும் விழிகொள வுதவியே,முதித மருளனை மொழியு மெழில்கனி முதல்வி பணிமணி முத்தமே- முடிவ னெனயுமொ ரடிய னெனமிடி முடிய வருள் பொருள் முத்தமே. 5

முடிபொ னுலகிர விமதி விழிதிசை மொழிகொண்
மொழிமறை மூளுகான் - முனெழு வளியுல கிதயபி ருதிவி
சகன நபநபி யுரதலம், சுடரு வளைகள மகமு முதல்வனி
சுமுக மெயிறது மெமனெறு — சுகட லகடெலு பசல
நதிசிரை சுதையன் மனமற கரணமாங். கடியி னதவகை
யதல முதலன கரமொ டலைபத மாயிரங் - கதிரு முருவினை
யமரரெ திர்பெறு கதறமி கநிறை கருணையான், முடிபி
னுருமறை முறுவ லெழின்மொழி முதியை பணிமணி முத்
தமே - முநிவ ரநுதிந மநுவை யுனுதன முகரு நகரிசெய்
முத்தமே 6

அருகு மறமெவ ணளவி லுருவெவ ணளியி லருளின
னணுகுமோ - வளவி லறமற மணைவ ருணைவருய் யறிவி
லமைபவர் கமைவரே, உருகன் முதலன வருக முணர்வுற
வுணர்வு முழுதென வுணர்தியா — னுயரு குருவடி பரவ
வவர்மறை முடியை நொடியினி லருள்வரே, பெருத மது
பிளிறு திரயமு மொழிய வருசுகம் பெரிது பெரிதெனப்
பேசுவாய். முருகன் கரிமுகன் முலையை யுணவணி முரலி
பணிமணி முத்தமே - முரலி கரனரன் முதல்வர் பணிபொ
ருண் முதல்வி பணிமணி முத்தமே 7

வேறு.

பஞ்ச கோசங் கடந்துபரம் பிரம மாயி ருங்கவனும்—
பகரு மஜனித் தியன்சாசு வதன்பு ராணன் படிறில்லான்,
அஞ்சி லணுவுக் கணுவாகி யரிய மகத்தின் மகத்தாவன்—
அகத்திற் றனையே தெளிவாக வலைவிலாம லமைகாண்
பான், நெஞ்சைப் புலனை நிறுவாதான் நிதனங் கதுவு நிறுவு
கெனுச், செஞ்சொன் மிழற்றுந் திருப்பாவாய் சிரித்து
முத்தந் தருகவே - செல்வர்க் கினிமை தரும்பொருள்வைச்
சிவையே முத்தந் தருகவே. 8



வேறு.

இமவிறை யொகமெது வருளென யமமுத லிற்பெறு
சிற்பாவம் - இயமமு நியமமும் பதுபது வகைகளி ருப்
பது பற்பாதி, சமமுடல் வளிவிடல் கொளன்மிட லரியச
கர்ப்பவி கர்ப்பமதாம் - சபமுட னபமுடன் றலனடல்
புலனடல் சத்யபி ரத்யாகா, ரமிதய களநசி புருவிடை சிர
மிசை ரத்நமி யத்நந்தா - ரணைமன மருதுறல் கருதுறல்
சமமுறல் ராசத் தேகத்தே, முமைமுலை யுமையமை முது
பொருள் வையினிதி முத்தம ளித்தருளே - முழுவது மிம
மலை தெளிதர வருளனை முத்தம ளித்தருளே. 9

வேறு.

வன்னிச்சு ழும்நையினி டைப்படுவி சித்திரையின்
மத்தியினில் வாழுஞ்சுயம் - மாயையின் பீஜஹ்ரீங் குண்ட
லிசு வாதிட்ட மாமூலவா தாரமாம், மின்னிப்பன் மணி
பூர மிளிர்மேல நாகதம் விசுத்தமாஞ் ஞாசக்கிரம் - மேற்
கயிலை ரோதிநி சகஸ்ரார சக்கிரம் பிந்துபர மான்மா
விடம். பின்னப்ப டாமலுயிர் தடையாக நரைமரண
பீடாப யம்பேதுறும் - பீஜமந் திரமுடன் யோகமே பேணு
றுக பிரமமே பெறுபேறதாம், முன்னர்ச்சு ரர்க்குமிம
மன்னற்கு மொழிமுதல்வி முதுபவள முத்தமருளே —
முருகுக்கு முறுகுமத வறுதக்கு மருள்பொருள்வை
முழுமூல முத்தமருளே. 10

*ஐந் தாவது முத்தப் பருவம் முற்றிற்று.*



ஆ ருவது

## வருகைப் பருவம்.

வேறு.

அக்கரப் பிரமமதி லக்கியம் பிரணவம ருந்தனுச்சர
மாத்துமா - வகமுகந் தனினின்ற டைந்திடிற் றனதுமய

மதிலந்த ரிக்கமாதி, மிக்கதைத் தெரிமினிரு தயகமல பிரம
புர விண்ணிற்றெ ரிந்துகொண்டால் - விலகுமிரு தய துயர
மையமெவ் வினைகளும் மினிருமமு தாநந்தமே. அக்கதிரி
லக்கினிய ருக்கனில வுடுமினலு மலர்தரா வந்தரொளியும்-
அதுகொடிவை யெவையுமொளிர் தருமென்ன வன்னைநீ
யருள்பொழிந் தனையடியனேன், வக்கிரத் துள்ளத்தவ் வக்
கரம தெள்ளினேன் வாழ்விக்க வெளி வருகவே- வழுதிக்கு
மகளென்ன விழுதிக்கு விஜயஞ்செய் வளர்பொருள்வை
வளிவருகவே. 1

வேறு.

இருமைவெரு வாகு மொருமையரு வாகு மென
முயலு வார்க ளுளமதே - யிலமதெம தாகு மலதுகயி லாய
மெவணுமில மீதை யுணரவே, தருமகுல மீளு மருமை
யனை யாளு தரையுமற மூளு மெனவுணர்-தநயரொடு சீட
வினயர்பெற லாகு மலதொருவர் பேண றகுமதோ, மரும
மக தேவர் குருவெனவ ரேவன் மருவலரு ணீத மலது
கேண் - மகவனனி யோத வதமதம தாதல் வருமறையில்
வாசி வதநமே, வருமையது வான வெருமையது மானி
மருவவரு மாயி வருகவே - வளர்பொருள்வை மேவி யுள
மெனது மேவி வருகவெழின் மாது வருகவே. 2

வேறு.

அன்பு மெனது திரிவிதம தாகும் பரம வன்பினைக்கேள்-
அன்பென் குணத்தைச் செவிகோட லரிய நாம மினிதோ
தல், இன்ப குணரத் நாகரமா மெனையே சினத லெதையு
மெணு - தென்னைத் தன்னை யென்னவுல கெவற்றி னூடு
மிலங்கலுணர்ந், தென்பு குளிரு மன்பதனு லெவைக்கு
மினிதேய்ந் திருகண்ணி - ரிளக்கிக் களகற் கதனுகி யாடிப்
பாடி யெனவருளி, முன்பன் றனக்கு முருகனுக்கு மிதமே
வருக வருகவே - முதிய பொருள்வைச் சவுந்தரிய முதமே
வருக வருகவே. 3



வேறு.

நுகரு வினைமேவி நுணுகை யறியார்க ணுவலு மணி
தீப மணுகியே - நுகரு வர்கள்போக நுதியின் மதியாவர்
நுணகை யுணர்வார்க ணுகர்விலார், பகரு களமேவு பணி
யெனவு பாதி பணியவுணர் வார்கள் பரபதம் - பரமவயி
ராக முறவுணர்வி லார்கள் பரமவுல கேகி வருகுவார்,
மகரு கமெனுமன் முயல்கமக தாக மரியின்மநு டாக மரு
வுமோ — மதிமுதல வாக மருவலரு வாகு மதியெனவு
மோதி யருளனுய், நகரு மதிமோதி யகன்மனையி லாத நளிரு
நகர் நாரி வருகவே—நனியணிகள் பேணி நவில்செய்திரு
வாணி நவகவினின் காணி வருகவே. 4

வேறு.

கோலா மாது துலசைபுரஞ் சுவாலை முகியும் விந்திய
மும் — குரண்டலன்ன பூரணமுங் காஞ்சி கநகற் பீமை
மறை நீலாம் பிகையும் ஸ்ரீநகரும் நேபாற் காளி புட்கரமும்-
நீலா சீன மீனும்பா நேமி புவநே சுரித்திபம், கோலா க
மலை காமாக்யை குமரி காலங் கேதாரங்-குருக்கேத் திரமு
மவிமுக்தங் குவிந்த ஞாநி யிருதயமென், வாலா யருளுந்
தலங்கள்பல வழங்கு மொழுங்கே வருகவே — வளங்கொள்
சுவர்ண சவுந்தரிய மாதா வருக வருகவே. 5

வேறு.

ஆடவரு மடவாரு மார்த்ரவா நந்தகர வநந்ததிரு
தியைமுதலவா -யங்கார வாரசுக் கிரசோம வாரங்க ளரநடந
பிரதோஷமும், தேடுநவ விரவுகளுந் தேவியர்ச் சனை
செய்து தேன்பாற்ப முஞ்சேரலாம் — தேருற்ச வம்முதற்
பலவுறச வஞ்செயச் செறிவரெஞ் சாயுச்சியம், பாடுபடு
மடியவர்க் கன்னதா நத்தினுடன் படதாந மாதிசெய்
யிற் — பரையென்றன் றிருவுளங் கரையும்ப லங்கோடி

பாலிப்ப மென்றருளியே, மூடவரு நன்மைபெற வருள் சவுந் தரியவதி முன்வருக முன்வருகவே — மோனநிலை தனிலெளியன் முன் னிற்க முன்னுதவும் முளரிகளிதர வருகவே. 6

உள்ளினும் வெளியினும் பூசையிரு வகைமறைத் தந்திரத் தொண்மூர்த்தியான் — உற்றனந் தஞ்சிரஞ் சர ணங்க ணயனங்க ளுள்ளவெங் குணமணவிடா, மெள்ள மெள் ளத்தியா நம்புரிந் தென்னையே மேலான கதியதாக — மிகவுநம் படியரைக் காப்பதே யெமதுபர மேலான தரும மாகுந், தள்ளரிய வெமதுமொழி வேதங்க ளாதலிற் றன் மார்த்த நன்மானமாஞ் - சருவாசை யுந்தணந் தெம்மையே சரணெனச் சார்த்தியென் றருள்புரிகுவாய், முள்ளியுங் கள் ளியு மெள்ளிநின் பணிசெய்வர் முதமருள வேவருகவே — முன்னின்ற மெய்யப்ப ஞானதே சிகன்மகிழ முத்தம்மை நீ வருகவே. 7

சகுணகரு ணாபூர்ண தருணியரு ணாருணச் சௌந் தர்ய சாரசீமாச் — சர்வாங்க சுந்தரசி ருங்கார ரசபூர்ண சததபக் தார்த்தி காதி, சுகுணமுகி யம்பிகை பாசாங்கு சங் கொண்ட சுந்தரா நந்தரூபி - சுத்தமாஞ் சித்தத்து ளித்த கைய தேவியைத் துரிதமறவே கருதலாம், விகுணவறி வாநந்த மெய்யுளந் தங்கவே விரிபெவையு நினைவாகவே, வியலம்பு ரிந்துநீ சேடித்து நிற்றியென வெகுவாக மிக வருளினுய், வகுளமல் லிகைமுல்லை சண்பகங் கொண் டுன்னை வந்திக்க முன்வருகவே — வதநகர்ப் பூரதாம் பூ லங்க மழ்பொருள்வை வாசியென்முன் வருகவே. 8

காலையில்வி ழித்தவுட னுச்சியிற் பற்பமது கற்பித்த திற்குருவினைக் – கற்பித்த ருச்சித்த ருட்குண்ட லித்தேவி கருதியதன் சிகைமத்தியிற், சாலவொளிர் சத்தைச்சு கத் தைத்தி யாநிக்க சங்கற்ப ந்யாசமுற்றிச் – சததசிவன் முத லதீ தமதான வெந்தமைத் தனிமனம்பூ சிக்கலாம், மேல



துவெ ளிப்படப் பீடமேன் மேலான மின்னுமுப சாரங் கொளா - வேதமந் திரமகா வித்தைமந் திரமதால் விமலபூ சனைபு ரியலாம், மாலதறு மென்றமுத வல்லிநீ மதியருள மலையரையன் முன்வருகவே – மாசற்ற தேசிகர்க் கருள் பொருள்வை மாசிலாய் மாசுளேன் முன்வருகவே. 9

வேறு.

வடுக்கும் பிறர்க்கும் பாமரர்க்கும் வாமை மதியி லுணவருத்தி – வணக்க மநத்திற் புரிந்தெவையும் வழங்க ஹிருல்லே கந்தனைக்கொண், டடக்க மதனின் மற்றவை கள் அரிய குருவை யன்புமிக — வருச்சித் திங்ஙன் றிரிபுவந வழகிக் காட்டட் டமர்பவர்க்குச், கிடைக்கற் கரிதென் னெவ்விடத்து மெந்த ஞான்று மெய்ப்பொருளும் – கிடைக்கு முடற்பின் மணித்தீபங் கிளர்ந்து சுகிப்ப ரென்றருளி, யொடுக்கி யுருவை யறிவாக வொளிரு மெழிலி வருகவே- யுரைக்கக் கிதை சீடருக்கென் றுரைக்குந் திருத்தாய் வருகவே. 10

*ஆறுவது வருகைப் பருவம் முற்றிற்று.*

---

ஏழாவது

## அம்புலிப் பருவம்.

இந்துவளர் சடையிலென வெண்ணியோ வெண்ண ணியி லிவனுமொரு மருக னென்றோ-இவன்விழியெ னக் கொடோ வின்றெய்வ மின்மநக் கென்றுதானோ நுதல் கொடோ, சிந்தைகட கக்கதிப னென்றுதானோவினிச் சேர் கொடோ, சிந்தைகட கக்கதிப னென்றுதானோவினிச் சேர் மதிய மாதல் கொண்டோ - சிறுகலையெ னக்கொடோ சிறு வனது செய்கையைச் செப்பாதி ருப்பவோதான், மந்திரம தொடுகோச லத்திினில் வாழ்வணிகன் மகவான யன்னரி

யரன்-மகிழ்விசுவ மித்திரன் மித்திரன் காகுத்தன் மருவநவ
விரவிறவமே, வந்தவென் னன்னையுன் றன்னைமன் னச்
சொனு ளம்புலீ யாடவாவே-யழகொழுகு கலியாண சுந்த
ரியு டன்பேசி யம்புலீ யாடவாவே. 1

எக்கலையு நீபெறுத லாதலொன் றேவல்ல வெக்கலையு
நீபெறுதலாம்-இரவிமுன் னிநிற்ற லில்லையெனி னும்மிரவி
யினியநின்கண் ணுகலாம், தக்கனுநி னைக்காணி லஞ்சுறுவ
னெஞ்சுருத் தலைமையது நின்றக்கதாம்-தாயுடன் வந்து
விளை யாடிடின் னிசெய்த தாய்தோட முந்தணருமால்,
புக்கசுரர் சுரகணந் துயர்தரும் பூவைப்பு ரந்தருளெ னப்
போற்றவும்-போமின்யாம் விண்டுவும் போதுமென றருள்
செய்த புன்னகைத் தேவியுன்னை, யக்கள்வா வென்றன்பி
னுடைழைத் திட்டனள் அம்புலீ யாடவாவே-அழகிகலி
யாணசவுந் தரியநா யகியுட னம்புலீ யாடவாவே. 2

ஞாநதே சிகனென்ன வீரஞா நேசனுய் நண்ணிநங்
குறைக ளெல்லாம்-நாடாது குணமென்று கொண்டவண்
டப்பிரா னுவிலே செய்தலீலை. வானதே சத்திருந் துற்றதுங்
கயிலையிலும் வந்துநீ யுற்றதெல்லாம்-வகையாக வேகூறி
மிகையாய்வி டாமலொரு வாருக வேசெய்யலாம்,
போனதே யானசிசு வென்செய்கு வேனேனப் போயதிலை
சம்பிரனெனும்-பொய்யசுரன் மாயையிரெட்டதனில் வந்
துறும் புந்தியிற் கவலலென்ற, ஆனதே சாலுமெனு மடி
யர்தங் தாயுடன் அம்புலீ யாடவாவே - ஆடகச் செல்வி
புகழ் தேடகச் செல்வியுட னம்புலீ யாடவாவே 3

அறிவுருவ வம்மையுட னுடவே வருதியெனி லறி
வுருவ மாகிநீயும்-அரிதிலெத் திருசியமு மவிர்விக்க லாமந்த
வரவையும விர்விக்கலாம், குறிபெறுத லின்றியே குலவ
லாந் திரிபுடியுங் கூடாமலே குந்தலாம்-குவலயம தாகலாங்
கவலைலய மேகலாம் குளிர்மதிய தாய்க்குலவலாம், செறி
வுறப் பிரமாதி தேவரும் பணிகின்ற தேவியிவள் சிவமங்



கலை-சித்தின்ப வடிவாக வேதெரிந் திடுமன்பர் சித்தமக
லாதிருப்பாள், அறுமுகவ னறுமுகன் விளையாடு மம்மை
யுட னம்புலீ யாடவாவே - அளகைக்கு நிகரான பொருள்
வைக்கு மன்னையுட னம்புலீ யாடவாவே. 4

கலையுளாய் கலையிலாள் கலையிலாய் கலையுளாள் காய
முள் ளாயஃதிலாள்-கறையுளாய் கறையிலாள் கங்குலுண்
டஃதிலாள் கதிரவன் முன்னிற்றிலாய், அலையுமங் கவனையு
முன்னையும் மின்னையும் அக்கினியையும் முடுவையும் - அறி
வளெம் மம்மைபஃ தன்றியும் மாந்தரத் தரியவொளி
யையும றிகுவாள், நிலையயன் நகரமாம் நிகரிலரி யுகரமாம்
நீலகண் டன்மகரமாம்-நிமலையோ வர்த்தமாத் திரையளாய்
மூவர்க்கு நின்மலா நந்தமருள்வாள். அலகிலா விவ்வகைய
வந்தரம றிந்துநீ யம்புலீ யாடவாவே - அந்தமில் சவுந்தரிய
வரியநா யகியுட னம்புலீ யாடவாவே. 5

எங்குநிறை தருமிவள் தங்குவா னதனினீ இன்பமிவ
டுன்பமியைவா - யென்றபூ தத்தினுரு விந்துபூ தந்தருவ
ளின்றுகா லந்தெரிவதோர், தங்குநிகழ் வரவெதிர்வு தஞ்
சமா யறிவளிவள் தந்தைதாய் வந்துபோவாய்-தந்ததெவ
ணந்தமெவ னென்றுமிவை தண்டிலாள் தண்கருணை வந்த
தென்ப, மங்கமகி டாதியவர் பொங்குசிவ புங்கவர் வந்த
வொளி மைந்துபதிணெண்—வண்கரமும் வெண்முகமுங்
கண்மையிதழ் செந்தழலி வந்திலையே லெந்தகதிநீ, அங்
கனைக ளன்னையென வருடரு மன்னையுட னம்புலீ யாட
வாவே - அந்தமறு சுந்தரம மைந்தமுத வல்லியுட னம்புலீ
யாடவாவே 6

வேறு.

மனைய றிந்தென தனையு வந்திட வந்து நின்றனை யாயி
டின்-வழித ருந்திற னலம்வி ரும்புறும் வருவி சாரணை மான
சம், தனுவ ருந்தனை யறிவு றும்பொரு டனைம றந்திடும்
வாதனை-தணரு முந்துறு துரிய காமிவை தணர்தி வந்திலை

யாயிடின், அனைய சங்கரன் வதந பங்கஜ னளவ றுங்கர
சங்கரி-யழகு சௌமிய தநமெ னும்படி யறிதி நெஞ்சினி
லஞ்சிநீ-வனைய ரும்புகள் குடஜ மென்றவள் வருக வென்
றதும் வருகவே, வளநி றைந்திடு பொருள்வை யம்பதி
வருக வம்புலி வருகவே. 7

வேறு.

பாட்கலுனுந் துர்த்தரனும் பஞ்சுபடல் கண்டும்-பாம
திநீ யம்பிகையைப் பா றன ல னேகாண், தாட்கமலங்
கொண்டுதிருச் சங்கடாசர் வாணீ-சர்வரோ கநாசிவிஜ
யாதுயர ஹாரீ, வேட்கைதருங் காத்யாய நீபீம நயநீ-வியன்
முநிவ ரோதியதை விதுநீயு மோதி, ஆட்கொளும்வீ ராரி
யனை யருளுமம்மை யோடு - மம்புலிபு கழ்ந்துவிளை யாட
வரு வாயே. 8

வேறு.

தேசு மிக்கவ னென்றெண றீதுகாண் டேவி சித்துரு
மேயவத்—தேவ தேவன ருளில னுயிடிற் றேச தெங்ந
னு னக்கிது காறுமே, பாச மொக்கணி மொக்குளெ னத்
தெளி பார்வ தித்தயை பார்த்திடி லார்த்திடா-பாகன்
மற்றவர் பானமு மேனவிற் பாடு கின்றவண் மாமியின்
பாநமே, மாக சித்துர தாமிரர் மாயவே மாபிடாலவ சிலோ
மர் மாயவே-மாலி யற்றிய மானினி மாகிட மன்ம தன்வர
வாதம தாகவே, யாசை கக்கெனு மம்பிகை யன்புறு மாட
வம்புலி வெம்பன்முன் வந்திடே-ஆட கப்புதை யற்பதி
யம்பிகை யாட வம்புலி வந்திடு வந்திடே. 9

துன்மகி டாசுர மர்த்தநி ரம்யக பர்த்தநி சைலசுதை-
தோதக மாதக பாதக காதக தூளிவி ழைந்திலையேற், கன்
மக மார்க்கங் கதியதன் றீர்க்கமுங் கண்டதும் விண்டது
பார்-காதிட வாதிட வோதிடு மாதிடர் காலிய லைபோலும்,
வன்மகு காரிய காரணம் வாஞ்சியா வம்பிது துன்பமிதே-



வாடலு மூடலு மாடலும் பாடலும் வாளா வீழாவே,
அன்மொழி யன்றினி யம்பிகை யாடிட வம்புலி வந்திடுநீ—
யாடக மோடக தோடக மார்பதி யம்புலி வந்திடுநீ. 10

*ஏழாவது அம்புலிப் பருவம் முற்றிற்று.*

---

எட்டாவது

## அம்மானைப் பருவம்.

அந்தர்களு மூகர்களும் பதிரர்களுங் கஞ்சர்களு மழி
குட்ட மேயவவரும்-ஆராத னைத்துறையி லம்பிகையி னடி
யதனி லநவரத மாயாதவர், சுந்தரப் பந்தரமு தயிசொரிய
பூரணச் சுகபோக மேயவ வரோ-சுதையதினுந் திகழுசுவை
சுந்தரியி னடியிணைக டோய்ந்தேவ லர்ச்சனையுளார், அந்
தைய லுருவுற்ற வரனுதி மூவர்களு மரியபணி செய்தா
ணையா- லாடவர்க ளாகியே முத்தொழிலு ஞற்றுவா ராகு
மிவை காண்பிப்பபோல், அந்தரள செம்பவள மணிநீல வம்
மானை யமீமைநீ யாடி யருளே-ஆருறி லொன்ருகி யக
மருவு சுந்தரீ யம்மானை யாடியருளே. 1

மத்தனு மகிடனைக் கொன்றிடும கத்தான மாலக்கு
மித்தேவியை-மகிழ்தரச் சுரர்களும் வந்தனைகள் செய்திட
வும் வந்ததென் னெனவம்மையே. பித்தராஞ் சும்டனுநி
சும்பனும் பிரமனிற் பெரிதான வரமுற்றனர் - பேசுசோ
ணிதபீஜ னுந்தூமி ரக்கண்ணன் பீமராஞ் சண்டமுண்டர்,
அத்தலத் துற்றனர ழித்தனர்க ளென்னவே யம்பிகையுங்
கௌசிகையெனு-வாவிர்ப்ப வித்துவெங் காளியா யன்ன
வரை யதமாக்கி யேவீசல்போல், அத்தத்தெ டுத்தம்மை
பன்மணித யின்றதிரு வம்மானை வாடியருளே-அருவிருத்
தக்காவி ரிப்புனத் தழகியே யம்மானை யாடியருளே. 2

வேறு.

சண்டர்க்க ளிற்றினெடு சண்டப்ர சண்டமாய்ச் சண்டித்த சத்தேரனுஞ்-சம்சார வெந்தழலில் வெம்பியவி ளங்கோவுஞ் சார்முனிவர் சாற்றியவணம்; மண்டிக்க டுந்தவஞ் சண்டிகா முண்டிக்கு மாருதுபே ருகவே-மங்கலந் தந்து பின் னவனுக்கு மன்னேனின் மாஞாந மதும டுத்தே. அண்டக்கு முக்கணிறை நிரையாக வாற்றியவ் வம்பரத் தேக விடலும்-ஆங்கவற் றைப்பொடித் துத்திங்கள் சூடியு மாடியே கோடுமாபோ, லண்டக்க ளித்தலுட னழகத்த நித்திலத் தம்மானை யாடியருளே-ஆடகச் செய்யபுரி வீடகத் துய்யுதரி யம்மானை யாடியருளே. 3

அமரருத் யாநவந மத்தியில மைத்திட்ட வாடகச் சிநகரத்தே-யதிபதும ராகவொளி யாகமா யாபரண வகிலபூஷிதை யாகியே. அமர்கரக் காவலரு ளரவகிங் கிணிஜாலமமைகாஞ்சி யாருமிடையா-யமருகல கண்டீர வாய்காந்த கணகணத் தரியகங் கணநூபுராய், சிமிமணிக் ரீடந்து லங்குமந் தஸ்மிதாய் திரிநேத்ரகம லாசியாய்-தெளிவதசி யாய வளிய் ஞல்விருத் தரனறத் தேவேந்தி ரற்கருளனு, யமை வளக் காவிரிப் புனல்விழுப் பதியினு யம்மானை யாடியருளே - அமரர்பொற் பதிநிகர்த் தமருபொற் பதியுளா யம்மானை யாடியருளே. 4

கருவதுர்க் கமனருந் துயர்தரத் தேவருங் காவருங் கவுரியைக்காற்-கைதொழப் பதுசகத் திரமெனக் கரமெழக்கியே யொழிவித்த சதபதாக்ஷீ-யும்பரே யெவ்வுழியு மெஞ்ஞான்று மெம்மகிமை யோதுவீர் பாதுகாப்பேம், சருவவே தாந்தசித் தாந்தசித் தாநந்த சத்தைநங் தெந்தமக்காய்ச் சந்ததந் தந்ததந் திக்குந்து பாற்றனங் கந்தனுக் குந்தந்ததா, யருவமா யந்தமில் இருவமா மம்மைநீ யம்மானை யாடியருளே—அதிசயத் தமரியக் கமரியச் செங்கரத் தம்மானை யாடியருளே. 5



வேறு.

பாசரு பத்தினி ஞன்முக ஞதியர் பலகைச தாசிவமாய்ப்-பஞ்சப்பி ரமத்தி ஞசன ரூடையைப் பார்க்கினுந் தெய்வமய, லோதரு பத்தினி லுண்டுகொல் சீர்புவ நேச்சரி யாமிவளே-யோருகி லாருமே வீடெனி லம்பர மோர்சரு மக்கடமே. சீதரு பத்தினைத் தேவாங்ம சத்தியைத் தியாநயோ கத்திரளாற்-றேர்ந்தன ரென்றுசு வேதாசு வதரந் தேருந்தி ருத்தேவி. வேதரு பத்துத்த வத்திமத னத்தால் வேறுபடக் கிடைத்த—வேதகி பாதக காதகி யம்மனை வீசியருள் புரியே. 6

வேறு.

உத்தம சத்திசெம் பொன்பொன் னுங்கரி யுங்கெழ வங்கமெழி - லுப்விலர் கண்டுநின் மைவிழி யுன்குமொருங்கரு டங்கியிடத், தத்தத வத்தினி னிற்பவு நற்பரை தருவமெ னச்சொலியே-சதியென லக்குமி யுதியென வைத்தத யைப்பொருள் வைப்பாவாய், கொத்துப வத்திர ளெத்தனை யெத்தனை கோர்த்தனன் முற்றினுநின்-குறியாகைக்கிரை வைத்தினி யேனுங்கொ டுந்துயர் சிந்தாயோ, அத்தம நர்த்தெமெ முமொழி வானவ ளாடுக வம்மனையே-அழகுமி குந்தச வுந்தர நாயகி யாடுக வம்மனையே. 7

அம்மைய ளித்தவ லங்கல ருந்தவ னம்மநு வுக்கருள-வம்மனு வும்பசு கன்மமி ழைத்திட வங்கனை சங்கரன்மேல், வெம்மையு தித்திட மங்கலை யுஞ்செல விண்டுவு மண்டுறவே—வெம்பர னும்பல பம்புற வங்கவை விஞ்சிய பீடமெனு, அம்மையை யிங்கெவன் மந்திர முந்தவ ருந்தவ மேயமைவான்-அம்பரி லிம்பரி லெம்பல மம்பிகை நம்புகவென், றம்மதி யன்னரு ளம்மணி செம்மணி யாடுக வம்மனையே - அழகுநி றைந்தக லியாணச வுந்தரி யாடுக வம்மனையே. 8

வேறு.

காசியில்வி சாலாக்ஷி கவுரிமுக வாசிநீ கருதுநை மிஷ
லிங்கநீ-கமருபிர யாகையில் லலிதைகா முகிகந்த மாமா
நசங் குமுதையாம், ஆசின்மங் தரகாம சாரிணீ கோமந்த
கோமதீ யத்தநத்தே — அருஜயங் தீ க வு ரி கான்யரம்
பாமலய வேகாமிரக் கீர்த்தியே, சாசுவத சேதார சன்
மார்க்க தாயிநி தங்குகோ கர்ணபத்ரே-சைலமா தவிசைல
வாராக ஜயை கமலே கமலால யத்திலெனவே, ஆசையற்
றவர்களுக் கருள்செய்யு மம்மையே யம்மானை யாடியருளே
-அடியனையு நினையுமா றருள்செய்த வழகம்மை யம்மானை
யாடியருளே. 9

திகழுருத் திரகோடி ருத்ராணி காலிகா லஞ்சர்சா
லக்கிராம - சீர்மகா தேவிசிவ லிங்கநீர்ப் பிரியைமா லிங்க
கபிலா மாயையிற், புகழுங்கு மாரிகயை மங்கலையும் விமலே
யாம் புருஷோத்த மோற்பலாக்ஷி-புகுசகத் திரசுபார் சுவத்
திறு ராயணீ கல்யாணி மலயத்தினில், நிகழுவிந் தியை
விந்த்ய வாசிநிவி நாயகத் துமையமர கண்டசண்டீ - நிதி
வைசு ரவணமறை காயத்ரி பார்வதி சிவநான்மு கன்கலே
மகள், அகமதிற் பிரமகலே யாகியே யருளம்மை யம்மானை
யாடியருளே - ஆதியா யளியுடன் பொருள்வையிற் சுந்தரீ
யம்மானை யாடியருளே. 10

*எட் டாவது அம்மானைப் பருவம் முற்றிற்று.*

---

ஒன்ப தாவது

## *நீ ராடற் பருவம்.*

சதரூபையின் பதியாமநு சருவாணிமங் கலையைச்-
சததந்தவம் விதிதந்தபின் சருக்காதிச மைந்தான், புதருதிய
திதிவாரங்கள் புரிவாரருச் சனைகள் - புரிதிவினை யணுகா
தெனப் புகலும்புநி தையதே, விதருபக திருவாக்கியவ்



விரிஞ்சாதிய தேவர் - விரும்பும்பொரு ளரும்பும்விழு விம
லாம்பிகை யுமையே, அதிநந்தக வலைகாவிரி யமுதாடிநீ
யருளே — அடியேன்வினை பொடியாயிட வமுதாடிநீ
யருளே. 1

வேறு.

சுந்தரசு வாகையாய்ச் சுதையாகித் தக்கணையின்
சொருபமாய்த் துன்றியுலவிச் - சுயமநுவின் மைந்தனும்
மைந்தனுற வுயிரிலது துயரசா கரமூழ்கியே, வெந்துவரு
பூமியதி லேகவுங் கந்தனது விந்தைசெறி தேவசேனை-விரை
வினருள் செய்துபின் ஷஷ்டியென நின்றதும் வேறொருவ
ருண் டாங்கொலோ, அந்தவமை மாமியா யறிகுறமின்
மாமியா யாறுமுக னுக்குமனையாய் — அளவிலாக் களவு
பொய் வஞ்சகத் தாலயமென் னதிபாத கற்குமருளும்,
சிந்துரச் செல்வனையு மீன்றதாய் போன்றவிச் செங்கிரி லாடி
யருளே - திரிரங்க மருவங்கம் விரிகாவி ரிப்புனற் செல்விநீ
யாடியருளே. 2

மங்களங் தங்குறத் திரிபுரத் தசுரர்தம் வதமுதவ
மாதேவனும் - மங்களத் திநமதனின் மகிழ்செயப் பூசை
யான் மங்களம கிழ்ந்தளித்தே மங்களக் கிரகமும் மங்கள
நன் மன்னனும் மங்களச் சுந்தரிகளும்-மங்களம் விரும்
பியே மங்களதி நத்தினில் மகிழ்தரப் பூசைசெய்ய, மங்களச்
சண்டிகையென் மருவுநற் பெயருடன் மநநினைப வற்றை
யருளி-மநுமநுடர் முநியிருடி மன்னர்பொன் னுடர்க்கும்
வாஞ்சிதம ளிக்குமெந்தாய், மங்களச் சந்தகில்கள் வாரி
வரு காவிரியின் மருவுநீ ராடியருளே-மல்குமுக் கனியில்கு
மதுவிரவு புதுநீரின் மானசே யாடியருளே. 3

என்னதான் கண்டிக்கு டும்பமென் காநகத் தேழை
நாய் மோன்ம லைந்தேன்-ஏ துக்கு டம்பென்னும் வா துக்கு
டைந்துமிக வித்துயர்ப் பட்டுழன்றேன், மன்னவே

யருணனால் வெந்துயர மங்கலே மாகாளி மாலக்குமீ-மாக லையின் மாற்றென்ன வமரர்கண மோலமிட மாபிரம ரப் படையினாற், சின்னமாய்ப் பிங்மா யசுரர்கண மடி யவே சேதித்த சரிதை தன்னைச் - சிந்தித்து வந்தித்துன் சித் துருவ மாகியே சேடித்து நிற்பதென்றோ, அன்னையாங் கங்கையளு மைப்பசியி லேதோயு மரியகா விரிவி ரியுநீர்- அரியதாத் தெரியவே புரியவே தெரியலுட னம்மைநீ யாடி யருளே. 4

வேறு.

முன்னர்ச் சுரரு மசுரரொடு முயங்கிப் போரின் முறிந் தோட -முதல்வி யருள வென்றபின முனைந்து யான்யா னெனல்காணா, அன்னை யருள வியக்கனென வாகவநலே முதலாக - வருமை தெரிய வமரேச னுங்கே மறைய வஞ் சுதலுஞ், தன்னைத் தொழுக வென விண்ணிற் றனிமா மொழிகொண் டிந்திரனும்-தனித்துச் சபித்துக் கண்விழித் துத் தணர விலக்கம் வருடங்கள், மன்னி யருளு மாதேவி மாபாற் றீர்த்த மாடுகவே-மனனும் விழியுங் கதுவாத மாதா திருநீ ராடுகவே. 5

வேறு.

வந்தவந்த வந்தணரை வந்தனைபு ரிந்தே - வன்றுயரெ னின்றிருமி னென்றுரைக ரைந்தே, சந்தசெனு மந்தனை கருளு மங்காய், வெந்துயர நந்தியற வின்றருளு கென் றுன்-வெந்தணல துந்தணிய வந்தணரு முந்தா, அந்தமறு ளம்பே. கும்பமது பம்பியரு ளம்மா-வங்கதச வங்கமுற வாடியரு 6

வேறு.

கருதரிய கலியாணி கமநீய கமலாக்ஷி கலுமஷம றுக்கு மயிலே-கருணை ழ தக்கடல்க லிதோஷ நாசியே கருமாதி சாக்ஷிகயலே, எருதுரிய னுயகீ யோகார மாயகீ யேகாக்ஷரீ



யக்ஷரீ-யேகசுக போகமே யேஷணு ரகிதமே யேகரச மேயர சமே, சரிதுரிய ரூபமே சச்சிதா நந்தமே சநகாதி முநிபூ ஜிதே-சம்பிநிகு டும்பிநீ சகுணநிர்க் குணரூப சர்வபூ ஷண பூசிதே, அரிதினு மரிதான வம்பிகே காவிரியென் னுறுநீ ராடியருளே - அக்கலச முநிகலச வானைநீ ராதலி னழகிநீ யாடியருளே. 7

பார்க்கவனெ னுந்தவன் றத்தமுநி யானையாற் பண் ணிரண் டாண்டு நோற்றுப்-பரமமா மேன்மையிற் சாதநம் வி னுதலும் பரசாது சங்கமன்றிப், பார்க்கிலய லில்லையாற் பரையினைக் காணேம வல்லியைப் பற்றிநின்ற- படரேம சூடனும் பார்வதியி னுருவினைப் பன்னிபாற் கேட்டு ணர்ந்தே, தீர்க்கமுட னுய்தாய்ந்து தேகாதி நியதியாய்த் தேஜோம யத்தேவியைத்-திரிபைய மின்றியே தெரிசித்து வாழ்ந்தனன் றெரிகநீ யென்றவனையே, ஆர்க்கவரு மிரு கரந் திரைகளொடு பொருதவே யரியநீ ராடியருளே-ஆண் டவர்த மடியார்க ளநுதிநம் புநிதமுற வம்மைநீ ராடி யருளே. 8

பரியினெடு மரையனது குமரர்களு மதிகமிகு பட படென நெடிது வரவே-பயிலுதவ கணனுமிட ரடையு மென மகனுமக பரிவினெடு பரியையடவே, யுரியவனு மரியதுதி புரியவரு பரியைவிட வுயருசிலை மகிமை யுணர் வான்-உயருபத மதைவிழைய வுமையினது பதமதென வுலகுகந வெனவருளவே, அரியதவ முயலநிறை திரிபு ரையு முளமிளகி யருளமய லகமொருவியே - அடிகளடை தருமடியை யடியனடை வுறமடமை யறநெரிய வணவி மணமே, அரியினெடு மரனுமறி வயனுமென வானவுமை- யமுதவற லாடியருளே-அருளுபொரு ளுரியநக ரளகைநிக ரெனவிரிய வமுதவற லாடியருளே. 9

சநகனெனு மனகனவை மறையவரை முறையின் முநி தனயனவ னநிமுநியவே — தவநிகமு சிவைமகிமு

தருணியென வவணருண தரணிபனு மடிதொழுகவே, தனயவின வுவசிலவை தடையில்விடை தருதிவிதி தரவு மெதிர் மதுர மொழியாள்-தனியதனை யறிதியெனி னவித மெவ னவிதமது தனதுமிலை யெனமு ணுகுநீ, அனையவது வறியினரு வமுதபத முறலுமிதை யறிகவிறை தனிடுே தியே-அறிவிலுரு கரையவொளி ரமையுமெமை யதுவழியி லருளவொரு பகலுமுறவே, யநகநிர வயவபர வறிவுருவை யகமறிய வமுதவற லாடியருளே-யணிபணிசெய் வணிகர் நிறை யருள்பொருள்வை யழகியெழு மமுதவற லாடி யருளே.
10

*ஒன்பதாவது நீராடற் பருவம் முற்றிற்று.*

---

பத்தாவது

**ஊசற் பருவம்.**

---

வெங்கனவை மெய்யெனவு மெய்யிதனை மெய்யென வும் வீடதென வோடிவாடி-வெந்துமிக நொந்துதிரி திரு சியா காரனை விரைந்தருள லெந்நாளோ, கங்குல்பக லற்ற விட மெங்குளது சங்கற்ப கற்பனைக ளற்றஞான்றே-களி மிகுத றுயிலிலநு திநமநுப வமதுறவுங் காணுதுபோ ணு ணியே. பங்குவென வந்தனென வதிரனென வெதிர்நிகழ் வன் பார்வதீ தயைசெய்துநீ-பாவியே னககரண வூசன் மிசை யேறியே பரமவா நந்தமிகவே. புங்கா நு புங்கமாய்ப் பொங்கிவர வெங்குநிறை பொன்னூச லாடியருளே — பொருள்வைத்த சேரியினி லருள்வைத்த பொன்னரசி பொன்னூச லாடியருளே.
1

சேத்தியந் தன்னைவிட் டாற்சேத நந்திகழுஞ் சேத்தி யஞ் சிவையயன்றிச்-சிறிதுமிலை வெறிதுலவு சித்தமே சேத்தியஞ் சித்தமுஞ் சிவைமயமதே, சேத்தியஞ் சித்தமல



துறையுமெனி லதுதனைச் சித்தமின்றிக் கண்டதார்-சிவனு மவ ளொருஞாந மதுபிரிவு கதுவுறு சேர்வதெங் கேபிரி வகை, ஆத்தியந் திகமாக வடிவத்தை யதுவிடின் ஞுலாப மாமலிகம் - அலைமநமு மேயசத் தாதலாற் கனவென்ன வன்னைநீ யன்றி யுளதோ, போத்தியம் போதமென வாய் நின்ற பொன்னரசி பொன்னூச லாடியருளே - பொருள் வைத்த சேரியினி லருள்வைத்த புண்யவதி பொன்னூச லாடியருளே.
2

விதியினொடு விண்டுவும் விமலனும் விபுதரும் வித் தையே நீகதியெனு—வெகுதவங் கோலவுந் திரிபுரா தேவி யும் வெளியாகி வேண்ட லென்னே, கதியதென் னருடி யென் றிடவுமக் காட்டையைக் காட்டியே கைவரற் காய்க் — கடலின்மணி தீபநீ பவநசிந் தாமணிக் கவினு மண் டபமதனிலே, விதிமுதன் மயமஞ்ச மீதிலே திரிபுரா மிளிருசுந் தரியின் சிந்தை — மேலதா மேலுமா விரிதரின் மகிமையை வேதமே யோது மென்றுய், போதமே வடி வதா யோதமே யென்மநப் பொன்னூச லாடியருளே — பொருள்வைத்த சேரியினி லருள்வைத்த பொற்புருவி பொன்னூச லாடியருளே.
3

வித்தையுள் ளத்துவித வித்தையே மிக்கதா மேலான பல முதவுமாம்—மின்னென்னை யுன்னிடா ததுமன்ன லெங்ஙனே மிதியெனது வடிவமன்றோ, இத்தையக மென் றிடல் வென்றிடின் னிஃதுறுவ திஃதுறின் யாதுமறி வாம்—இச்சைமுதல் வாதனைக டுன்புறுத் தாவந்த விட ரெலா மிந்தநந்தீ, அத்தியந் தமுமஞ்சல் துஞ்சிடும் ஞாதாதி யாடம்பரங்கண் மங்கும்—ஆசையற் றிடுநற்ற வர்க்குற்றி டும்விரைவி லஜமினென் றருள்செய்தனை,

பொத்தையுள் ளுள்ளமள் ளாடிடும் பொள்ளாது பொன் னூச லாடியருளே — பொருள்வைத்த சேரியினி லருள் வைத்த பொங்கமது பொன் னூச லாடியருளே. 4

அன்னைநின் மகிமையினை யாரெடுத் துரைதருவ ரற் புதம் அற்புதமே—யறிவார்க ளறிவார்க ளறியார்கள் அர னுதி யோரதிட்டம், முன்னைருக் மாங்கதனு மேமாங்க தனும்வகம் முன்னியே பிரம ராக்க — முதலவன் கைப் பட்ட வன்விட்ட முதல்வியின் மூதறிவின் மூதுரைகளுக், குன்னையே நுதலவும் மன்னியெழு புண்ணியத் தூற்றத்தி னுலுருவுபோ — யுவரையும் விட்டுள்ள கதியதனை யண் மியே யுவகையுற்றன னென்பதாற், பொன்னையே மண் ணையே பெண்ணையே விடமனப் பொன் னூச லாடியருளே —பொருள்வைத்த சேரியினி லருள்வைத்த செல்விநீ பொன் னூச லாடியருளே. 5

ஆகாச நீலமது மாடியின் னிழலும் மறியார்களறி வார்கள்போல்—அம்மையின் பாலகில மயலாகி யுயலாகி யாமிருவர் பாலுமென்ப, ஆகன்ம விலயமும் விவகார மக லாதிங் காயினு யம்மை சரணே—யகர்நிசமு மறவாம லுறைதலா னுகர்வினையை யநுபவிக் கினும்விக்கலார், ஏகமும் போகமும் மிவர்மனத் தள்ளளவு மிப்பிறப் பே முடிவதா—மிதிலைய மிலையென்ன வேமாங் கதன்கூறு மெழிலான பெருமை யுடையாய், போகால யத்தினிற் கர ணமெனு மூஞ்சலிற் பொன் னூச லாடியருளே—பொருள் வைத்த சேரியினி லருள்வைத்த கண்ணம்மை பொன் னூச லாடியருளே. 6

எம்பிரான் முதலாக வீர்கடைய தாகவே வெம் மம்மை யேதங்கினும் — இலகுவாய் பொதுவாக வார்ப்



புனு யெதனோடு மின்பமே வடிவ மாவாய், இன்பமா மிவனில்லை யாயிடின் வாழ்வதிங் கெவ்வுயிர்க ளிவளின்பி னின் —இலேசமே கொண்டுமிக வாநந்தம் வந்ததென விந் திரா தியரும் வாழ்வார். அம்பிகைய வித்தையாம் வித்தை யாம் பந்தமும் மப்பந்த நீங்கு முறையும்—அளவற்ற போக முங் களவற்ற யோகமும் ஆகுவா யைய மில்லை, பொன் பருங் கால்பொறிக் கான்மகம தேயூசல் பொன் னூச லாடி யருளே. பொருள்வைத்த சேரியினி லருள்வைத்த தேவி யுமை பொன் னூச லாடியயருளே. 7

அன்னையே யறிவிக்கு மாநந்த வல்லியினி லறிஞனுமை யாவனென்றே—அறியபர வாகாச பாரமே சுரிசத்தி யாநந்த மய மாகுமே, பின்னையே விந்தவா காசமா நந்தமாய்ப் பேணுவி டில்வாழவோ—பிருகுமா வல்லியினு மின்பினின் றேயிவைக ளென்பதாற் பேசுமுனையே, தன்னையே யுரை பிருக தாரணிய மதனினுந் தாய்வினவ முசியு ரைப்பான்— ருயிடத் தேயிவைக ளோதம்பு ரோதமாந் தன்மையா லுனைய டைந்தேன், பொன்னையே யன்றியொரு பூடணம திலதுபோற் பொன் னூச லாடியருளே—பொருள்வைத்த சேரியினி லருள்வைத்த வன்னமே பொன் னூச லாடி யருளே. 8

சத்ததே சித்தாயுஞ் சித்ததே சத்தாயுஞ் சச்சிதா நந்த மாயுஞ்—சார்கின்ற நினையந்தர் யாமிப்பி ராமணமுஞ் சாந் தோக்கி யோபநிடமும், அத்தேவ சத்தியினை யேதுவென் ருேதுஞ்சு வேதாசு வதரமறையும்—அரியசிவ சிவையாகி கவுரிமங் கலையாகி யவ்விண்டு பரம பதமாய்ச், சித்தேயென் னுருவமா யஞரெலாந் தீரவுந் தேகாதி மயலேகவுந்—திவ் யமா வருடரச் செப்பிவைப் பாய்வீர சேகரக் கயமுகற்கே,

புத்தமுத போகமே பூரணு நந்தமே பொன்னூச லாடி யருளே—பொருள்வைத்த சேரியினி லருள்வைத்த தெய் வமே பொன் னூச லாடியருளே. 9

தென்னுசி யேசகுரு திருமாலு நான்முகனுஞ் சிர்வசிட் டர்சித்தியே—திகழுறுப ராசரவி யாசர்சுகர் கௌடபதர் சேடகோ விந்தயோகி, தன்னேச சங்கரர் சலசபதர் வார்த் திகாத் தாமலகர் தோடகாசான் — தார்வித்தி யாரண்யர் சுப்ரமணி நயினவழ கப்பவீ ரேசபத்ரர், முன்னுசின் முத் தைய ருகந்தைய ராண்டவர் முதிர்துறவு கருணையிறை வர்—முடனேன் றனையாண்ட வீரசே கரஞான முனிவர்பத முனிவர் வாழப், புன் னூச லாடுமந மென்னூசல் கொண் டுநீ பொன் னூச லாடியருளே—பொருள்வைத்த சேரியினி லருள்வைத்த சுந்தரீ பொன் னூச லாடியருளே. 10

பத் தாவது ஊசற் பருவம் முற்றிற்று.

ஸ்ரீ சௌந்தரிய நாயகி பிள்ளைத் தமிழ் முற்றுப் பெற்றது

ஆகச் செய்யுள் 100.

ஸ்ரீ சௌந்தரிய நாயகி துணை.





உ

சிவமயம்.

கணபதி துணை.

ஸ்ரீ சங்கர பூஜ்ய பகவற் பாத ஆசாரிய சுவாமிகள்

திரு வாய் மலர்ந்தருளியதும்,

**வீர. சுப்பைய்ய சுவாமிகளால்**

மொழி பெயர்க்கப்பட்டது மாய

# பிரஹ்ம நாமாவலி.

குரு வணக்கம்.

வள்ளல் வீர மாதவன், றெள்ளு சீர டிக்கணே
யுள்ள மான கோயிலீ, துள்ள வாறு திக்குமால்.

நூல்.

ஒருதரங் கேள்விமாத் திரத்தி னுலொரீஇப்
பிரமமெய்ஞ் ஞானமே பிறக்கும் பெற்றியார்
பிரமஞா நாவலிப் பிணைய லாமிதைச்
சருவரும் வீடுறச் சாற்று வாமரோ. 1

அசங்கனு னசங்க னுன்மற் றசங்கனு னசங்க னுனே
யசங்கனு னசங்க னுன்மற் றசங்கனு னசங்க னுனே
யசங்கனு னத்தி பாதி யாநந்த வடிவ நானே
யசங்கனு னுனே நாச மற்றவ னுவ னன்றே 2

நித்திய சுத்த னுனே நிருமல விமுத்த னுனே
மெத்தொரு வடிவி லாது மிளிரழி விலனு நானே
புத்தபூ மாவி னின்பப் புகழ்வடி வுளனு நானே
சத்திய வநந்தா நந்த வழிவொழி சதுர னுனே. 3

நித்திய வடிவ நானே நிரவத்ய வடிவ நானே
யொத்தொரு வடிவி லாத வுயருமச் சுதனு நானே
சுத்தமெய்ப் பரமா நந்த சுயவுருச் சோதி நானே
யத்தமி யாத நானே யவ்யய மாகின் றேனே. 4

சுத்தசித் துருவ நானே சொப்பிர காச னுனே
வத்துவா மாத்மா ராம வயம்பெறு மமுத நானே
தத்துவ வகண்டா நந்தத் தனிப்பரம் பொருளு நானே
தத்தொடு நாச மற்றுச் சந்தத மொளிர்கின் றேனுன். 5

பிரத்தியக் குருவ நானே பெருஞ்சித்து வடிவ நானே
வரத்துறு சாந்த னுனே வரன்பிர கிருதிக் கேயான்
துரத்தமின் னிலையா யுள்ள சுகவடி வமர னுனே
புரத்தினைத் திரமுங் காணும் பொன்றிலா வடிவ நானே. 6

தத்துவா தீத னுனே தண்பர மாத்மா நானே
மத்தியா தீத னுனே மன்பர சிவனு நானே
தொத்துறு மாயா தீதச் சுயபரஞ் சுடரே யான
வத்துவு நாச மற்ற வளம்பெறு மமுது நானே 7

பெயரொடு வடிவ மற்ற பெற்றிய னுனே நானே
மயலறு சித்தா காரன் மருவுமச் சுதனு நானே
துயரறு சுகமெய் ரூபச் சொரூபனு நானே நானே
யயலற வெங்கு மொன்று மழிவில னுவ னுனே. 8

மாயையு மாயை யின்றன் மக்களாங் காய மாதி
யாயவை யெனக்கெக் காலு மாணையே யில்லை யில்லை
தூயநற் சுவப்ர காசத் துயரறு மேக னேனுன்
றேயகா லாதி யற்றுத் திகழழி விலனு நானே. 9

பிந்நமுக் குணமு மற்ற பேரொளி நானே நானே
மன்னுமெய்ப் பிரமா தீநன் மருவிடு மெவையுங் காணு
நன்னயச் சான்று நானே நானனி யநந்த ரூபன்
றுன்னுநா னின்ப ரூபன் றுகளழி விலனு நானே. 10



அந்தரி யாமி யாய வருமொரு வடிவ நானே
நந்தலில் கூடத் தன்னுன் நான்சரு வகனு கின்றேன்
பந்தமில் பரமாந் மாவின் படைப்பறும் படிவ நானே
யந்தமற் றெளிரும் ஞான வமலமாம் வடிவ நானே. 11

நிட்கள வடிவ நானே நிகரறுஞ் சநாத னன்னு
னிட்கிரி யோகத் தோடு நிகழெலா வடிவ நானே
புட்கரம் போல வெங்கும் பூரண முதன்மை யோனுன்
மட்கலில் பிரத்தி யக்க வடிவுள வழிவி லேனுன். 12

துவந்துவ மாதி சாக்கி வடிவவாய்த் துலங்கா நின்றேன்
பவந்தவி ரசல னேநான் பனுசநா தனனு நானே
சிவம்பொலி சருவ சாக்கி வடிவமாய்த் திகழ்வ னுனே
சிவதம்பற் றிடவுங் கூடாச் சிதைவிலாச் சுதையு நானே. 13

திகழ்ப்ரஞ்ஞா நகந னேநான் செறிவிஞ்ஞா நகந னேநா
னிகழ்தருங் கருத்த னல்லா விரும்பெறும் வடிவ னேநான்
மகிழ்தரும் போக்தா வாக மருவிடா வடிவ னேநான்
புகழ்தரும் பூன்ற மாகிப் பொன்றிலா வடிவ நானே. 14

வருநிரா தார மான வடிவொடும் வயங்கு வேனுன்
சருவவா தார னுகிச் சத்திய னுனே யாவே
னிருமல வாத்ம காம நிகரறும் வடிவ நானே
கருமமிங் கெவையு மற்ற கழிந்திடாப் பரம னுனே. 15

தாபமும் மையுமி லாத தனிவிசிர் முத்தனே நான்
பாபமா ராக மூன்றின் பற்றறு வடிவ நானே
யாபத வவத்தை மூன்றின் சான்றதா யமர்கின் றேனுன்
மாபல பிரம நானே மரணமில் வடிவ நானே. 16

திருசியந் திருக்கே யென்னுத் திகழொன்றற் கொன்று
[வேறும்
பொருளிரண் டுளதி ருக்கோ பொன்றிலாப் பிரம மாகுந்

திருசிய மாயை யாகுந் திரந்திர மெனவே யெல்லா
விருக்குகண் முடிவிற் போற்றி யிலங்குடிண் டிமம
[தாகும். 17

சாக்கியஞ் சான்றை யிங்ஙன் றனித்தனிப் பிரித்து நோக்கிச்
சாக்கியா னெனவே நித்தந் தனையெவ னறிவா னன்றே
வாக்கிய முத்தன் வித்து வானுமிங் கவனே யென்னுத்
தேக்கிய மறையி னீற்றிற் றெரிக்கும்டிண் டிமம தாகும். 18

கடபட குட்டி யாதி காண்புறும் பொருண்மற் றெல்லாந்
திடமனை யன்றி யென்றுந் திரணமு மில்லை யாங்கே
படர்தரு சகங்கள் யாவும் பரசிவ வடிவே யென்னு
விடரறு சுருதி யீற்றி னிலகுடிண் டிமம தாகும். 19

சத்தியம் பிரம மாகுஞ் சகத்திது மித்தை யாகு
நித்தியப் பிரம மேதா னிகழ்த்துயி ரனிய மன்று
லித்தினு லறியத் தக்க தின்பநன் னூலை யென்னு
மெத்தவு மோத்தி னீற்றின் மிழற்றுடிண் டிமம தாகும். 20

உள்ளொளி வெளியி லுள்ள வொளிபிரத் தியக்கி னுற்ற
தெள்ளொளி மாயை தற்குந் திகழ்பரஞ் சோதி சோதி
பொள்ளலி ருனே தானுயப் பொலியொளி யாத்மச் சோதி
விள்ளறுஞ் சிவமே யானு கின்றனன் விமல ஞானே. 21

சங்கர குரவ னருடரு மிதனைச் சந்தத நின்பதந் தொழுதே, வெங்கட முநிவன் முதலவர் பணியும் வீரமா தவநின தருளா, லிங்கிதை யரிய செந்தமி ழுலங்க வியற்றின னிலங்குமற் றிதனைத், துங்கநின் புயத்தி லணிந்தெளி யேற் குத் தூயவிந் நிலையுய வருள்வாய். 22

*ஸ்ரீ பிரஹ்ம நாமாவலி முற்றிற்று.*

---



உ

சிவ மயம்.

*கணபதி துணை.*

ஸ்ரீ சிருங்கேரியின்கண் ணெழுந்தருளியிராநின்ற
ஸ்ரீ சச்சிதாநந்த சிவாபிநவ நரசிம்ம பாரதி ஸ்வாமிகள்
ஸ்ரீ கோவி லூர், ஸ்ரீவீர சேகர ஞாந தேசிகரை
ஆசீர்வதித்த

## ஸ்ரீ ஆசீர்வாத பஞ்ச ரத்நம்.

---

அமரமங் கையராற் சூழ்தரு பவளு மகிலமா விட யவா சையினைச், சுமையெனத் துறந்தோ ரடைதரு பவ ளுந் தூயயா மூதனிறு லழகு, சமைவுறு கமல மலர்க்கரத் தினளுஞ் சத்தமாஞ் சாரதாம் பிகைதான், விமலநன் மதியை யீந்துகாத் தருள்க வீரமா முநிவரன் றனையே. 1

கிருபையின் னமுத நிறைதரு கடலா கியதிரு வாணி யம் பிகையே, யொருசல மிலவை ராகமீந் தருளி யுயர்பர மான்மக மான, திரமுறு மதியை யுஞற்றியே யருளிச் சிவ பெரு மான்றிரு வடியி, லருமையன் புடைய வீரமா தவனை யன்புடன் காத்தரு ளுதியால். 2

கரையறு கருணை நிறைதரு கடலே கருதரும் வாணி யம் பிகையே, விரையுறு கமல நினதிரு கழலின் மிகுதிட பத்தியா மதையுந், தருமம தியற்றும் பெருந்தவர் பெறுகத் தகுந்திரு முத்தியா மதையும், விரைவினி லமல மதியுள வீர வீசனுக் குதவியே யருள்வாய். 3

பொய்ம்மையாம் பொறிக டமைநிரந் தரமும் பொலி வுடன் வெலும்வலி மையதுஞ், செம்மையா மேனிச் சிவன்றிரு மாலா தியர்களி னுலயா திகளைச், செம்மையா

யியற்று மாற்றலுந் தெளிந்த செழுந்தவர் குழுவில்வாஞ் சையையு, மம்மையே கருணை யதனினுல் வீர வருந்தவற் குதவியே யருள்வாய். 4

தேசொடு தவமுங் குணங்களுஞ் சிறந்த சீலமார்ந் திலங்குமிங் கிவர்போன், ருசறு பவரா லவர தமுமே யரியவிம் மடமதும் விளங்கிப், பேசுமெஞ் ஞான்று முல கினர் தமக்குப் பெறும்பெறு முதவிபெய் குவதா, யீசன தருளா லளவறு கால மிலங்குக ஜயமுடன் மாதோ. 5

ஸ்ரீ ஆசீர்வாத பஞ்ச ரத்திநம் முற்றிற்று.

---

உ

சிவ மயம்.

ஓம் மஹா கணபதயே நம:

# பாரி ஜாத வநேசுவரர் பதிற்றுப் பத் தந்தாதி.



## மங்கலம்.

சீராருந் திருக்களர்வாழ் சிவபெருமான்
திருவடியைத் திநமும் போற்ற,
வேராரு மந்தாதி தனைப்புரிய
வருள்புரிவா னிமையோ ரோடும்,
பாராரு முநிவரரும் பணிந்தேத்தும்
வலம்புரியெம் பரம தேவ,
னேராருந் திருவடியை நிதந்தொழுது
நனிபுகழ்ந்து நினைகு வாமே. 1



திருமகளுங் கலைமகளு மலைமகளுந்
திநம்பணியுந் தேவி யோடுங்,
கரிமுகனன் முருகனெனுங் கருணைசொரி
குமரரொடுங் கலந்து மேவித்,
தருவநமிங் கதனிலுறை பெருமானே
முத்தாபந் தணந்து வாழ்வா,
னிருவினையிற் றனையுமிந் நாயடியே
னினைவழுத்த வியைந்திட் டேனே. 2

இட்டாயிங் கெனைப்பிறவி தனிலெனினு
நாவடிவா யினிது லாவ,
நட்டேது மில்லெனினு முட்டாளாய்
நாரியர்தம் நசையிற் போந்தே,
கெட்டேனு னெந்தாயே யாயினுநின்
றனைமறவாக் கேடில் செல்வந்,
தொட்டேநா னுய்யும்வணந் திருக்களரெம்
பெருமானே தொடுப்பாய் நீயே, 3

நீயேயென் னரியபிதா நின்னிடது
புடைபடர்ந்த நிமலை தானே,
தாயாகு முன்னரிய விருகுமரர்
தனையராந் தமர்க ளோதா,
னேயாது நினைநினையுந் திருவடிய
ருலகமெலா முறையுந் தேயம்,
பேயோடு நடமாடுந் திருக்களரெம்
பெருமான்யான் பெற்ற பேறே, 4

பேறேநின் பதம்பெறுத லதுபெறவே
யருந்தவர்கள் பெருந்தா புற்று,
ரேறேறும் பெருமானே திருக்களரெம்
மிறையவனே யெழினின் னுமங்,

கூருநின் றனனடியே னதுபெறவே
யயலொன்றுங் குயிற்றி லேன்யா,
னூறேது மில்லாமற் பதமீத
லுரியகட னுனது தானே. 5

தானேயித் தரணியினில் வித்தையெலா
வற்றினுமே தடையி லாமன்,
மேனேக்கு மதிற்சுருதி மேன்மையதா
முருத்திரிதான் மேன்மை மேன்மை,
யானேறும் பெருமானே திருக்களரா
யதனிலெழுத் தைந்து மெந்தாய்,
மேனேக்குஞ் சிவவெனுநின் றிருநாம
வீரெழுத்தே மேன்மை யாமால், 6

ஆலநிழ றனிலமர்ந்தங் கன்றொருநால்
வருக்கறத்தை யருளி னைநீ,
கோலமுடன் றிருக்களரிற் றிருவாசப்
பெருமுநிக்காய்க் கூத்த னுகிச்,
சீலமுடன் றிருநடநந் தனைப்புரிந்தா
யறிவறியாச் சிறிய னேனை,
யேலவுனைப் பாடிடுமா பணித்திட்டாய்
நின்கருணை யென்னே யென்னே. 7

என்னேநின் றிருக்கருணை யிருந்தவா
வேதுமிலா வெனையாட் கொண்டாய்,
கொன்னேவிட் டிடனீதி யன்றுகு
நின்பதத்தைக் குழைந்து போற்றிப்,
பொன்னுருங் கிரிக்கரத்தா யுரித்தான
திருக்களராய் பூன்று வென்றே,
யென்னேர முமுனையே யான்வழுத்து
மெழில்வரத்தை யெனக்கீ வாயே. 8



வாயோநின் றனைப்புகழ வரிவிழியோ
நிற்காண வயங்குங் காதோ,
வோயாது நின்புகழை யுவந்துகொள
வொண்கரங்க ளொருங்கு கூப்பத்,
தூயாநின் றிருக்கோயில் வலஞ்சூழ
வென்பதங்க டொழும்ப னுன,
நாயேற்கு நல்குதியேற் குறையுண்டோ
திருக்களரை நயந்த வாழ்வே, 9

வாழ்வேயென் னுயிர்க்குயிரே வந்தாளுந்
தந்தாயே வழியி லாமற்.
றாழ்வேனைத் தாழாதிங் கஞ்சலென
வெனையாண்ட தயையுள் ளானே,
பாழ்வாயைத் திறந்துனது பெரும்புகழைப்
பாடிடுமா பணித்தே யின்பத்.
தாழ்வாயென் றருள்புரிந்த வடைந்தார்க்கின்
னருள்புரிவா யடைந்தேன் கண்டாய். 10

கண்டாயென் குறையெல்லா மோர்பொருளாய்க்
கழித்தாண்டாய் கண்கள் மூன்றே,
யுண்டாக்கி யளித்தழிப்பா னுடையானே
விடையானே யுமையாள் கூறு,
விண்டாயோ வெனிலடியேன் வேறுதுணை
நனிகாணேன் விம்மி விம்மி,
யெண்டோளா வெந்தாயே யென்றழுதிங்
கேங்கலல்லா லென்செய் வேனே. 11

வேறு.

வேனலிற் படும்புன் கிருமியை நிகர்ப்ப
வெந்துயர்க் கடலிடை விழுந்தே,
யானுனை மறந்து வாடின னந்தோ
யாரினுங் கடையனு னந்தோ,

வீனறிற் பெரிய னிழிவினி லரிய
னென்செய்வா னிப்பிறப் படைந்தேன்,
நானிலம் புகழுங் களரியா யெனைநீ
நாடிலே யெனிலென்னென் புரிவே. 12

புரிவதொன் றறியேன் புநிதனே புரங்கள்
பொடிபடத் தழல்விழி பொடித்த,
வரிவைதன் பாகா வடியனே னுயிரே
யஞ்சலென் றருள்செயல் வேண்டும்,
திரிவித தாப மற்றவர் வாழுந்
திருக்கள ருறைந்தநா யகனே,
யெரிகரத் தேந்து மெந்தையே யடைந்தார்க்
கெழிலருள் செய்யுகிற் பாயே. 13

பாயதோ பூமி பழந்துணி யுடையாய்
பசித்திடிற் புசித்திடில் பழமா,
யாயபே ரன்பர் நின்றனைப் பணிந்தே
யரும்பதம் பெறவிரும் பினரா,
ஞயடி யேனே நாரியர் விழைவா
னல்லறு சுவையைநா டினனுய்க்,
தீயனு யிருந்துந் திருவடி விழைந்தேன்
றீயனைக் காக்குநா ளுளதோ. 14

உளதுநின் பதமா முலகிது பொய்யா
முண்மையென் றுரைத்தனர் பெரியார்,
களநிறை யடியேன் கனவினு நினது
கழலிணை கருதுரு துழன்றேன்,
வளநிறை களரி நாயக வமுத
வல்லியென் கொடிபடர் வரையே,
தெளிவுற வெனை நீ யாள்வது கடனுந்
தீயருக் கருள்வதே யருளால். 15



அருள்பொழி யமுத வதநமே திகத
ஞதிய வமரர்க ளெவருந்,
தெருள்விழி யரியொ டயன்முத லினருந்
தெருவினிற் செயசெய வெனவே,
யிருளற விறைஞ்ச விமகிரி பயந்த
வெழிற்றிருக் குமரிய ளோடு,
முருள்மலி யாழி மிசைபொலி யுருக்கண்
டுளங்குளிர்ந் துவகைகூர்ந் தனனே. 16

தனந்தனை மதித்து நினைநித மறந்து
தருக்கியான் வாழ்ந்திட வறியே,
னினந்தனை நினைந்து கருவம தடைந்தே
யின்புற வறிகில னருநூன்,
மனந்தனின் மறைந்த பெருமையை நினையேன்
மருக்கிளர் திருக்கள ரிறையே.
தனந்தனி யிருந்து நின்பதம் பணியத்
தண்ணரு டனைவிரும் பினனுல். 17

ஆலமோ விழிக ளரும்பெரு மலையோ
அரிவையர் குயங்கள்பே ரல்குல்,
மூலமே துயிலும் படங்கொலோ விவற்றை
மூடனே னறிகிலா தயர்ந்தேன்,
சீலமே மிகுந்த திருக்களர் வாழுந்
தெய்வமே யென்னுயிர்த் துணையே,
ஞாலமே யொளிர்க்கும் ஞாநநற் சுடரே
நான்மறை தேடரும் பொருளே. 18

பொருளினை தடியை யேத்துறும் பொருளே
பொருளெனப் புங்கவ ரறைந்த,
தெருணின தருளா லென்மனத் திருந்துந்
தெரிகிலா ரெனத்தியங் கினனு,

விருணனி மறைக்கு மேதுவா லெந்தா
யிருளதை யொழிக்குமா றடைந்தேன்,
வருணனெங் கணுஞ்சார் தருவனத் திறையே
வாடினேற் கருடரல் வேண்டும். 19

வேண்டுமொன் றினையும் விழைவுரு வரமே
விரைமலர் மறந்திடா வரமே,
தூண்டருஞ் சுடரே தோகையற் பயந்த
தோகையா மமுதவல் லியின்ற,
ஞண்டகை யான வமுதமே குமுத
வரியநண் பினற்சிரம் புணர்வோய்,
மாண்டவ ரெலும்பை யணிந்தருள் களரி
மன்னிய மன்னநன் னிதியே. 20

நிதிநிறை மாட மாளிகை யெவையு
நிகரற மேருவோ டிகலும்,
விதியென விணவர் நகருற வவரும்
வியப்பொடு பாரிஜா தேசன்,
நதிபொதி வேணி விரிந்திட வாடு
நடநமே காண்புற வரவே,
யதிசுல பமதாம் வளநிறை களரோ
யடைந்தவர்க் கருள்செயு மன்னே. 21

வேறு.

அன்னேயுனை யென்னென யான்றுதி யாற்றுகிற்பேன்,
பொன்னுர்மலை மாதனு வோய்புக ழென்மனத்தோ,
மின்னுர்திரு வேணிய மேலவ பாரிஜாத,
நன்னுயக நின்கழ லேதுணை நாயினேற்கே. 22

நாயேயனை யேன்றனை நாடியு நன்மையிவான்,
பேயோடரு நாடக மாடிடும் பித்தனேயோ,
கூயேயருள் செய்தனை கொண்டதை யெண்ணுகா றுந்,
தூயோய்மன மின்புறு மன்பினை சொல்லின் மாட்டே. 23



மாட்டார்புர நீறெழ மாட்டிய நாட்டமுற்றே,
யாட்டேகள ரிப்பதி யிற்செயு மாதிதேவே,
கூட்டேயெனை முத்தியிற் கூட்டிடில் யார்வெறுப்பார்,
நீட்டேகர மென்றலை நன்றுற நீயெந்தாயே. 24

தாயேதநு வாதிய யானல தள்ளிவிள்ள,
நீயேயென தின்னுறு வாயினை நீண்மனத்தே,
வாயாதறி வில்லவர் போனனி வாடிநின்றேன்,
சீயேயென நற்களர் நாயக செப்பியாளே. 25

ஆளேயென நின்னடி நாடிய வன்பினேனை,
மாளாவகை காத்திடன் மாதவ நீதியன்றே,
நீளார்சடை நின்மல நெற்களர் வைகுமெந்தாய்,
தாளேதனைத் தாழுவர்க் கீந்திடுந் தண்மையோனே. 26

மையார்விழி மங்கைய ராடும ருங்குதன்னிற்
செய்யாய்திருத் தேரினி னீவருஞ் செய்தியோர்ந்தே,
யையாகளர் நாயக வென்மன மாங்குவந்துன்,
மெய்யார்திரு மேனியை நோக்கிமி ளிர்ந்ததின்றே. 27

இன்றேயென தோய்வருந் தீவினை யிற்றதாகு
நன்றேநிறை நற்களர் நாடிந டக்கவெண்ணிக்,
குன்றேயுரை நாயக வென்மனங் கோணிலாம,
னின்றேருறும் வீதியிற் றீதற நிற்குஞான்றே. 28

தேவேதிரு வீரநற் சேகர தேசிகற்சேர்த்,
தேவேசெயு மெந்தைநின் ருளொடாமு தேத்திநின்றேன்,
கோவேபெரு நற்களர் வாழ்ந்திடுங் கோதிலானே,
ஆவாவெனை யாண்டிடி லென்குறை யாமுனக்கே. 29

உன்பாலகன் யானெனப் பன்முறை யோதினேன்யா,
னென்பாலக நற்றொழில் செய்வதி லேதமென்னே,
யன்பேயிலை யென்றிடி லன்பினை யையவீதி,
தென்பான்முக மாய்நட னுகளர்ச் செல்வமேயோ. 30

ஓகோவுனை யான்மறந் தேதிந முய்குவேனே,
காகாவென யான்சொலல் நீதிகொல் கண்கள்மூன்றே,
யேகாதிருச் சீர்க்களர் வாழ்ந்திடு மெங்களுத,
வாகாவிது நின்கரு ணைக்கெழி லாகலாமோ. 31

வேறு.

ஆமென்றன வறியேனின தருணின்றது மறியே,
னேமென்றையு மறியேனுனை யோதும்வகை யறியேன்,
காமன்றனை யெரிசேர்தரு காலா களநீலா,
பாமன்றிருக் களர்நாயக பதையா வணமருளே. 32

அருவேதிரு வுருவேயழ குருவேயரு வுருவே.
மருளேசெறி யெளிநாயினே மருளாவண மருளீ
பொருளேமலி களர்வாழிறை பொறையேநிறை துரையே.
தெருளேதரு மொருவாமறை திருவாய்நிறை வோனே 33

நிறைவேயொரு குறைவேயற நிமலாபரி புரனே,
வறிவேதிரு வுருவோய்நிக ரறுவோய்நிலை யுறுவோய்.
பொறிசேர்வுறு புறையேநிறை யெனையாடிருக் களராய்,
மறவேனுனை மறவேனுனை மறவேனுனை நிதமே. 34

நிதமேநின தடிசேர்தரு நிகரேயறு தவர்நீ
ளிதமேயுற வைய்யக்கர மெழிலோருடன் புரிவான்,
முதமூவிரு முகநாயகன் றனையேவிய முதல்வா,
சுதைநாயகி கொழுநாகளர் சுகநாயக முநியே. 35

முநிவேமிக நனிமேவுறு முநிவோர்தொழு முநிவன்,
கனிவாயுனை யினிதேபணி தரவேகள ருறைவோய்.
சினமோதவ முறுமாறுசெய் சிவனேயெனை யாள்வா,
னுனுமாவலி யிலையோகர வொழிவேசெய லறனே. 36



அறமேவுற வருளேசெயு மருணுயகி தனமே,
யுறுசீரமு தயின்மாதவ னுனைநீருளா ரெனவே,
யறைவானருள் புரிவோயம ரருநாடிட வரியோய்,
திறமேவுறு களர்மாமணி சிறியேற்கருள் புரிநீ. 37

நீதானடைந் தவர்க்கேயருள் செயுநின்மல னெனவே,
தாதாபெரு மொருபேரினைத் தழுவம்புக ழினனு,
லேதோவுனை யருளீதியென் றிரந்தேயடைந்த னன்யா,
னீதாவரு ணிமிடந்தனி னிலைபே ரஃதுறவே. 38

வேதம்மொரு நாலும்மத னங்கம்விய னாறு,
மோதும்மிரு திபுராண நியாயம்முறை யோர்வு,
மேதுந்திருக் களர்மேவிய விறைவா நினைமறவா,
தோதும்மிது சாதம்மென வுளநாடின னருளீ. 39

ஈசா களரீசா புரநாசா வின்மகேசா,
கூசாதுனை யானேபணி வேனீயருள் கூராய்,
சீச்சீயென வெனையேசிடிற் சீறுமர வேனே,
மாசார்தலை மாலைப்பெரு மகிழ்வேன் மலருதியால். 40

மலர்மாலைகள் பொலியாடவர் மகளிர்வினை யாடிக்,
குலவும்பொழி னிறைகற்பக வனமேயுறை குழகா,
புலையேனெனை யுனதாளிணை புகழ்வானருள் புரிவாய்,
நலநாயக புலவோர்புகழ் நன்னுடுறை யன்னே, 41

வேறு.

அன்னையி னினிய வருள்பொழி யிறைவ
வன்னையின் வயிறுறு மக்காற்,
றுன்னுறுந் துயரை நினைந்துநைந் தழுது
துடைத்திட விருந்துபின் மறந்தே,

னென்னவிங் குறுமோ வெனும்பய மநத்தி
லிடைவிடா திருந்தெழுந் திடலா,
னன்னய மடைய நின்னையே களராய்
நாடின னருடரல் கடனே. 42

கடனின தாகுங் காத்திட லெனைநீ
காவென யான்சொலல் கவினே,
விடங்கலு ளெயிற்றுப் படவர வணியும்
விரையுறை மார்பனே தருக்கா,
னிடரற வுறையு மிறைவனே தருக்க
ளியம்புமோ வீதிநீ ரென்னு,
வடைவது கண்டா யாதலி லெனைநீ
யாண்டிடல் கடன்கடன் கடனே. 43

கடனெறி கடவாக் கடமையே கடுப்பக்
கருதருந் தவரெலாங் கடவா,
திடபமே லிவர்ந்த வெழிற்றிருக் களரோ
யெந்தையே யிருந்துனை யடைந்தார்,
முடவன்கொம் பினின்றேன் முற்றுற நினைந்த
முறையென நெறிசெலா வறியே,
னடைதர நினையி லென்னவா மருள
தாயிடி லென்னறி யேனே. 44

அறிவறுஞ் சிறியன் வெறியனுன் பொறிய
னறிவினர் தமையணு குகிலன்,
செறியிருட் கொடியன் செடியன்யான் பொடியன்
செங்கையுஞ் சிறிதறி குகிலன்,
மறிகர களரி வளர்தரு மிறைவ
மாசுள னென்னினு நின்சீ,
ருறவழுத் துதற்கோ வுரியவ னுயே
யுறுதலி னெருகுறை விலனே. 45



இலன்விழை வரிவை யென்னவே நடிப்ப
னேன்மநத் திருந்துவா ழாசை,
நலன்சிறி தலவா னுனறிந் திடுவ
னலமிகு நீயுமே யறிவாய்,
புலன்வழி மறித்துத் திருத்தியே யாளப்
போற்றினேன் களர்வள ரிறையே,
நிலந்திருத் துறுத லென்னவே யெனையு
நீதிருத் துறுதலே யுரித்தால். 46

உரித்தெனக் குனது திருவடி பேண
லுரித்துனக் கென்னையாண் டிடுதல்,
கறுத்துறு விடத்தைக் களத்தினிற் றரித்த
களரிகற் பகவநத் திறையே,
விருத்தநல் வடிவ மடுத்துயா னுன்னை
வேண்டிட னலங்கொலோ முறையோ,
வுருத்திர வெனையாண் மருட்டிர னழித்தே
யுன்கழல் கனவினு மறவேன். 47

மறவராங் காம மாதியர் வயமாய்
மருள்வநத் திருளுற வாழ்ந்தேன்,
குறமகள் கொழுனன் றனைத்தருங் குமரி
குழையப்புல் லுருதிரு மார்பா,
பிறவியொ டிறவை நினைக்கிலோ மநமும்
பீதியைப் பெரிதுறு மெந்தாய்,
நிறைமல ரடியை நாயினேன் பணிய
நாயக களரியா யருளே. 48

ஏதமே மிகுந்து பாதகம் புரிந்த
விரும்பெருங் கொடியரே யெனினும்,
நாதனே நினது நாமமே வழுத்தி
னுன்மறை யவரைநல் லவரா,

யோதுறு மெனலைத் துணிந்துநா யடியே
　　னெண்டிருக் களர்வள ரிறையே,
கோதிலா வுனது திருப்பெயர் வழுத்தக்
　　கொண்டனன் மநத்தினிற் றுணிபே. 49

துனுவுறு மரிய பத்தியிற் பிரியன்
　　றுதைகுலம் வயதுசீர் நடைக,
ளணைவுறு கல்விச் செல்வமே யழகோ
　　டரியதோர் வீரமே யாதி,
யெனுவனீ யல்லா யென்றனை யாளு
　　மிருந்தவர் திருந்தவே யறைந்த,
துணிவினைக் கேட்டுந் திருக்களர் நாத
　　துணிந்ததை யுளுற்றுமா துணியேன். 50

ஏனறிந் திருந்து மிடர்க்கட லாழ
　　லெந்தையே யெளியனே னறிய,
னூனக மதியோ வுணவினி னசையோ
　　வுழைவிழி மடந்தைய ருறவோ,
மீனுறை ஞாந வாவியே யாதி
　　மிளிர்தரு திருக்கள ரிறையே,
நீநனி நினைந்து கருணையே புரிந்து
　　நீசனை யாளுதி யரசே. 51

வேறு.

சேனை விஞ்சுறு மாரதன் றிருச்சுதர் வேண்டி,
யானி னந்தனை யாடிட வாட்டியே யன்யாற்,
கோனு மைந்தர்க ளிருவரைப் பெறவருள் கொடுத்து,
நானி லம்புக டிருக்களர் நாதனே போற்றி 52

போற்றி யென்றுனைப் போற்றிடப் பிரமதாண் டவத்தை,
நாற்றி சைபுகழ் நன்முநி யமரர்கண் காண,
வாற்றி நின்றதிங் கருந்திருக் களருறை யமுதே,
யேற்று கந்தவா வென்மனந் தனைவிடுத் தேகா. 53



ஏக னாகியே யிருந்தனை முனம்பின மெழிலா,
ராக மூன்றினை யம்பிகை யுறவினு லடைந்தாய்,
சோக மேவிய வெனக்கரு டிருக்களர்ச் சுடரே,
மாக நாடரும் வழுத்துறு மாசிலா மணியே, 54

மணியின் வாசகப் பெருந்தகை மாவுணர் வுறவே,
யணிசெய் நீடரு வணைந்தென வருந்தரு வநத்தே,
யிணைய றத்திரு வருளினு லென்றனை யாள்வான்
குணக ணமணிக் குன்றமே நின்றனை குறிதோ. 55

தோட மின்றிய நின்றிரு மேனியிற் றுகள்போ,
லாடு நீனிற மையமெய்த் திருக்கள ரரசே,
பீடு றும்மெனப் பேசுவர் பெரியவ ருலகன்
பீடை யற்றிடப் புரிதலின் பெருமனத் துறவே. 56

உறவு நின்றிருப் பதந்தனி லுறிலறிற் பலந்தா.
னறவி ருந்தது மறைந்தது மடியனே னறிந்தே
னிறைவ னுந்தச முகன்முனம் பினமுற லெணியான்,
பிறவி யற்றவர் வளர்திருக் களருறை பெரியோய். 57

பெரியை நீயறச் சிறியைநீ பித்தனை யாள,
வுரிய நீயுல கேதுவு நீயுனை யலதோ,
ரிரிதி ருணமு மிலையென மறையெலா மியம்புங்,
கரிய வன்றெழுங் களர்வள ரிறைவனே கரியே. 58

கரியெ னுந்திருப் பெரியவ கருணையா னீயே,
யிரவி யிந்துவும் புருடனு மெறிவளி வான,
மெரிய றற்புவி யாகியு மெழில்கொண்மூர்த் தியுமா.
யொருவ னேதிருக் களருறை யும்பனே யுறைவாய், 59

ஆய னூர்தரும் பெண்மணி மணக்குமா ரியனே
சீயெ னுவெனைச் சீறிட னீதியோ சிறியே,
னீய லாதொரு துணையினை நிமலனே காணேன்,
மாய வன்றிரு மைத்துன திருக்களர் வாழ்வே. 60

வாழ்வி துபெரு மாயமன் ஞுவது திணமா.
லாழ்வ தென்கொலோ விடயமீ தாசையா லெனவே,
தாழ்வ தின்றிய திருக்களர்ச் சம்புநின் ரேழுன்,
சூழ்வ தோர்மொழி சூழ்ந்தனன் மனந்தனிற் றிநமே. 61

வேறு.

திநதன் பணியுந் திருநற் களராய்,
தனதன் றிருந்தோ ழனெனுந் தனியோ,
யனதந் தையிலா தவவன் புடையார்க்,
குனதின் பதியீ பவவொண் சுடரே. 62

சுடரே சுடரெண் வகைக்குஞ் சுடரே,
யிடரே தெனக்கின் புறுநின் பதமே,
படர்வேன் பழுநற் களர்ப்பண் ணவனே,
விடமே வுறுவொண் களமே றவனே. 63

மேலோய் புனல்சூழ் தருமீ னமுளோய்,
நாலோய் களர்நா யகநாட் டியத்தோய்,
சேலோய் கணிசீ ரமுதக் கொடியோய்,
வேலோற் பெறுகு லமுளோய் விரகோய். 64

ஓயா துளனு யெனையோ யெனவே,
நீயோ திடில்வாய் துயர்நே ருறுமோ,
பேயோ டுழல்பித் தபிறைத் தலையோய்,
மாயோ கிகண் மன் னுகளர் வளமே. 95

வளமே தரமா னவர்வா னவர்கள்,
களர்வாழ்ந் திடுகற் பகநா யகனே,
யுளமே வுறுமா சையினு லுறுவார்,
களனு பிறவிப் பிணிகா துறவே. 66



வேதா கமநீ தியையே யவர்கள்,
பாதா ரவிந்தம் பணிபான் மையர்தம்,
பாதா ரவிந்தம் பணியப் பணிப்பாய்,
நாதா களர்வாழ்ந் திடுநா யகனே. 67

கன்னேர் மனநா யினையே களரா,
யின்னு டிடவின் னருள்செய் தனைநீ,
மன்னு வுமைநா யகமா சிலனே,
பொன்னுர் திருமே னியபோ தகனே. 68

போதந் தரும்புண் ணியநற் களரா,
யேதந் தமுமா தியுமின் னினக்கே
வேதந் தரும்வே தியநீ தியனே,
காதந் தரிலென் றுதிகா விடுமோ. 69

இடுமோ வினையென் னையுமே யினிமேல்,
வடுமாங் கணிபங் கவளர் பிறையாய்,
நடுநா யகநற் களர்நா யகனே,
திடமா யுனசே வடிசேர்ந் தனனே. 70

சேரும் பொழுதே சுகத்தி விடய,
மாரும் படியா மனமா டியெனு,
வோரும் புடிநின் றிலையொண் களராய்,
கூடும் படிநீ யினிக்கூட் டுதியே 71

வேறு.

கூட்டி யென்றனை நின்றிருக்
குழுக்கணே குலவிவாழ்ந் திடவேண்டி,
நாட்டி யென்றனை நல்லருள்
சுரந்தனை நம்பனே மறப்பேனு,
வாட்டி றவிழி மங்கைய
ரமரர்த மங்கைய ரவரோடுங்,
தேட்ட மற்றுல விலம்பொலி
திருக்களர்த் தெய்வநா யகனேயோ. 72

ஓமெ னுந்திரு மந்திர
விலக்கிய வொளிவிடு சுடரேயோ,
நீம னுந்திருக் களர்நகர்
சேர்வுற நெஞ்சிலே நினைந்தாலும்,
பூம னுந்திருக் கற்பக
நிழலொளிர் புரந்தரன் புவிமேவி,
யாம னுஞ்சுக மென்றிடி
னின்னக ருறைவதை யறைவேனே. 73

நோயி லாதநல் வாழ்வுநற்
றனமனி நுண்ணிய மதியார்ந்த,
சேயு நன்மனை முதலிய
யாவுமே சேவடி பணிவார்க்கு,
நீய ளித்தருந் திருக்கள
ரிறைவனே நீத்தபி னிக்காயம்,
போயி ருந்திடக் கயிலையு
மளித்திடும் புகழினைப் புகழ்வேனே. 74

புகழி னேடிக மின்பமுந்
துன்பமும் பொருந்திடி லெளியேற்கே,
மிகவும் வாடுவன் வாடிடா
மிளிர்பத மிலையவே யருள்வாயால்,
திகழும் வேதம தோதிடு
மோதமுந் தெருவினி னடங்கான,
மகிழு மோதமுங் வாநவர்
நகர்புகும் வளமலி களரோனே. 75

களரி பாரிஜா தவநமங்
தாரமே கற்பக வனஞ்சேரார்,
களரென் னுமம தேய்ந்தவிந்
நகர்பெருங் காடெனப் பழுதாக,



விளரி லாவணி நாயக
துறவிகட் கிறைவனும் வீரேச,
னுளம தேபுகுந் தீர்த்திவண்
கயிலைமே லுறமிகப் புரிந்தாயே. 76

ஏத மிக்குறத் தாய்கரு
விருந்துயா னிருங்கிரு மிகள்வாட்டப்,
போத மங்கியே வங்கியாற்
றகிப்புறப் புன்மல நிறைநீரி.
லாது தைந்துனை மறந்தன
னையகோ வருங்களர் நகர்வாழ்வே,
நீதெ ரிந்திலே யோகரு
ணுகர நின்மல நிறைவோனே. 77

நேம மின்றிய குழவியின்
மலகுழ னிறைவபு வினைமேவி,
யாம மிஞ்சியே யுறவழ
லுறமிக வழதழ துழன்றேயுன்,
னும நெஞ்சினி னினைகிலன்
றிருக்களர் சார்ந்தவர்க் கருடேவே,
சேம மிவ்வெளி நாயுற
வருடனைத் திருக்கணுற் புரிவாயோ. 78

வாய்ந்தி டிற்றிருக் குமரமோ
வனைபிதா வருத்துறு குருவாலே,
மேய்த்து றத்துயர் யாவினு நசைமிக
மெலிந்துவா டலினாலே,
காய்த்து நின்றனை நினைகிலா
திருந்தனன் களர்வள ரிறையோனே,
பேய்த்த னந்தனை நீக்கியென் றனக்கருள்
பேயோடா டெம்மானே. 79

மானி னோக்கியர் வலைப்படு
பருவினின் மயங்கியைம் புலனாலே,
யூன ழகினை மிகமதித்
துண்ணவே யுறுபொருண் மிகத்தேடி,
யானி னைத்துனை மறந்தனன்
பறந்தனன் யாதுசெய் திடுவேனோ,
தேனு லாங்களர் மேவிய
நடம்புரி தேவர்க டேவேயோ. 80

ஒவ யோதிக முற்றிடி
னடைதளர்ந் துதிர்ந்தெயி றுகள்யாவு,
மேவு நல்விழி பஞ்சடைந்
தாசையான் மெலிவினை மிகமேவி,
சாவு றும்பயந் தனைநினைந்
தந்தவோ தருவனந் தனில்வாழுந்,
தேவ நின்றனை மறந்துறுந்
துயர்தனைத் தீர்த்தெனக் கருள்வாயே. 81

வேறு.

வாயிற் றுதிபல புரியே னுனைநினை
வளமே யொருசிறி தறியேனான்.
காயப் பணிகளா மிலனாய் மலனிறை
காயத் தகமதி யுளனானேன்,
நீயிப் படிவிட லெழிலோ களருறை
நிமலா குணகண வமரேசா,
தோயக் கயலுகள் வானத் துடுவொடு
தோலத் திரிதரு நகரோனே. 82

நகரோ டரிகரி பரியே முதலன
நலமார் தனமனை யுறலாலெ,
னிகமே யலதொரு சிறிதோ பரமுற
லிவையா வையுநின தருளாலென்,



றுகுமா வுறவொடு முனையே நினைதரி
லுயர்மா களரியி லுறைவோனே,
சுகமே யுறவெளி தெனவே யெனையவை
தொடரா வணமரு டொடுவாயே, 83

ஆயுள் ளகர்நிச மழிவே யுறுமுடை
யருமா கடமுறு மறலேயோ,
யேயும் மனைதன நீளும் மலையென
வேகும் முயிருறன் மினலேயாம்,
பாயும் முளநழு வாதே களர்வளர்
பாலா வுனைநினை வேனோயா,
னீயுன் னருளிலை யெனினோ நீசரி
னீசன் செயலது வறியேனே. 84

அறியா மையினெடு கரமா விழிபத
மறைவாய் சிரவண முளமோடே,
செறிமா சுகளெவை யுறுமா யினுமொரு
சிறிதே திருவுள மருவாமே,
மறவா துனைநினை வரமே தருதிநன்
மலரே நிறைதரு வநநாதா,
பிறவா ரவர்தொழு துறவா யுறநிறை
பெரியோய் மறைபெற வரியோயே. 85

அரியோ டயனுமை கரிமா முகனறு
வருமா முகனிர வியராதி,
யொருநீ யுயிர்களை யருணீ யுனையல
துளதோ வுலகமு மொளியோனே,
விரியீ தறிகிலர் மயலா யுழலுவர்
விரைசேர் களரியி லுறைவோனே,
திருவே செறிதரு திருநா ளுறநிறை
தெருவோய் தருவன முறுதேவே. 86

தேவே மணமணு காவே வருமொரு
மூவோர் தொழுமணி தேரோனே,
பாவே தருபவர் சாவே யறவருள்
பாலீ வெளியக பாலீயோ,
நீவே றெனவெனை நாடே னினைநினை
நீளோர் குழுவினி னேர்வேனே,
ஞவா வெனையெளி தேதோ புரிகுவ
ஞமா திரிதரு களரோனே. 87

களரோ வளர்தரு வளனே தெளிவுறு
கருணை யருணிறை கடலோனே,
மௌநா யகிபணி கழலா யழலுறு
மினுமா கரமழு மனுவோனே,
யுளமே தீயவன் களமே மேயவ
னுழைநா ரியர்தந முறுநாயேன்,
றளவே புரியவ னெனவே யாயினுஞ்
சரணே மருவின னருளீயே. 88

ஈயோ டாயினு வவமா நமுமில
வெளியே னளிகொளு முனைநாடித்,
தீயே னெனையருள் களரா யெனவுரை
தெருவே திரிவொடு தருவேனே,
பேயா யினுமொரு தருமீ தொருகணம்
பேணு மெனதுள மதிஞனுந்,
தூயோய் தருவந நீயே யருள்கொடு
துகளோ னெனவெனை நினையாதே. 89

யாதே யறியினு மறிவோ ரணுவதும்
யானே துவுமில மெனவேயா.
னேதோ பெரிதறி சாதா மெனவெனை
யானே யெணிமன திருமாந்தேன்,



ருதே யறவரு ளுதா களர்வளர்
தேவா வுமையுறு பாகாவோ,
தாதா வெனதக மோதா கறவரு
டாளோ னெனவெனை நினையாயோ. 90

நினையா தெனதுள முனையே நினைதரு
நெறியே சிறியனு முறவேயே.
கனிவா யுருகிமெய் வியர்வே புறவருள்,
கணமே யருளெனை யுடையோனே,
கனமே மனுபணி கணமேய் வணமுறு
களரே வளர்தரு பெருமானே,
யுனையே யலதொரு துணைவே றிலையிலை
யொருவா பெரியவ ருறவேயோ. 91

வேறு.

உறவர்க ளுறவே போற்றி
யும்பர்கள் பணிவோய் போற்றி,
மறவர்கண் மறைவே போற்றி
வளமள களரோய் போற்றி,
துறவிக ளுறவே போற்றி
துகளறு சுடரே போற்றி,
யிறவறும் வரமே யீயு
மெந்தையே போற்றி போற்றி. 92



போற்றியென் னுயிரே போற்றி
புண்ணியர்க் கருள்வோய் போற்றி,
நாற்றிசை புகழ்வோய் போற்றி
நாடுதற் கரியோய் போற்றி,
தூற்றினு மருளே யீயுஞ்
சொல்லொணுக் கருணை போற்றி,
காற்றுள மிழப்போர் போற்றுங்
களரினுர்ப் போற்று வாமே. 93

வாமமா ரமுத வல்லி
வளமுறு மிறைவா போற்றி,
சேமமார் வலம்பு ரீசச்
செல்வனே யீன்றாய் போற்றி,
ஓமுரைந் தெழுத்தை யோது
மொருவனைப் பயந்தாய் போற்றி,
சேமமார் வீர ஞாந.
சேகரன் பணிவாய் போற்றி. 94

போற்றியே மாலா தார
கன்றனுக் கருள்வோய் போற்றி,
போற்றிநீ டிருவி ழாக்கள்
மல்கிய களரோய் போழ்றி,
போற்றிநீ றணிந்த தூயோர்க்
கருள்செயும் புகழோய் போற்றி,
போற்றிதே ரேறி யாடும்
பூமனே போற்றி யெந்தாய் 95

எந்தையே போற்றி யிந்த
வுயிர்க்கெலா மிறைவ போற்றி,
யிந்துவே யணிந்து கங்கை
யணிசடை யிறைவ போற்றி,
சிந்தைநைந் துருகு நாயேன்
சிரமிசைப் பதந்தாய் போற்றி,
சந்தநற் கவிகள் வேண்டுஞ்
சம்புவே போற்றி நம்பா. 96

நம்பனே போற்றி யெங்க
ளுயக போற்றி வானே,
ரெம்பிதா வெனவே யேத்து
மெந்தையே போற்றி போற்றி,



கம்பமற் றுயிர்கள் வாழுங்
களர்வள ரிறைவ போற்றி,
துன்பமே தணிப்பாய் போற்றி
தூயவ போற்றி யன்னே. 97

அன்னையே போற்றி போற்றி
யடைந்தவர்க் கருவ்வாய் போற்றி,
பின்னையும் பணியு மன்னை
பின்னுறத் தேரி லேறி,
மன்னியே துரித மாக
வலம்வரு மிறைவ போற்றி,
கன்னலி னினியாய் போற்றி
களர்வள ரிறைவே போற்றி. 98

இறைவனே போற்றி யிம்ப
ரும்பரும் புகழ்வோய் போற்றி,
நறைமலர் நிறையும் வீதி
நாட்டிய நிறைந்தோய் போற்றி,
குறைவரு மேரு வென்னுங்
கோபுர முள்ளாய் போற்றி,
மறைபுக ழிறைவ போற்றி
போற்றியே களரின் மன்ன. 99

மன்னவர் மறையோ ரோடும்
வயிசியர் மற்றோர் யாரும்,
பின்னியே வீதி போதப்
பெருநெடுந் திருத்தே ரேறி,
யென்னையே யாள வெண்ணி
யின்புடன் விரைவி லெய்துங்,
கன்னலே களரி வாழ்வே
போற்றினன் கடையன் றனே. 100

கடையனைப் பாட வைத்த
கருணையாய் போற்றி போற்றி,
விடையுகைத் தருணு மெங்கள்
வித்தகா போற்றி போற்றி.
தொடையலென் றனதை வேய்ந்து
தூய்தெனைப் புரிவோய் போற்றி,
யிடையினிற் பெண்ணுய் போற்றி
போற்றியுன் றிருவெ லாமே. 101

பாரிஜாத வனேசுவரர் பதிற்றுப் பத் தாந்தி
முற்றிற்று.

---

உ
சிவ மயம்.
ஓம் மகா கணபதி துணை.

அத்வைதாமிர்த சார சங்கிரகம்
என்னும்

# அமிர்த வல்லி மாலை.

---

## மங்கலம்.

சீருறு வலம்புரிச் செல்வ நாயக,
வீரேச கரகுரு விரைச்செந் தாமரை,
யேருறத் தொழுதெழ வெழுமென் ஞுவினின்,
வாறுறு மமுதநல் வல்லி மாலையே.



## நூல்.

முதலாவது சமந்வயப் பிரகரணம்.

### 1. விதி விசாரம்.

சமதம நிறைந்த வறிஞருக் குனது
தண்ணறி வுறமறை யறையுஞ்,
சிமிசுரோ தவிய விதியினேர் வாதி
சேர்வுறுஞ் சிலபல புரிவா,
னமைவுற வெனது மனந்தனைப் புரிந்தே
யாட்கொள றகுஞ்சுதந் தரமாம்,
வமிசமே குயிற்றுஞ் செயற்கையா யமுத
வல்லியே களர்வள ருமையே. 1

சிரவண விதியே தென்னென வினவச்
சிவைநின துணர்வினே துவதாய்,
வரவதி லபூர்வ மெனவழங் குறுவர்
வழுத்துறு நினதடி பணிவோர்,
திருமகள் கொழுநன் கலைமக ளுதன்
றேவர்கள் யாவரும் புகழும்,
வரமுறு கருணை நிறைதரு மமுத
வல்லியே களர்வள ருமையே. 2

கேட்கையப் ராப்த மன்றெரு புடையாய்க்
கிளர்ந்திடு நியமம்பா ரோக்ஷயங்,
கேட்கையா லாகு மனனமா ரதனுற்
கிடைத்திடுங் காட்சியங் கதனில்,
வேட்கையா நியம மென்றருள் புரிந்தாய்,
விறைநிறை பாரிஜா தேசன்,
வாட்கையி னலமே பலவடி வமுத
வல்லியே களர்வள ருமையே. 3

காணலிற் கரண நிருமல மனமாங்
கழறுத லன்றது பிறிதில்,
மாணதி னியம மனமதே கரண
மற்றது துணையென நியமம்,
பூணெனப் புகன்றாய் காரணி யுலக
பூரணி யாரணி யெனவே.
வாணிமெய் புகழுங் காணியே யமுத
வல்லியே களர்வள ருமையே. 4

புருடர்தம் மாசு போக்குற நியமம்
புகுமயன் முயல்வினை யொழிப்பா.
னொருபரி யெண்ணுந் திரிவித மிலதா
முண்மையை யுணர்த்தினை மறவேன்,
றெருவுக ணிறைய மனுநெனஞ் சோலை
திநகரன் றனைநனி மறைப்பான்,
வருதரு வனவற் றழுவுறு மமுத
வல்லியே களர்வள ருமையே 5

## 2. காரணத்தவ விசாரம்.

முத்தொழிற் றனித்து நினதிலக் கணமா
முற்றினு நினதிலக் கணமா,
மொத்துற வபிந நிமித்தொபா தாந
முலகுரு விவர்த்தமா மதுவுஞ்,
சத்துறு விடம வயலிய லெனவே
தாய்நின தருளினு லுணர்ந்தேன்,
வத்துவே சித்தே யின்புரு வமுத
வல்லியே களர்வள ருமையே 6

தூயது மாயை மேயதும் வானந்
தொன்னின துளமிரு வரதா,
மாயிரு மறைக ளுணர்த்தலி னுயிர
தாகுமம் மறைக்கருத் தயலாஞ்,



சேயென தரிய சிறுவனே யென்றாய்
செங்கரி கந்த னென் னுமம்,
வாயிரு குமர ராயெனு மமுத
வல்லியே களர்வள ருமையே. 7

ஒன்றென மாயை யவித்தையை யுவந்து
முயிரிடத் தாதலா லுயிரே,
துன்றிய விவகா ரத்துற னினது
தோற்றமற் றதுவெனச் சொற்றா,
யன்றுமன் மதனை யழலெழ விழித்த
வையன்கை யுறமிக வழுந்தும்,
வன்றனு மேரு விகழ்குய வமுத
வல்லியே களர்வள ருமையே 8

கனவினை யுறழ வுயிரெவை தமக்குங்
காரண மாயையு நீயு,
நனிபரி ணும விவர்த்தம தாலே
நண்ணிடு மெனவினி துரைத்தாய்,
மனதுற முநிவர் நினைதரு மரிய
மங்கலப் பதங்கள்போன் றொளிரும்,
வநசம்வாழ் தேவி மார்தொழு மமுத
வல்லியே களர்வள ருமையே. 9

தேவிசிற் புகன்று வாயிலாய் மாயை
செப்பியின் காரியத் துலவ,
லாவதுஞ் சுகமாய் நீயுபா தாந
மாயினுந் துணைகுண மாயை,
மேவலின் மாயை காரணங் கௌண
மேனிநக் கென்பது முணர்ந்தேன்,
வாவிக ளிரைய மகிழ்வுறு மமுத
வல்லியே களர்வள ருமையே. 10

### 3. ஜீவேசுவரி ஸ்வரூப நிர்ணய விசாரம்.

இருவகைப் பிரதி பிம்பமு மிருவ
ரிறைவிநின் மாயையே பகுதி,
யரியவங் கிசங்க ளிரண்டுற லவித்தை
யாகுமென் றுரிய ரறைந்தார்,
திருமுகி பணியச் சினந்தவ மான
திவ்வியத் தலந்தனி னுறைவோய்,
வரையிறை மகளே முகுளித வமுத
வல்லியே களர்வள ருமையே. 11

முக்குண மதனி லொன்றிரண் டிரண்டா
மூலமாம் பகுதியே யிரண்டு,
மிக்கசத் திகளான் மாயையு மவித்தை
மிளிர்தரு மென்றெனக் கறைந்தாய்,
துக்கசா கரத்தே தவித்திடு மெனையுந்
துயரலென் றஞ்சலித் தெடுக்கும்,
வக்கண மிணங்கு மன்னையே யமுத
வல்லியே களர்வள ருமையே. 12

துக்கர வவித்தை காரியக் கரணந்
துதைநிழ லிருவரா மதியின்,
றக்கவா சனைசா ரிருண்மதி நிழல்க
டடையிலா விருவரென் றுரைத்தாய்,
கக்கிய வசுந மொக்கவே காணுங்
கடுந்தவ ரிருப்பவிங் கெனையும்,
வக்கிர துண்டற் கடிமையாக் கமுத
வல்லியே களர்வள ருமையே. 13

பிம்பமும் பிரதி பிம்பமு மிருவர்
பிறங்கவச் சிங்கலன் மனத்தே,
பம்பிவை யலவா மவித்தையா நீயே
பன்னுறு லீலையென் றறிந்தேன்,



ஐம்பொறி வழியை யணுகுரு வரிய
வருந்தவர்க் கைந்தெழுத் தருள்வான்,
வம்புறு கடம்ப மகற்றரு மமுத
வல்லியே களர்வள ருமையே. 14

### 4. ஜீவைகத்வ நாநாத்வ விசாரம்.

உயிர்கள்பற் பலவோ வொன்றதோ வெனவே
யொன்றுயி ரோடுறு மாக,
மயல்கநாப் புரையு மிரணிய கருப்ப
னம்மைநின் னிழலத னிழல்க,
ளயலுயி ரென்று யருங்கரும் பெனவே
யடர்ந்திடு நெற்பயிர் நிறையும்,
வயனிறை கயல்கள் மயங்குகண் ணமுத
வல்லியே களர்வள ருமையே. 15

ஏகனே காய மியாவையுந் தனதா
யெண்ணுறு மின்பசங் கரமோ,
வாகவேற் றுமையா லணுகுரு கரண
மவற்றினுற் சீவநா நாத்வ,
மாகுமென் றிசைத்தா யருந்தவன் றனக்கா
யாலவாய் வீதியி லமர்ந்த
வாகுகற் புணருங் குணகண வமுத
வல்லியே களர்வள ருமையே. 16

கரிநினை யணைந்து மறைத்திடு மொன்றே
கரிமறை பிரிவுகள் பலவா,
மிரிதரி லிலமா மிருதயக் கிரந்தி
யேதுவா மவித்தையொற் றுமைக்கே,
யரியவிங் கிதனை யறியென வறைந்தா
யருமறை யமரர்கள் போற்ற,
வரிவனத் தாடு மிறையுயி ரமுத
வல்லியே களர்வள ருமையே. 17

உறுமிரு ளுயிரிற் றன்மையை நிகர்ப்ப
வுயிர்தொறு மவித்தைவே றுளவாஞ்.
செறியநு விருத்தி நிவிர்த்தியால் விவத்தை
சிவனுமென் றருளினு லறிந்தேன்,
மறிகர மேந்து மண்ணலின் மடிமேன்
மங்கல மொழிமழை வழங்கி,
வறுநகை புரியு மரியவின் னமுத
வல்லியே களர்வள ருமையே. 18

இங்கிதி லெவன்ற னிருள்செயு மெனினிவ்
வியாவையு மென்றனை யன்றித்,
தங்குவ ருலகந் தனித்தனி மாயை
தாணுவைப் பற்றுறு மயலாம்,
பொங்குயி ரேறு மிருள்மறைத் திடுமென்
பொழிமொழி மழைசிறி தலவால்,
வங்கமே பிறவிக் கடலினுக் கமுத
வல்லியே களர்வள ருமையே. 19

## 5. கருத்திருத்வ விசாரம்.

காரிய வுதவி ஞாநசி கீர்ஷை
கதுவுறன் ஞாநமே கதுவ,
லோருதல் படைப்பை யுன்கருத் துருத்வ
மொவ்வுமென் றுன்னடி பரவு,
மாரிய ரருளுந் தெருளினை மறவே
னளியினுக் குவமன்மற் றிலவாய்,
வாரியை யுதவுங் கருணைசா ரமுத
வல்லியே களர்வள ருமையே. 20

## 6. ஈசுவரியின் சர்வக்ஞத்வ விசாரம்.

விரும்புமுற் றுணர்வ தெங்ஙனங் கரணம்
விதிதமில் லதனினு லெனவே,
பரம்புயிர் மதியின் வாதனைக் கரியாம்
பான்மையா லாமெனப் பகர்ந்தா,



யரும்புமென் முலையா ராசையில் வீயு
மடியனைக் காத்தருள் புரிவான்,
வரம்புசெய் தாளு மம்மையே யமுத
வல்லியே களர்வள ருமையே. 21

சிற்பதி விம்பங் கவர்ந்திடு மாயைத்
திருவிருத் தியைக்கொடங் கதுவாஞ்.
சற்பயி லாலோ சனையுரு முக்காற்
சார்பொருள் விஷயக தியார்,
கற்பமே யதுவா மென்றனை யெனையாள்
கரிமுகற் பயந்தகற் பகமே,
வற்புறு மனமி லன்னையே யமுத
வல்லியே களர்வள ருமையே. 22

தன்னுணர் வதனுற் றற்கத சருவந்
தரமிலங் குறுந்தகை மையினு,
லன்னதாஞ் சருவ ஞாநநல் வடிவ
மரும்பொரு ளவச்சிந மான,
தன்னுணர் வதற்காய்க் கருத்ருதை யெனவே
தாயெனக் கருளினை தயையால்,
வன்னினை வெனது மாற்றிடு மமுத
வல்லியே களர்வள ருமையே. 23

## 7. ஜீவாற்பத்வ விசாரம்.

நின்னிக ருயிர்க்கி லென்னென வினவ
நிறையுபா தாநமன் றுளத்தாற்,
சங்நிகர் ஷமதாம் விருத்தியை விழையுந்
தன்மையை யுணரெனப் பகர்ந்தா,
யன்னியஞ் சிறிது மின்றியே யிருப்ப
வாடியி னிழலெனத் தோற்ற,
வன்னியிந் திரவி விழியியை யமுத
வல்லியே களர்வள ருமையே. 24

விளைபொருள் வரையு மறிவினி னெடைபி
வியத்தியெய் துறமனச் சிறுகாற்,
றளையுயிர் விளையும் விருத்தியை விடயாச்
சாதந நீக்கிட வதனே,
யளையொரு வாயி லாக்கிடு மெனவே
யடியனுக் களியினு லறைந்தாய்,
வளைநிறை கரத்தால் வாவெனு மமுத
வல்லியே களர்வள ருமையே. 25

8. சம்பந்த விசாரம்.

விபுவிட யங்க ளொற்றுமை யோரின்
விடயவின் விடயிமற் றுயிரி,
னபிநமாம் விருத்தி யொற்றுமை சையோ
கஜசையோ கம்பரிச் சிநமா.
யபிநமா மயிக்க மதனினு னெனவே
யாநின தருளினு லறிந்தேன்,
வபுமர கதமாம் வடிவினு யமுத
வல்லியே களர்வள ருமையே. 26

9. அபேதாபிவியக்தி விசாரம்.

விடயவுட் கரண சேதந வயிக்கம்
விடயசே தநநிழ லுளமார்ந்,
திடுமுணர் வயிக்கங் கடபிம்ப வுணர்வுக்
கின்னுயி ரயிக்கமென் றருளா,
நடுவினே யுணர்த்தி நளினமென் றலேயி
னுட்டிய பரிசையான் மறவேன்,
வடமொழி தமிழின் மொழிபொழி யமுத
வல்லியே களர்வள ருமையே. 27



10. ஆவரணுபிபவ விசாரம்.

மறைப்பற லமிச நாசமுட் சுருட்சி
மாற்றுதல் விருத்தியோ டுற்ற,
சிறப்பறி வாவா ரகத்வநல் லியல்புஞ்
செறியவத் தாவிரு ளெனவாங்,
திறப்பட வுணர்தி யென்றுணர்த் தினேநீ
தேவிநின் றனேயுணர்ந் தவர்க்கு,
வறுப்புறு விரையில் நுகர்வரு ளமுத
வல்லியே களர்வள ருமையே. 28

11 அவஸ்தாஞ்ஞாந சாதித்துவாநாதித்வ விசாரம்.

புகலிரு ளாதி யற்றது துயில்போற்
புக்கது புக்கிலாப் பக்கத்,
தகல்வதொவ் வொன்ரு முன்னின்மை நிகர்ப்ப
லவ்வுழி யுறவுற நீக்க,
மகல்வுரு மறைக்கு மியாவையு மொன்ரு
லழிவொளி வாமென வறைந்தாய்,
வகைவகை யமரர் பணிதரு மமுத
வல்லியே களர்வள ருமையே. 29

12. தாராவாகிக துவிதீயாதி ஞாந வைபல்ய பரிகார விசாரம்.

இன்னண மாயிற் ருரையின் றலத்தி
லென்னவா மெனமுத லதனுற்,
பின்னுறன் மறைக்கும் போதுறப் பிறங்கும்
பின்னதாற் றேயமோ டடையா,

மென்னவெற் கருளு மெழிலையென் சொல்வே
னிருமக விருபுர மமர,
வன்னயான் பணிய முன்னரு ளமுத
வல்லியே களர்வள ருமையே. 30

## 13. பரோட்ச ஞாநத்தின் அஞ்ஞாந நிவிர்த்தகத்வ, அநிவர்த்தகத்வ, விசாரம்.

இவ்வகை நியம மென்கொலோ வம்மே
யென்றிடி லிருவித முயிரே,
கவ்வுறு மறைப்புக் காட்சியற் றழியுங்
கருத்தினி லிருத்தென வுரைத்தாய்,
திவ்விய முநிக்குப் பிரமதாண் டவத்தைச்
செய்திடு ஞான்றக மகிழ்வாய்,
வவ்விருள் கடிய வாமமா ரமுத
வல்லியே களர்வள ருமையே. 31

உளபொருள் களிலே யிருளுறு மழிவோ
வுறும்பெருங் காட்சியாற் சுகாதி,
தளவுறு தெனினே சாக்கிபா சியமாய்ச்
சார்தலி னின்றென வுரைத்தா,
யிளவலுக் கரிய தமிழ்மறை பாட
வின்னமு தளித்தசீர்க் குயமாம்,
வளர்திரு வமுத கலசமா ரமுத
வல்லியே களர்வள ருமையே. 32

## 14. சாட்சி சொருப நிர்ணய விசாரம்.

சாக்கியே யிரண்டு தநுவதிட் டாந
சச்சிற்கூ டத்தமாஞ் சீவன்,
மாக்கட வுளுமன் றன்னையே யுன்னை
மாணுறு மறையெலாம் புகலும்,



நீக்கியே புலன்க ணினைநினை தவர்க
ணின்றொடு மேகமா வாங்மா,
வாக்கிய மருளும் பவளவா யமுத
வல்லியே களர்வள ருமையே. 33

ஒருவனே தேவ னெனுமறை முறையி
லுருவவேற் றுமையுதா சீநங்,
தருமித மமிச நிகருயிர்க் கோட்டி
தமமன வுபாதிக ரறைவார்,
தெருவிலே திரிந்து தேவிநிற் செபித்துத்
தேகயாத் திரைகடங் திடுவான்,
வருமவை கொளுமா தவர்பணி யமுத
வல்லியே களர்வள ருமையே. 34

## 15. அவித்தையாதிகளின் ஆவிருத, அநாவிருத, சாக்ஷி சைதந்நிய பிரகாசியத்வ விசாரம்.

சான்றிருண் மறைப்ப வொளிர்ப்பதெவ் வணமாஞ்
சாற்றென ராகுசந் திரன்போற்,
சான்றொழித் தயற்பான் மறைப்பென வருளிச்
சழக்கனே னிழுக்கறப் புரிந்தாய்,
தோன்றிய மாலா தாரகற் கருளுந்
தோன்றலைப் பிரிந்துரு துறையும்,
வான்றவர் வழுத்து மணியணி யமுத
வல்லியே களர்வள ருமையே. 35

சேதந மறைப்பின் றெனிற்சுக பாகந்
தெரிதர லுரித்தெனிற் றடையென்,
ஞேதுறு பரம ப்ரேமையின் னிடமா
மொண்ணநு பவஞ்சுக மறைப்பா,

பீதினை யிதயத் தெண்ணெனப் பணித்தா
யென்றுமுன் பதமற வார்தம்,
வாதனை யறுத்து முத்தியீ யமுத
வல்லியே களர்வள ருமையே. 36

## 16. அகங்காராதி ஸ்மிருதி

### சித்தார்த்த சமஸ்காராதாந விசாரம்.

நித்தியச் சான்ரு லச்சமஸ் கார
னிகழ்விலை யதினெளி ரகங்கா,
ரத்தநு சந்தா நமதெங்ங னெனவே
ரமியெந்த விருத்தியார் சாக்கி,
யெத்தினை யிலக்கு மதனினு லதன்ற
னெழிற்சமஸ் காரமா மென்ருய்,
வத்தெலும் பணிவ னுயகி யமுத
வல்லியே களர்வள ருமையே. 37

என்னுமின் னியம மிருத்தலி னயலோ
ரிரும்பொருள் விருத்திஜ வதனுன்,
மன்னுமாங் கார வவச்சிந மதனுன்
மறுவுரு கரியசித் தியமா,
மன்னதாற் சமஸ்கா ரம்மகங் கார
வருமிரு தியுமுறு மென்ருய்,
வன்னியா வடிவ வன்னையே வமுத
வல்லியே களர்வள ருமையே. 38

அகமுறு விருத்தி யவித்தியா விருத்தி
யாசரித் தடைசமஸ் கார,
மிகவிருத் தலினன் மிருதியு மேலு
மிளிரக முபாசனை யுறமு,



வகமது ஞான மன்றள வையினு
லாயதன் றதனினு லென்ருய்,
வமிர்தரு மைம்பா லெழிலியா யமுத
வல்லியே களர்வள ருமையே. 39

கிரியையன் றகமோ ஞானமா மநமாங்
கிளர்பிர மாணமா மதனு,
லருமதைக் கவர்த லாசல விதனு
லாம்பகிர் காண்விருத் தியினு,
லெரிவுறு மிருடா னென்றனை யிடபத்
தெந்தையொ டெழினிறை மருங்கில்,
வருதிருப் பவநிக் காட்சியீ யமுத
வல்லியே களர்வள ருமையே. 40

வழுவிதம் விருத்தி யிருள்கெட மயலும்
வழுவுறு மிதுவழு வுறினுங்,
கழிகிளிஞ் சலிலா மமிசவஞ் ஞானக்
காழினுல் வெள்ளியின் மயலாஞ்,
செழியிதை மநதிற் றேரென வருளுந்
தெருளினை மருளனேன் மறவேன்,
வழுதியின் மகளா யாழியோச் சமுத
வல்லியே களர்வள ருமையே. 41

இதமறைப் பமிச மிரியினு மெழுச்சி
யேதுவாய் வெள்ளியின் மயற்கே,
யிதுவெளி யெனவே மாசினு னுறலா
னிதுவிலை யிருள்கெட விலையாஞ்,
சுதவறி யெனவே சொற்றனை கல்லாச்
சொற்கொடு சொல்லுமென் றுதியை,
வதறுத லெனவே மகிழ்வுறு மமுத
வல்லியே களர்வள ருமையே. 42

ஒருவித மேது வயல்பயன் பபவா
வோதத னபிவியக் தசான்ருற்,
றெரிதரு மிதமோ மயல்பயி லேது
திகழிதம் ரஜதமற் றதுவாய்க்,
கருதென வுரைத்துத் திருத்தினை கழல்சேர்
கடையனை யருள்விழி யதனுல்,
வரகவி யாக்கும் விரகியே யமுத
வல்லியே களர்வள ருமையே. 43

ஞானமற் றிரண்டே விதமய லேது
நல்லிரண் டறியுமற் றதுதான்,
மாநத மிதம மற்றது விருட்டா
மருவுரு திதந்தனை யென்ருய்,
கானக மயி லுங் கயிலைவாழ் மயி லுங்
களிப்புறக் கண்முன நடிப்ப,
வானவர் பாட மகிழ்வுறு மமுத
வல்லியே களர்வள ருமையே. 44

## 17. அபரோக்ஷாநுபூதியின் பொருட்டு விருத்தியின் நிர்க்கம விசாரம்.

கிளம்புறு விருத்தி யறிவினு ளுகுங்
கிளம்புறல் பயனிலென் றிடினே,
களம்படு விடய சித்திலக் கிடுவான்
கருத்துறு விருத்தியென் றனைநீ,
யுளம்புகு வரங்க ளியாவையு முதவி
யுன்றிரு வடிபணி பவரை,
வளம்பெற வளர்க்குங் கருணையா யமுத
வல்லியே களர்வள ருமையே. 45



சிதுவினெற் றுமையா யின்பெனக் கடத்திற்
செறிவுற வெளிவிருத் தியதால்,
மதுகந்த மாதி வெளிவரல் கடுப்ப
மருவமென் றருளினு லறைந்தாய்,
துதிதரு மெனது மாந்தனை யினிய
தூயநற் சிநகர மாக்கி,
வதிதரு கருணை நிலையமே யமுத
வல்லியே களர்வள ருமையே. 46

மண்டிய விடயா வரணநீக் காயின்
மற்றென வெளிவிருத் தியதாற்,
சண்டைஞா நாஞ்ஞா நங்களுக் கேலுஞ்
சார்புற வெளியிலென் றறைந்தாய்,
திண்டிறன் மாறன் மகாரதன் றனக்குத்
திருச்சுத ரிரண்டரு டேவன்,
வண்டடர் மாலை மார்புறு மமுத
வல்லியே களர்வள ருமையே. 47

சேருறு மிருட்குத் தன்னிலைக் களத்த
சித்தினு னீக்கமாம் விருத்தி,
சாருமாஞ் சமவெந் தமவெளிக் கிரிவு
சாருங்கண் கூட்டினு னென்ருய்,
தூருவா சரைப்போல் வீரேச கரரைத்
தூயநற் பணிசெயப் பணித்த
வாரியள் பணியும் பதமல ரமுத
வல்லியே களர்வள ருமையே. 48

நல்லறி வுபரா கப்பொருட் டபேத
நாடபி வியக்தியின் பொருட்டாஞ்,
சொல்லிநு னென்பா லுபநிட மொழிக
டோய்வுறு மபேதமா மென்ருய்,

செல்லேயை நிகர்ப்ப வென்னேயும் பொருளாய்
நீயிரு ணெடிகடிந் தாள,
வல்லியோ வென்ன வோமெனு மமுத
வல்லியே களர்வள ருமையே. 49

முத லாவது சமங்வயப் பிரகரணம் முற்றும்.

---

## இரண்டாவ தவிரோதப் பிரகரணம்.

### 1. சுருதிப் பிரத்தியக்ஷங்களின் பிராபல்ய, தௌர்ப்பல்ய, விசாரம்.

திருத்தணிச் சுருதி முடிச்சமங் வயமோ
திகழ்ந்திடா கடசற்காட் சியினு,
லருத்தெனக் காட்சி சத்தையே கவரு
மகந்தனி லமையென வறைந்தா,
யுருத்திர பிரம லோக்கிய ஞாந
வுயர்ந்தபுட் கரணிநாற் றிசையும்,
வருத்தந மாக நாப்பணே யமுத
வல்லியே களர்வள ருமையே. 50

கடமுதற் பொறிக்காஞ் சங்மதி யெனது
கனவிருப் புணருங்கண் ணுணர்ந்துந்,
திடதத்வா வேத கத்வமா நத்வஞ்
சிவணிடா தெனவெனக் குரைத்தாய்,
பிடிநடை மாதர் மயலின்பின் னுணங்காப்
பெருவர மென்றனுக் கருள்வோய்,
வடிகொள்சிந் துரஞ்சார் காதந வமுத
வல்லியே களர்வள ருமையே. 51



சாதியா தியதா மித்தையாம் பிரம
சற்கிர கணம்வரை சத்தே,
யோதிய கவர்ச்சி யாதலின் மயங்கே
லுண்மையென் றெனக்கினி துரைத்தாய்,
நீதியா யடைந்தார்க் கருள்செயு மிறைவ
னிற்றெழு தருள்செய்வா யெனவே,
வாதியா தருளுந் தெருட்சுட ரமுத
வல்லியே களர்வள ருமையே. 52

சுருதிசிர்த் தோஷம் பிந்திய தெனினுஞ்
சொன்முதற் காட்சிதோ டமதே,
சுருதிதாற் பரிய வதிபிர மாணஞ்
சுருதிநற் றகைமையு மென்றாய்,
தருதியென் றிரப்ப முத்தியை யடியர்
தடையிலே யெனவுயர் கொடியால்,
வருதிரென் றழைக்கு முயிர்த்துணே யமுத
வல்லியே களர்வள ருமையே. 53

### 2. சுருதிப் பிரத்தியக்ஷங்களின் உபஜீவக பாவ, விரோத பரிகார விசாரம்.

வருணமார் காட்சி ஜீவியம் பகைக்கில்
வரமறைந் கென்னண மெனவே,
வருணமார் காட்சி மெய்ம்மய லொலிக்காம்
வண்மையைப் புன்மையேற் குரைத்தாய்,
வருணமுத் தேவர் முத்தொழி னடத்தும்
வகையினுக் கேதுவாய்ச் சான்றாய்,
வருணமுத் தேவி யாயம ரமுத
வல்லியே களர்வள ருமையே. 54

யோக்கிய மெனினு மில்வரைச் சத்தா
 யுக்தமா முண்மைநீக் கதுவா,
மாக்கறுந் தத்வ சத்வமே யுலவ
 லாகியு முரணிலென் றறைந்தாய்,
திக்கதம் வீடில் வீடெனப் புகன்று
 சிநந்தவ மாக்கரற் கினியாய்,
வாக்கறு மறையாய் புரையிலா யமுத
 வல்லியே களர்வள ருமையே. 55

உண்மைவிட் டகிய கற்பனை யிலையே
 லொண்வெளிக் கர்ப்யமெப் படியாங்,
கண்மையின் றனர்கங் காட்சியிற் கொளலாங்
 கற்பனை யொப்பெனப் புகன்ருய்,
திண்மைமெய்ம் முநிவ னீருளா ரெனவே
 திரவிட சூக்தியாற் பாட,
வண்மையாய்க் கேட்டு மகிழ்வுறு மமுத
 வல்லியே களர்வள ருமையே. 56

## 3. பிரதிபிம்பத்திற்குப் பிம்பாபேதபேதங்களாற், சத்தியத்வ மித்தியாத்வ விசாரம்.

மயற்றலச் சந்நி கருஷமின் மையினுன்
 மதிமுக முகுரமூ டயலாம்,
புபனிறத் தாயே யென்றிடி னுடி
 பொருந்துதற் றன்மையா ரோப,
மயன்மய லிலையென் றறைந்தனை யநங்க
 னருந்தநு வநந்தரு தரளம்,
வயற்றரு பவளங் கலந்தணி யமுத
 வல்லியே களர்வள ருமையே. 57



ஆதரி சத்தே வநுபவ வதந
 மயன்மய லேதுவின் றென்னி,
னிதரி விசேஷ பம்முள தென்னு
 நின்மலை கருணையா லுரைத்தாய்,
சூதெலாங் காத வலியதாம் பிரம
 சூத்திரம் புரியுமா வலியை,
வாதரா யணர்க்குக் கொடுத்தரு ளமுத
 வல்லியே களர்வள ருமையே. 58

மூலவஞ் ஞாந மேதுவாம் பிம்ப
 முட்டுரு முகுரதீ பாத,
மேலபிம் பாதி தோஷஜத் திறத்தா
 லெய்தும்ப்ரா தீதிகத் தகைமை,
சீலனே யுணரென் றுஞற்றிய வுரையைச்
 சிறியனேன் மறத்தலுந் தகுமோ,
வாலையே யுலக மூலமே யமுத
 வல்லியே களர்வள ருமையே. 59

## 4 ஸ்வப்நாதிஷ்டாந விசாரம்.

துதைகநா மூல விருளினித் திரையாற்
 றெல்லென துணர்வுபாத் தியமா,
மதுநநா வறிவார் கெடுமென தறிவி
 னயற்கெடற் பிரதிபா சிகமென்,
னிதையடி நாயே னுணருமா றளித்தா
 யின்பமெய் யொளியனு யிருளை,
வதைசெயும் விரகி வளர்செழி யமுத
 வல்லியே களர்வள ருமையே. 60

அவத்தைநித் திரையே யேதுவாம் விசுவ
 னறிதரி லழியுநித் திரைசா,
ரவத்தகக் கரண வபிவியக் தமதா
 மறிவதி லரும்புமென் றறைந்தாய்,

விவத்தைக ணிலவ யாவையும் பொறித்த
வேதநற் றலைவியே மலையின்,
வவத்திருக் குதலை மதலையே யமுத
வல்லியே களர்வள ருமையே. 61

துய்யவல் லவித்தைப் பதிவிம்ப வறிவிற்,
சுயஞ்சுடர் விருத்திவேண் டிலையா,
மையகங் கிருதி யுபகித வதன்ற
னரும்பதி விம்பசித் தினினு,
மையலற் றறிதி யென்றருள் புரிந்தாய்
மலையத்து வசன்றிரு மகளாய்,
வையகம் புரந்த குமரியே யமுத
வல்லியே களர்வளர் ருமையே. 62

சுத்தித மறிவுப் பதிவிம்ப மதனிற்
சொல்லதா லநங்யவேத் யமதா,
மத்தித மமுச வவச்சிந பிம்பத்
தவ்வவ் வவித்தையா சிரயச்,
சித்தது காணு மென்றனை சிறந்த
திநகரன் றனைச்சிந கரமார்,
வத்திக ணகைக்க நகைத்தரு ளமுத
வல்லியே களர்வள ருமையே. 63

## 5. ஸவப்ந பதார்த்தாநுபவ விசாரம்.

கழியிப்பி வெள்ளி சாக்ஷுஷ மாகக்
கநாக்கஜத் ததுமய லாகு,
மொழிதிட்டி சிருட்டி தனினனு வதுவு
முகுமய லெனவுரைத் தனையால்,
செழிதரு வனங்கற் பகவனங் களரி
செறிபரி ஜாதமந் தார,
வழிபடு பெயரு ரமர்தரு மமுத
வல்லியே களர்வள ருமையே. 64



## 6. திருஷ்டி சிருஷ்டி கற்பக விசாரம்.

அசிசமாந் திருட்டி சிருட்டியி லவித்தை
யதனொடு மகிலமுன் னதுசா,
ரினியறி வீயு மிதுவவித் தையநா
தியினைவிட் டயலின்கற் பகமா,
மெனவரு ளினைநீ யெழின்முகங் கரங்க
ளிருபதங் தநம்விழி யாவும்,
வநசபூ வரும்பு விதழுற மமுத
வல்லியே களர்வள ருமையே. 65

திட்டியே சிருட்டி யயலிலை பேதந்
திகழ்த்துறு மளவையில் சிருட்டி,
திட்டிவா தத்தே யசிர்வச நீயஞ்
செப்புதல் தப்பிலை யென்றாய்,
மட்டுலாங் கமல மாயிர மெடுத்து
மகிழ்செயும் பூசையாற் றிதிக்காம்,
வட்டபா ணியன்றன் றங்கையே யமுத
வல்லியே களர்வள ருமையே. 66

## 7. மித்திய பூதத்திற்கும், வியாவகாரிக சத்தி யார்த்த கிரியாகாரித்வ விசாரம்.

உலகது பொய்யே லர்த்தநற் கிரியை
யுறுதல்கா ரித்வஞ்சொப் பநம்போ,
லிலகுறு பொருள்போய்த் தொழினனு வரலா
லிரண்டினிற் சத்தைபே தமதா,
மலரொளி யிடத்தே புகுவன்செய் தமந்தா
னர்த்தநற் கிரியையா மென்றாய்,
வலைமகள் குறமின் மாமியே யமுத
வல்லியே களர்வள ருமையே. 67

அருத்தசத் தையினை யத்தொழில் விழையா
தையபொய் மெய்வடி வொன்றே,
மருத்தல நீரிற் சாதியின் மாந்தின்
மனுமருத் தத்தொழி லோடல்,
திருத்தசர் வார்த்தக் கிரியையி லென்றுய்
செயசெய செயவென வமரர்,
வரைத்திரு மகளாய் வருமரு மமுத
வல்லியே களர்வள ருமையே. 68

8. மித்தியாத் தன்மைக்கு, மித்தியாத் தன்மை யேனும், பிரபஞ்ச மித்தியாத்வ விசாரம்.

மித்தையின் றன்மை மித்தையே லுலக
மித்தையன் றத்வைத ஹாநி,
யத்தன் மங் களுக்குத் தன்பனக நீக்கி
லத்தந்மி சமசத்தா கத்வ,
மொத்ததா மென்று யெவர்கடமம் மாலு
மொழிக்கொணுப் பவக்கடல் கடத்தும்,
வத்தையே யெனையாள் முத்தமே யமுத
வல்லியே களர்வள ருமையே. 69

9. ஔபாதிக ஜீவ பேதத்தாற், சுக துக்காதி சாங்கர்ய வியவஸ்தா விசாரம்.

பிங்கசி வர்களாற் சத்வீதி யத்வம்
பிறங்குறு பிங்கமின் றுபாதி,
பிங்கமின் பாதி யுபகித மொன்றும்
பின்னின்ப மாதியெங் ஙனமாங்,
கன்னலே யமுதே கருணைவா ரிதியே
கணபதி வடிவவோங் கார,
வன்னல சுஷியமே யுன்னரு மமுத
வல்லியே களர்வள ருமையே. 70



மறைமனக் கறைய லதுகொடே விவத்தை
மன்சிதா பாசனுக் குளமார்ந்,
துறைவிசிட் டமதிற் கென்றருள் புரிந்தா
யுண்மையை யுணருநூ லோத,
லிறைவிசின் கழலைப் பணிதர னினையே
பென்னுரு வாகவுன் னுறுதல்,
வறியன்பெற் றிடவே யருடரு மமுத
வல்லியே களர்வள ருமையே, 71

போத்துரு மநசாங் கித்தியத் தறிவிற்
போத்துரு வயலொரு தூய்தி,
லேத்துமா சிரய பேதமே யீனு
மிருமையின் பொய்யையென் றனைநீ,
தோத்திரம் வேத சாத்திர நால்வர்
தோடுடை யாதிய மொழிகள்,
வாத்திய முழங்கப் பார்த்திடு மமுத
வல்லியே களர்வள ருமையே. 72

10. ஜீவர்களின் சுகாதி யநநுசந்தாநப் பிரயோஜகோபாதி விசாரம்.

இதுவிங்ங னுகை வதனது கவர்ச்சி
யின்மையி னேதுவென் போகா,
யதனவி சிலேஷ சாலியாற் போகா
யதநபே தங்களே துகளாஞ்,
சுதவென வருளுஞ் சொல்லினை யெளியேன்
சொப்பநந் தன்னினு மறவேன்,
வதையினைக் சிதைக்குஞ் சுதையெனு மமுத
வல்லியே களர்வள ருமையே. 73

உடன்மா மஞ்ஞா நத்தின்வேற் றுமையா
முலகுபொய் யுடலிறை யேக,
மடர்பகை யளவை முரணுரு வதனு
லறியென வறியனுக் குரைத்தாய்,
வடவா லனைய மாப்பகை யுகுக்க
மன்னிய முநிவருக் கருள்செய்,
வடநிழ லிறைவ னிறைவியே யமுத
வல்லியே களர்வள ருமையே. 74

## இரண் டாவது அவிரோதப் பிரகரணம் முற்றும்.

---

## மூன் றாவது சாதநப் பிரகரணம்.

### 1. கன்மங்களின் வித்யோபயோகப் பிரகார விசாரம்.

ஞாநம தாலே நின்னடை வெவண
நற்றொழின் மிருதியா லெனவே,
ஞாநமற் றலவா மறையினு லறியு
நசையினிற் றொழிற்பயன் ஞாந,
மானதி லெனவே யறைந்தருள் புரிந்தா
யன்பர்க ளன்பினு லீயும்,
வானவ ரசமாந் தொடையல்வே யமுத
வல்லியே களர்வள ருமையே. 75

### 2. ஆசிரம கன்மங்கட்கே வித்யோபயோக விசாரம்.

விதிதவா சிரம கருமமா மேது
விதுரநற் கருமமு மேது,
கதிதசித் தியங்க ளேதுவா மன்றிக்
காமியங் களுமெனக் கணித்தாய்,



சதுருடன் கயிலை யேகியொன் றீந்து
தநமிரண் டுடன்சவுந் தரனை,
வதுவைசெய் துனது முடியரு ளமுத
வல்லியே களர்வள ருமையே. 76

### 3. சந்யாசத்திற்கு வித்யா விநியோக விசாரம்.

ஆசிலாத் துறவின் வாயினற் றொழிலா
லழிவிலா வகவழி வதிட்ட,
மாசவ ணுங்கந் திட்டவி க்ஷேப
மா றன்மூ வருக்கொரு வருக்கே,
பேசலா மென்றுய் ராசுவி னன்பாற்
பெருகிய வீரேச கரத்தால்,
வாசமொண் கயிலை நாணவாற் றமுத
வல்லியே களர்வள ருமையே. 77

### 4. சிரவணுதிகார விசாரம்.

துயறவிக டமக்கே சவணமுக் கியமாந்
துன்னரு சாதிகட் கமுக்யந்.
தறுகலற் றுணர்தி யென்றனை மாலா
தாரகன் றன்னையு மரிய,
துறவியர் வேந்தா முநிவரன் றனையுந்
துணையெனு மிராசுவை வீர,
வறவமா தவனைப் பதத்தணி யமுத
வல்லியே களர்வள ருமையே. 78

### 5. அமுக்யாதிகாரி யாற்றிய சிரவணத்திற்கு ஜந்மாந்தரீய ஞாநோபயோகித்வ விசாரம்.

செந்மவந் தரத்தாம் ஞாநமார் சவணந்
திருட்டமே லதிட்டமென் னெனவே,
கன்மவ பூர்வஞ் செய்சவ ணுேப
காரியா மறுபிறப் பநனென்,

றென்மந மாசு கழீஇயதை யெளியே
னென்னெனப் புகலுவ னெந்தாய்,
வன்மநக் கொடியர் மருவுரு வமுத
வல்லியே களர்வள ருமையே. 79

நிர்மல ஞாநம் வரைசெயுஞ் சவண
நியமமா மதிட்டவே துவதா,
நன்மக சவண மெண்பது மிருதி
நாளினின் ஞாநமா மென்ருய்,
புன்மல நிறைந்த வரிவையர் மோகம்
பொருந்துரு திருந்திட வேண்ட.
வன்மமில் லாம லருடரு மமுத
வல்லியே களர்வள ருமையே. 80

## 6. நிர்க்குணத்திற்கு முபாசியத்வ விசாரம்.

சிரவண நிகர்ப்பப் பிரமவித் தையினிற்
றிகழுநிர்க் குணவுபா சனைதான்,
பிரசநம் புகலு முக்கிய வேது
பேணுதி யென்றுசொற் றனைநீ,
குருமொழி யுளத்திற் கொண்டுமிண் டடியேன்
குமரியர் மயலின்மங் காமே,
வரதையா யருளும் நல்லையே யமுத
வல்லியே களர்வள ருமையே. 81

## 7. பிரஹ்ம சாக்ஷாத்கார காரண விசாரம்.

நினதுகோ சரத்திற் கரணமென் னெனவே
நீள்பிர சங்கியா னந்தான்,
மநதுமேற் றுணையா மகமநு பவத்தே
மன்னலாற் கரணமா வாக்ய,



மநநியா மறையா லென்றமை சிறிதோ
மலர்தலை யுலகெலாங் காக்கும்,
வநதமே னியன்றன் றங்கையே யமுத
வல்லியே களர்வள ருமையே. 82

## 8. சாப்தாபரோக்ஷ விசாரம்.

வரிவிதி யோமம் புரையவே காட்சி
வளர்ந்தபா வனைநிறை மொழியால்,
வரதியா னஞ்சார் மனநட்ட விட்ட
மங்கைபா லெனமகா மொழியா,
மரியவென் குமர வென்றனை முடவ
னருணனும் ஞாநநீ ருறவீ,
வரபல நிறையும் பொங்கர்வா ழமுத
வல்லியே களர்வள ருமையே. 83

சுயமப ரோக்ஷம் யானென துணர்வு
சுருதவாக் யஜமபி வியக்த,
சுயவென துருவே வெனக்குச்சா க்ஷாத்தாஞ்
சொல்பொருட் கெனதபே தத்தா,
லியையுமென் றிசைத்தா யிமவிறைக் கரிய
வினியகீ தையையீ யம்மே,
வயவனுக் கருள்வற் கருடரு மமுத
வல்லியே களர்வள ருமையே. 84

## 9. அஞ்ஞாந நிவர்த்தகத்வ விசாரம்.

விழியெழும் விருத்தி நினதிரு ணீக்க
வேண்டுமென் றிடிலது வெனையோ,
தழுவலில் தழுவி னதிட்டமார் வேதாந்
தஜமதா மென்றருள் புரிந்தாய்,

செழிபனன் மகளாய்த் திருவிளை யாடுஞ்
செல்வமே யென்னுயிர்த் துணையே,
வழிவழி யடிமை யெனக்கொளு மமுத
வல்லியே களர்வள ருமையே 85

தத்துவ மசியால் விருத்தியாஞ் சொருப
சம்பந்தச் சிறப்பினு லிருளேக்,
கொத்துநற் ருயைக் கொல்வதெங் ஙனமாங்
குழைகழை யெனவறி யென்ருய்,
சத்திய ஞாந வநந்தவா நந்த
சம்புவா மெம்பிதாக் கினியாய்,
வத்திய மில்லாச் சுத்தமே யமுத
வல்லியே களர்வள ருமையே. 86

## 10. பிரஹ்மாகார விருத்தி நாசக விசாரம்.

தெள்ளிய விருத்தி நூக்கமெங் ஙனமாஞ்
செப்பெனக் கதகரே ணுவைப்போல்,
வள்ளய பதித பயமென வெரித்த
வளர்திரு ணக்குழு வனல்போற்.
கள்ளமற் றறியென் றருளினை யிருள்செய்
காநகந் தனிற்பர னுடும்,
வள்ளியை மணக்குங் குழவியீ யமுத
வல்லியே களர்வள ருமையே. 87

விருத்தியா ரூட சாக்ஷியே யெவையும்
வீழ்த்திடும் ரவிகரன் போன்றே,
விருத்தியா விருள்போ முலகத னழிவால்
வீடுலே சத்தினு லென்ருய்,
கருத்தவொண் மகிட வசுரனே முதலாங்
காமமா தியையெலா நொடியில்,
வருத்தியின் பளித்த திருத்தியே யமுத
வல்லியே களர்வள ருமையே. 88

மூன் ருவது சாதநப் பிரகரணம் முற்றும்.

---



## நான் காவது பலப் பிரகரணம்.

### 1. அவித்யா லேச விசாரம்.

எண்ணும்வீ டெதனு லஃதெது வெனவே
யிருளின்வி க்ஷேபமா மிங்கு,
நண்ணும்வா தனையா மெரிபுகு படமா
நண்ணுரு வணுவுமென் றனைநீ,
கண்ணரு மிளங்கொம் பன்னேயே மின்னும்
கவின்மிகு தேவியே பசிய,
வண்ணமா ருருவே யருவமே யமுத
வல்லியே களர்வள ருமையே. 89

### 2. அவித்யாநிவிருத்தி ஸ்வரூப விசாரம்.

நீக்கமென் னெனவே யென்னதே வைந்தா
நிகழ்பிர காரமாம் ஞாநக்,
காக்கிய காலத் தாம்விசி விருத்தி
கணிகமாம் பாவமாந் தொழிலாம்,
ஆக்கவு மதனைக் காக்கவும் போக்கி
யாடவு மூவருக் காக்கி,
வாக்கொடு மநமுங் கடந்துள வமுத,
வல்லியே களர்வள ருமையே. 90

### 3. முக்தி ஸ்வரூப விசாரம்.

கணிக்கமேற் றிரமி லென்றிடிற் பிரமக்
களிப்படை விடர்வொழி வாகு,
நுணுக்கவிவ் விரண்டிற் றுயரறல் சேட
நுவன்றது சொருபவின் பென்ருய்,
குணக்கட மணக்கும் பிணக்கறு கரியின்
குரைகழற் றெருழுகவு நினதாள்,
வணக்கமு மறவா வரந்தரு மமுத
வல்லியே களர்வள ருமையே 91

### 4. பிரஹ்மாநந்தத்தின் பிராபயத்வ விசாரம்.

நித்திய வடைவ தென்னினு மிருளா
  னின்றது கெடிலெழல் பணிபோன்,
மெத்தவின் பிலையென் மையலோ யுணர்வான்
  மெலிவுறி னடைவென மிளிர்த்தாய்,
தத்தமா யுடலே முதலன வாங்கிச்
  சச்சிதா நந்தமே யீந்து,
வத்தகம் புரியுஞ் சிறுமியே யமுத
  வல்லியே களர்வள ருமையே. 92

ஆநந்த மிருந்த காட்சியில் புமர்த்த
  மரியநற் காட்சியால் வீடா,
மாநந்த வுணர்வு மையலாற் பேத
  மழியிலோ பேதமில் காட்சி,
ஏனிந்த மருமை மறிந்திலை யென்று
  யெண்ணினு மின்னகர் காண்பான்,
வானந்தந் தருளும் வள்ளலே யமுத
  வல்லியே களர்வள ருமையே. 93

### 5. முக்தனுக்குப் பிரஹ்ம பாவ விசாரம்.

ஈசனு யுறலோ முத்தன்றாய் நீயா
  யிருத்தலோ வோருயிர் வாதத்,
தாசிலா நீயா மளவிலா வுயிரி
  லவன்பதி விம்பனு முனையே,
தேசுறப் பெறலா மென்றுனைத் தெளிந்த
  தேசிக ரறைந்தனர் மலரின்,
வாசமே யென்னு நிறைதரு மமுத
  வல்லியே களர்வள ருமையே. 94



விம்பவீச் சுரத்தே யீச்சுர வடைவாம்
  விம்பமுஞ் சந்தத மெய்யாய்க்,
கம்பமி லறிஞன் கடந்தெலா விகற்பங்,
  களங்கமில் கேவல வெனையே,
பம்பவ னென்றுய் பரமமே லான
  பரஞ்சுடர் வடிவமே கீர்த்தி,
வம்பலெட் டுலவுந் தருவந வமுத
  வல்லியே களர்வள ருமையே 95

நான் காவது பலப் பிரகரணம் முற்றும்.

---

சருவமா மறையின் முடிகளுக் கொன்ருஞ்
  சத்தியாத் துவிதமா நின்பால்,
வருஞ்சமங் வயத்தை முதறனிற் புகல
  மருளனுக் கருளினைப் புரிந்தாய்,
மரகத வபுவி லன்பர்க ளணிசெய்
  மல்லிகை யாதிய வலங்கல்,
வரியழி பாட மகிழ்வுறு மமுத
  வல்லியே களர்வள ருமையே. 96

நிகழ்வினு வெவைக்கும் விடைவிடுத் தருளி
  நெறியவி ரோதமே யறிவான்,
சுகவிரண் டதனிற் சொற்றிட வருளைச்
  சொரிந்தெனைப் பாடுமா பணித்தா,
யிகமொடு புகழை யெண்ணுரு திருக்கு
  மிருந்தவர்க் கேவலே செய்வான்,
வகுவரு ளெனக்கீ குமுதமே யமுத
  வல்லியே களர்வள ருமையே. 97

மூன்றினி லதற்குச் சாதந ஞாந
முயலினு மயலதன் றெனவே,
யான்றெரிந் திடுமா றருணனி சுரந்து
யாக்கயே புரிந்தனை யனையே.
கான்றசோ றதனிற் கண்டுபொய்ப் போகங்
கைவிடு மாதவர்க் கருளும்,
வான்றனிச் சுடர்க்குஞ் சுடர்தரு மமுத
வல்லியே களர்வள ருமையே. 98

முடிவதிற் புகன்ற ஞாநசா தநத்தான்
முற்றுறு பலமெலா முணர,
வடியனுக் கருளா லருளியே முடித்தா
யம்மநின் னளிமகத் ததுவால்,
பொடியணி பரமன் வந்துநிற் றெழுது
புழுகொடு தழுவவப் பொடிசார்,
வடிவுடை யெனது மனமனு மமுத
வல்லியே களர்வள ருமையே. 99

அன்பர்கள் பாடென் றறைதர வறிவி
லடியனேன் குதலைமென் மொழியா,
னின்பெரு மருளா லுணர்ந்ததை மொழிந்தே
னீபுய மணிந்தெனைக் காகா,
மன்பர வீர சேகர ஞாந
வலம்புரிக் களிற்றையீன் றருளும்,
வன்பெரும் பிடியே வாழிநீ யமுத
வல்லியே களர்வள ருமையே. 100

ஸ்ரீ அத்வைதாமிர்த சார சங்கிரகம் என்னும்
திருக்களர் அமிர்த வல்லி மாலை
முற்றும்.

---



உ
சிவ மயம்.
ஓம் மகா கணபதயே நம:

கல்லலை அடுத்த சிவற கோட்டை,
ஸ்ரீ சிந்தா மணி விநாயகர்,

# செல்வ மணி மாலை.

---

## மங்கலம்.

சுந்தரற்குத் தூதுசென்ருேன் சொற்றதிரு மாமறையின்,
மந்திரமாஞ் சுந்தரமா மாமுகவா!—சுந்தரஞ்சேர்,
சிந்தா மணிநினக்குச் செல்வமணி மாலைசெப்பப்,
பைந்தா மரைவிழியாற் பார்

## மாலை.

நின்றனைப் புகழு மன்பரே யான நிகரிலா வகத்தியர் வசிட்டர், இன்றமிழ் மூவ ரவ்வையே முதலவர்க் கினிய வாக் களித்திடு முறைபோல், என்றனுக் கருளல் நீதியன் றெனினும் இளமொழி யினிமையே யன்ருே?, தென்றனின் றுலவும் சிவன்றனற் கோட்டைச் செல்வச்சிந் தாமணித் தேவே! 1

திரித்திங்கள் தோறு நின்றனைக் காணக் கிளர்திசை திசையிருந் தளவில், அருத்தியை விரும்பி வருமடி யவர்க் கும் அவ்வணம் முடித்தரு ளரசே!, குருத்திரு நாத! குணபர மேச! கொடியனுக் கருள்செய லரிதோ?, திருத்தர்க ளுறை யும் சிவநகர் வாழுஞ் செல்வச்சிந் தாமணித் தேவே! 2

கண்ணொன்றைக் காணக் காதொன்றைக் கேட்கக் கருத்தொன்றைக் கருதியே கடையேன், எண்ணிடு முனது பூசையும் பூசை யெலிபிடித் திடுதலே யென

வாம், அண்ணலே யெனினும் யாவரை யடைவேன்? ஐயநீ! யருளிலே யானுல், தெண்ணறை பருகி யளியின முல வும் சிவபுரிக் கிறைசிந்தா மணியே! 3

கற்பினே வளர்க்கும் கற்பகக் கொடிகள் கயற்கணி மருகியர் படர, வெற்பினிற் கிளேத்த தருவென விளங்கி விருப்பொடு நின்றநின் ரேற்றம். அர்ப்பர்க ளெனினும் கண்டபின் னகல அகத்தினி னினேவரோ அறையாய்?, சிற்பர மறையின் தற்பர கருணேச் சிவநக ரிறைசிந்தா மணியே! 4

சொல்லுத லெவர்க்குஞ் சுலபமா மவணந் தொடர் புற லரிதினு மரிதாம், நல்லவர் நடந்து காட்டுவ ரதனே நான்செய நயந்தருள் புரிவாய் மல்லிகை வநத்தில் மலர்ந் திடு மலரில் மங்கைமா ரிருவரோ டுலவும், செல்வமே! யரியின் மருகனே! யரன்றன் செவ்விய கோட்டைவா ழமுதே! 5

துறவினர் போலத் திரிவதே யல்லாற் றெல்சிவம் யானெனத் துயரில், மறைசொலு மரிய நிட்டையை யடைந்து மகிழ்ந்திருந் துறையுநா ளுளதோ?, அறவினே காக்கும் வசிட்டரும் அரிய அருந்ததி யன்னேயும் வாழச். சிறுவநின் னருளே யல்லது முளதோ சிவன்றனற் கோட் டைவா ழிறையே! 6

கற்றவ ரெனவே சொற்றமற் றவரும் கற்பக மெனு நின கழல்கள், பெற்றுற வருள விருக்கவு மவற்றைப் பேணுறுர் பேதைய ரென்னே!, நற்றவ நடப்ப நாயடி யடியை நாடிட வருண்மிக நயப்பாய், செற்றவை பொறுக் கும் பொறுமையர் வாழுஞ் சிவன்றனற் கோட்டைமா முகனே! 7



அன்பினுக் குரியை அன்பினுக் கெளியை அன்பருக் கன்பனென் பதைநீ, முன்புகாட் டினேயென் றறைகுறை முடிய மூடனுக் கருள்செய லுரித்தே என்பினே யுருக்கும் அன்பினே யீயின் இன்ன மென் வேண்டுவ தறியேன், தென் பரங் கிரியோன் றமையனே. செல்வச் சிவன்றனற் கோட் டைசே ரரசே! 8

இயைபுரு நினேவை யெண்ணியே பெருமன் இவ்வண மருளுவ னெனவே, பயனற நினேந்து பாவியேன் பதைத் தல் பயனுற வருளுநா ளுளதோ?, நயமெலாம் பெறவும் நாடிடு மசுரர் நசிக்கவும் நாட்டிய முகத்தோய்!, செயசெய வெனநின் றமரர்கள் போற்றுஞ் சிவன்றனற் கோட்டை வா ழமுதே! 9

யாரினுங் கருணே நிறைந்துமிக் குள்ளேம் யாமெனப் புலப்படக் காண்பான், ஓரின மில்லா வடியன்மேற் காட் டின் உண்மையொப் பறவிளங் குறுமால், தேரினும் யானே தன்னினும் திகழத் திரிதரு மாந்தர்க ளடைந்த, சீரினும் தேவர் தமைமதி யாத சிவநகர்ச் சிந்தையின் மணியே! 10

அன்பொரு சிறிது மணுகிலேன் எனினும் அன்பினேக் கொடுத்தெனே யாளல், நின்பர மலவோ நின்னேயே நிதமும் நிரந்தரம் நினேக்குநா யலவோ?, வென்பரர் காட்ட வென்ற வேல் முருகன் வேண்டிய முடித்திடு மிறையே!, தின்ப சேர்ந் திடலி லாசைதீர்த் தாள்வாய் சிவநகர்ச் சிந்தையின் மணியே! 11

எத்துணேச் சரித மிருந்தபோ தினுமே ஏழையென் றெண்ணிடா தெளிய, பத்தனே நினது பதமலர்க் காக்கிப் பாடவும் வைத்தனே புகழைச், சித்தமென் பானிற் கிரங்கிய தருமை தெய்வமே திருவடி பணிந்தேன். சித்துறு வாகிச் செகத்தினே யிலக்குஞ் சிவநகர்ச் செல்வமா முகனே!. 12

வாக்கினின் மநத்தி லொருபடித் தில்லா வன்கண
னென வெனை நினையேல், போக்கினி லேனும் புகழ்ந்துனை
நினைந்து புண்ணியம் பண்ணியே யிருப்பேன், நாக்கினி
லிருக்குந் தேவியி னுதன் நான்மறைப் பொருளுறை யாமற்,
றேக்கினி லிருத்துஞ் செல்வனற் றமைய! சிந்தையின்
மணியெனு மிறையே! 13

எழிதுளர் தமக்குக் கருணையு மியல்பா யிலங்குறி
னெழின்மிக விலங்கும், பழிமிகு மிலதே லென்னயா னினக்
குப் பன்னிட னலங்கொலோ பாராய், கழைமதன் கவி
னைக் கடையெனக் கதிர்த்த கவின்றிரு மேனியன் றமைய.
செழிதரு வயல்சூழ் சிவநற்கோட் டையில்வாழ் செல்வச்சிந்
தாமணி யிறையே.! 14

என்னுடை மநமும் காயமும் வாக்கும் எழிலறி
வுருவமே யான, வுன்னுடை யனவா யொளிர்ந்திட வுளத்தி
லுன்னிட லென்றுகொல் லறியேன், பன்னிரு வருட மழை
யிலா மையினுற் பாரினிற் கட்டம்வந் துறினும், செந்நெலே
விளையும் சிவநற்கோட் டையில்வாழ் சிறுவசிந் தாமணி
யிறையே! 15

புலியுரு வான தேநுவும் பூசை புரிந்துபுன் புலியுருப்
போக்கின், நலியுமிக் கொடிய னுயனுங் காய நானெனன்
மறந்தறி வுருவாய், வலியுறற் கென்னே தடையுன தருளை
வழங்குதி யெனின்வழங் காயோ, சிலைவிலன் பெற்ற
செழுமறை முடிபே சிவநகர்ச் செல்வமா முகனே. 16

பாலனே நான்கு மறைமுடி பான பண்ணினில் விளங்
கிய விரிவாங், கோலனே! கொடியன் குறையெலாந் தவிர்க்
குங் குணநிறை குரவனே! யுலகின், மூலனே! யுனது பத
மலர் பணிவர் மூடரே யென்னினு மருளுஞ், சீலனே!
தேவி வல்லபை பதியே! சிவநகர்ச் சிந்தையின் மணியே! 17



யாரையா னேத லுளக்கசி விலதேல் யாரரொடு முற
வதாய்ப் பேசல் காரையம் பதியில் வருதிருக் குரவன்
கான்மலர் பணிந்திட வடியேன், சீரையான் வேண்டி
நின்றிடி லேவர் செறியெனத் தருபவ ருரையாய், தேரை
யே நடத்த வருணனுன் முடியாச் சிவநகர்ச் செல்வமா
முகனே! 18

உடம்பெலாம் வாயாம் பொய்யுரைத் திடுதற் குன்
புக ழென்னினே ஊமை, கடம்படு முடம்பை யானென
நினைந்து காரிகை போகமே விழைந்தேன், மடம்படு மதி
யை மாற்றிடக் கரத்தில் மருந்துனக் கில்லையோ சொல்
லாய்?, திடம்படு மறிஞர் திகழ்தரும் பெருமைச் சிவநகர்ச்
சிந்தைமா மணியே! 19

வாதனை மாற்றி வழங்கிட நினது வண்மலர்ப் பாத
மே யல்லால், ஏதுள துரைத்தி யெந்தைசெஞ் சடையு மில
ங்கிடல் நின்பத மலரால், சூதுசெய் தாடல் நல்லவர்க்
கழகோ! சுரருமுன் றனையிக ழாரோ?, தீதினை யெனக்கிங்
ககற்றிலை யென்னிற் சிவநர்ச் சிந்தைமா மணியே! 20

மார்பினை யுருட்டி மருந்தினை யீய மலயமா முநிவரன்
மாகத், தோர்வற வலைந்தும் பாடிட வருளு முன்றன்பின்
மகிமையா ருணர்வார்?, நீர்வரு நிலவி லலைதரு மெனது
நிலையிலா மநநிலைத் துன்பாற். சீர்பெற வருளிச் சிறியனை
யாள்வாய் சிவன்றனற் கோட்டைவாழ் முதலே! 21

சங்கநக் கீரர் மெய்ம்மொழிப் புலவர் சாற்றிடத் துதி
யினை வலுவி, லிங்கித மருளும் தம்பியை யுடையா யென்
மொழி யினிமையைத் தருமோ?. பங்கினி லுயர்ந்த வே
னெடுங் கணியின் பான்முலை மாந்தியே யாடும், செங்கனி
மொழிய செம்மணி வடிவச் சிவநகர் புகுசிந்தா
மணியே! 22

குழவியென் றிகழச் சூரனுக் கரிய குவலய மடங்குமா வடிவை. யெழிலுறக் காட்டித் துதிகொளு முனதின் னிளவலை யருளுமா றேவாய், தொழவருந் தேவி கோட்டை யின் றென்பால் தொல்புகழ் வசிட்டனுர் போற்றச், செழு மலர்ச் சிவன்றன் கோட்டையில் வாழும் சிந்தையின் மணி யெனுந் தேவே. 23

மங்கைய ராடு மன்னவர் வாழ்வும் மந்திர விந்திரன் வாழ்வும், பொங்கயன் வாழ்வும் பொன்றுத லடையும் பூரண நினையுறும் வாழ்வே!, துங்கம தாகு மென்றறிந் திருந் தும் துயரக்கடல் துதைந்தன னென்னே, செங்கையைச் சிரத்திற் பொருத்துநா ளுளதோ? சிவநகர்ச் செல்வமா முகனே. 24

கரிமுக தமைய கந்தனு முருகன் கண்குளிர் தம்பியா மெனினும், ஒருசினஞ் சிறிய தம்பிவேண் டாமோ வுரியனு னல்லனோ வதற்கு?, விரிதருங் காந்தி மூஷிக மிசைநீல் வெற்பெழு மணியென விளங்கித், தெருவினி லெவருங் காணவே வருவோய் செல்வச்சிந் தாமணி யணியே! 25

அரன்றிரு முடியி லேறியே நீரி லரியகைத் தாமரை தோய்த்து, விரன்மடங் காம லழல்விழி காட்டி விளக்கமே செய்தர னுமையைக், கரிமுகத் திறைவ! களிக்கட லழுத் துங் கதைக்கெழில் வந்தரு ளருளாய்!, சிரிதரும் விழியர் மதனனை யழைக்குஞ் சிவநகர்ச் சிந்தைமா மணியே!. 26

மனநினக் காக்கி வாய்நினக் காக்கி மற்றுள பொறி களும் நினக்கே, யினமுட னுக்கி யின்பமே யடைந்திங் கேழையன் கோவண னுகித், தனமனை யினரைத் தாயென நினைந்து தயையினைப் பெறவுநா ளுளதோ?, சினமறுத் தெறிந்த சிற்பரர் வாழுஞ் சிவநகர்ச் செல்வமா முகனே! 27



பெண்களிற் சுகத்தைப் பெறுபவ ரிருவர் பேணிய நாயகன் குமரன், தண்களி குமரன் ருபமே கொழுநன் ருரணி யறிந்திலை யென்னே!, வண்களி யளிகள் மறைமுடி போத வளமிகும் வசிட்டர்முன் முநிவர், திண்களி மிகவுற் றருமறை பாடுஞ் சிவன்றனற் கோட்டைவா ளரசே! 28

குன்றையுங் குறும்பன் குலத்தையுங் குலைத்த குமர னற் றமையனே! வலபை, மன்றல்செய் யிறைவ மகிழ் தரும் வடிவ! மதிதர லென்றுகொ லெனக்குக், கன்றுறுங் காம தேநுவின் பாலிற் கலந்தமெய் யமுதநன் னறையே, சென்றுறு புகழைச் சேணினிற் செலுத்துஞ் செல்வச்சிந் தாமணி முதலே! 29

கண்ணப்பன் குமரன் சுப்பிர மணியக் காதர வணிக ரின் முதல்வன், நண்ணப்பன் மலர்கள் வயிரவன் கோவில் நாடிய பெருமைய னன்பால், திண்ணப்பொன் கொடுத் துச் சினகரஞ் செய்யச் சிவன்றனற் கோட்டையி லரு ளால், நண்ணிப்பன் னெனையும் ஆள்சிந்தா மணியே! நாண் மரைப் பாதமே போற்றி! 30

எத்துனைக் குறைக ளிருப்பினும் பொறுத்தே ஏழையை யாளுதல் நினது, சத்தியக் கடனென் றருமறை புகலச் சண்முகன் றமையநீ யருளா, தெத்திடின் விடுவ லென்றுநீ நினையேல் என்னுயி ரிறைவனே யருளாய்!, சித்தியைத் தருநற் சிவன்றன் கோட்டையில்வாழ் செல்வனே! சிந்தையின் மணியே! 31

சுப்பிர மணியன் பின்னவ னுன சுகமிகு சுவாமிநா தப்பேர், சுப்பிர மணியர்க் கன்பினன் வேண்டத் துதித் திடும் பாடல்கள் நினக்கே, அர்ப்பிதங் கண்டாய்! சிவன் றன்கோட் டையில்வா ழன்பர்கட் கருள்செயும் பெரும! செப்புதற் கரிய நின் றிரு வடியே செகந்தனில் வாழ்கநீ டூழி. 32

சிந்தா மணி விநாயகர்

*செல்வ மணி மாலை முற்றிற்று.*

உ
ஸ்ரீ கணபதி துணை.
ஸ்ரீ சிருங்க கிரி ஜகத் குரு
ஸ்ரீ சச்சிதாநந்த சிவாபிநவ நரசிம்ம பாரதி ஸ்வாமிகள்
குன்னக் குடி யென்னும் ஸ்ரீ மயூர கிரி
ஸ்ரீ சுப்ரஹ்மண்யக் கடவுண்மேற
திரு வாய் மலர்ந் தருளிய

## ஷண் முக ஷட்கமும், :: விருஷ்டி ஷட்கமும், சுப்ரஹ்மண்ய தசகமும்.

ஷண் மூர்த்திகள் வணக்கம்.

திருவர கரியின் றிருமுகத் தவனைத் திருவரன் குமரி யர் தவனைக், கருவரிக் கயற்கண் வபற்குறுங் காவற் கன்னியை மன்னவா ளிறைறயைச், சருவரும் பரவுஞ் சங்கராரியனைச் சந்ததஞ் சிந்தையூ டிருந்தே, வெகுவர லொழித்த வீரமா தவனை வெளியுளிற் றெழுது வாழ்த் திடுவாம்.

---

உ
சிவமயம்.
ஸ்ரீகணபதி துணை.
ஸ்ரீ சங்கர பூஜ்ய
பகவற் பாத பூர்வாசாரிய சுவாமிகளாற்
திரு வாய் மலர்ந் தருளப்பட்டு
ஸ்ரீவீர சுப்பைய சுவாமிகளாற்
செய்யுள் வடி வாக்கிய

## மகா கணபதி பஞ்ச ரத்நம்.

திருமகிழ் வதனின் மோதக மதனைத் திருக்கரந் தனிற் றரிப் பவனு, யொருசுக வீட்டை யருளியெஞ் ஞான்று மொளிர்நில வணிந்தநா யகனு, யருகதி யிலர்க்குக் கதியதா யினனு யானையொண் ணசுரநா சகனுய், வெருவறப் பணிவ ரசுபநா சகனும் விநாயகன் றனைத்திநம் பணிவாம். 1



கரங்குவி யாருக் கதிபயங் கரனுய்க் காலையி லுதிகதி ரொளிசேர். சுரரினெ டசுரர் துதிப்பவ னுகித் துதிப்பவ ரதிதுயர் துடைக்குஞ், சுரரிறை யாகி நிர்சுர னுகிச் சொல்கய விறைகண விறையாய், விரிமகே சுரப ராத்பர னுகும் விநாயகன் றனைத்திநம் பணிவாம், 2

உலகெவை தமக்குஞ் சுககர னுகி யுயர்கரி யசுரநா சகனு, யிலகுறு பெரிய வயிறெடு மரிய விபமுகந் தரித்தழி விலனு, யலகறு கருணை கமைமுதம் புகழ்ச்சி யடைபவர் தமக்கருள் பவனுய். விலகறு மொளியாய் யாவரும் பணியும் விநாயகன் றனைத்திநம் பணிவாம். 3

வறுமைய ரிடரை வடிப்பவ னுகி வநசசன் றுதிக் கிலக் கியனுய்ச், சிறுபுர தகநன் முதற்சுத னுகித் திதிசுதர் கருவவா ரணனு, யுறுவளி யுணியி னலரியின னுகி யுருமிகத் தநஞ்சயற் கியும், வெருமதம் வரையும் பழமைப னுன விநாயகன் றனைத்திநம் பணிவாம். 4

கதிர்மிகுத் திலங்குந் தந்தமுற் றவனுய்க் காலகா லன் றிருச் சுதனுய், மதிமயங் குருவுற் றழிவில னுகி மந்தர மந் தன னுகி. முதியவ ரிதய மதுதனி னிதமு முதமொடு வதிதரு பவனும், விதிதரவ் வேக தந்தனே கதியாய் விநாயகன் றனைத்திநம் பணிவாம். 5

மகாகண பதியின் பஞ்சக மிதனை மநந்தனிற் றிநஞ்சிரத் தையனுய், மகாகண பதியைக் காலையி னினைந்து மகிழ்வொடு துதியெவன் புரிவன், மகாகண பதியி னருளினுல் விரைவின் மாசொடும் பிணியிற்பண் டிதனுய், மகா கண பதியின் பதஞ்சுத னுயுண் மன்னுவன் சுபவெண்பூதியுமே. 6

மகா கணபதி பஞ்ச ரத்நம்
முற்றும்.

---

உ

சிவ மயம்.

கணப்தி துணை.

## ஷண் முக ஷட்கம்.

---

சீரகஞ் சமரின் களமதிற் பூர்வஞ் செற்றவன் மகிழ் வினு னெடியிற், சூரகன் றனைநற் சுரர்தமைத் துயரிற் றணந்திடப் புரிந்தன னவனு. மேரக னெனுமா நந்தகந் தமதை யியற்றயை வாரிரா சியினைச், சாரக மரையிற் சண் முகன் றனையாஞ் சந்தத நினைந்துபோற் றிடுவாம். 1

மனைவிய ரிருவர் மருவிட மயூர மலைமுடி யதனில்வாழ் பவனைப், புனைமகிழ் வொடுமிக் கடிபணி பவர்க்குப் புகழ்வரந் தமையருள் பவனை, நனைமரைக் கரத்தி னனந்தலை யயில்வே னலம்பெறப் புனைந்தருள் பவனுந், தனையக மரை யிற் சண்முகன் றனையாஞ் சந்தத நினைந்துபோற் றிடுவாம். 2

அமரர்க ளிறையி னருங்கும ரியின்றன் னகமரைக் கலரியா யினனை, யமர்தரு குரங்க வங்கதிக் காரி யாகிய வதநநீ ரசனை, யிமிழ்கிரி யிறையின் முகக்கடற் பூர்ண விந் துவின் பிம்பமா யினனைச், சமவக மரையிற் சண்முகன் றனையாஞ் சந்தத நினைந்துபோற் றிடுவாம் 3

இடரித யமதி லிருக்கும்வெந் தமத்தை யினிதுமெய் யரித்தருள் பவனைத், தொடர்முத லிலவச் சுருதியா னிதமுந் தொகைமகிழ் வொடுந்துதிப் பவனைக், கடவுள ரிறையின் மகளொடும் விரவிக் கநதநந் தழுவலுற் றவனைச், சடவக மரையிற் சண்முகன் றனையாஞ் சந்தத நினைந்துபோற் றிடுவாம். 4



சரவண மதனிற் சரித்தவிச் சிசுவைச் சவிகுவி கிருத் திகை யறுவர், திரமுறு குயத்திற் பெருகுதெள் ளமுதைச் செறிதரப் பருகவைத் ததனல், வரமுறு முலகிற் கார்த் திகே யனெனு வழங்குவ ரெவனையன் னவனுஞ், சரவக மரையிற் சண்முகன் றனையாஞ் சந்தத நினைந்துபோற் றிடுவாம். 5

போற்றுவர் தமக்கிங் கறுவகை யான புகழிறை குணங் களா மவற்றைத், தோற்றுறு மளவில் கருணையால் யாவன் றுரிதமாய்ப் போதனை புரிவா, னேற்றுறு வதந மரையிரு மூன்றை யியைந்தனன் மேன்மையன் னவனுஞ், சாற்றக மரையிற் சண்முகன் றனையாஞ் சந்தத நினைந்துபோற் றிடுவாம். 6

எவன்முக முளரி தனிலறு காற்புள் ளிதுநிதஞ் சிரத் தையோ டிவரு, மவன்றனக் ககில வித்தையை விரைவி லருள்புரிந் துயர்தன தடிசேர், தவந்தனக் குரிய தன்துபத் தியினைத் தயையினு லுதவியே யருள்வன், சிவன்றனிக் குமர குஙிய வாறு திகழ்முகக் குமரசற் குருவே. 7

*ஷண் முக ஷட்கம் முற்றும்.*

---

## விருஷ்டி ஷட்கம்.

---

மகிசல முதல வெட்டையும் வடிவாய் மகிழ்ந்தருள் குரவனே புரத்தைத், தகியரன் குமர நினைச்சரண் புகுந்த தவத்தினர் பவத்தின்வே ரறுப்போய், சகிதரற் கரிய வடைந்துள தாபந் தணந்திட மழைகடி தருள்வாய், குகவிரு மூன்று முகமுடைப் பரம குறமகட் கினியநா யகனே. 1

அகஞ்சபத் தோடு மந்திரஞ் சேவை யரியநற் பூசை
யே முதலா, வுகந்துனக் கியற்றும் வலியில னெனினு முய
ருன தியல்பளி யாலே, புகழ்மழை பொழிய வெழுமென்
வாஞ் சையினைப் பூரணங் கணம்புரிந் தருள்வாய், குகவிரு
மூன்று முகமுடைப் பரம குறமகட் கினியநா யகனே 2

மிகவணங் ககில விபுதர்கண் மவுலி மிளிர்தரும் பாத
தா மரையாய், மகிழ்தரு தெரிய னன்குலா விடும்பொன்
மணியணி கம்புதிண் களனே, தொகுமினல் கோடி
நிபவபு வொளியோய் துரிதமன் மழையுற வருள்வாய்,
குகவிரு மூன்று முகமுடைப் பரம குறமகட் கினியநா
யகனே. 3

அகமிக நிறைந்த வவர்தமிற் கொடிய னடியன்மற்
றுலகிலென் றனக்குத், தகுதியிங் கெவரு மிலைமழை
பொழியத் தனியுனை வேண்டுமா தரிலோ. சகமது தனக்கிங்
கற்புத மிகவுஞ் சமைந்திடுங் கடிதுநீ யருள்வாய், குகவிரு
மூன்று முகமுடைப் பரம குறமகட் கினியநா யகனே. 4

துகளுறு பாபி யெனதிடத் தினினுந் துரிதம தாய்த்
தயை புரிந்தே. புகுபுகு வெனநன் மழைமிகப் பொழியப்
புரியருள் புண்ணிய ரிடத்திற், றகுதிருக் கருணை புரிதரில்
யாது தரும்புகழ் நினக்குநீ புகலாய், குகவிரு மூன்று முக
முடைப் பரம குறமகட் கினியநா யகனே. 5

சுகமுட னெனது வேட்கையை நிரப்பச் சுடர்வலி
யிலையெனச் சொலிலோ, நகமக டநய நினதுயர் மொழியு
நனியநி ருதமதே யாகுஞ், சிகிவல கவின்கொள் கரத்திற்சத்
தியினைத் திடமுடன் றரித்திடு மதனுற், குகவிரு மூன்று
முகமுடைப் பரம குறமகட் கினியநா யகனே. 6



காநக மதனில் வேடுவச் சிறுமி கண்டுகண் களிதரக்
கலந்தே, போனக மாகத் தேனையுந் தினையும் புசித்தருள்
குமரவேள் பதத்தை வானகங் குளிர்ந்து மழைதர விரை
வில் வரமுறு சங்கர குரவன், ருனகங் குழைந்து வழுத்திய
விதனைச் சபஞ் செயின் மழைதவா துறுமே. 7

விருஷ்டி ஷட்கம் முற்றும்.

---

## சுப்ரஹ்மண்ய தசகம்.

நனிசுர ரிறைவன் குமரியோ டரிய நகந்திரி சபரர்நா
யகனி, கனியுறத் தழுவு ஞாங்கர்மே யினனுங் கருணையின்
வாரிரா சியனும், வனசிகி கிரியின் சிகரியிற் சததம் வாசம
தியற்றுசீ லனும்வா, னசிசமின் பிணைமிக் கருள்வனு மான
வா றுமா முகன்றனைப் பணிவாம். 1

அளவறு மன்பா லன்பராற் றூர மதிற்கொணர்ந்
தெழின்முனம் வைத்த. வளமுறச் சமைத்த குக்குடா
திகளை வருகணம் புனரிவ னுயிராய்த். தெளிவொடுங்
கிளம்ப வெவன்புரிந் திடுவன் சிவனரி மகன்மரு மகனே,
டளிபொழி கரியின் றுணைவனன் னவனு மாறுமா முகன்
றனைப் பணிவாம். 2

நித்தியா நித்த வுணர்வொடும் விரத்தி நிறைசம முத
லவா றினையு, முத்திவேட் கையையு மென்பொருட் டருளி
முதிர்விசா ரந்தனிற் றிரமாம், புத்தியை விரைவி லருடரக்
குலிசன் புதல்வியும் வள்ளியுந் தழுவு, மத்தனி வபுவ
போற்றியுன் றனக்கென் று றுமா முகன்றனைப் பணிவாம். 3

நோயெலாங் கிருபைக் கடைக்கணின் சிறிது நோக்
கினு னெல்லையி னூக்கித், தூயதம் பதத்தைத் தொழுவரை
நாளுஞ் சுகமுறப் பாலநம் புரியு, மேயநன் மனைவி வாகநந்
தாசர் மிளிர்தரு சீடர்தம் முடனே, யாயக மரையி லநவர
தமுநா மாறுமா முகன்றனைப் பணிவாம். 4

மாமயூ ரத்தின் பத்திர மதனின் மகிழ்ந்துவை பாத வம் புயனே. யேமமற் றதன்றன் வென்றனிற் கருத்தொ டிருத்திய பாதபங் கயனைத், தாமவிங் திரன்றன் சுந்தரி யாலுந் தயைமிகுங் குறமக ளாலு, மாமிரு மருங்கு மொளிர்தர வொளிரு மாறுமா முகன்றனைப் பணிவாம். 5

உலகிறை யான வயனையும் யாவ னேமென றனைநனி வினவி, யலகுறு சிறையி லமருமா றுற்று மசைவிலா வாணையை யுடைய. திலகவா ணுதலா ரிருவருக் கினிய தேவனங் குரவனன் னவனு, மலகற வசிச மாநந்த மதனு லா றுமா முகன்றனைப் பணிவாம். 6

என்னுடைத் துகள்கள் யாவையும் பொறுத்தி யென்பதி லையமே யிலையீண், டுன்னொதுஞ் சகமா னன்றனக் குரிய வொருமக னுதிநீ யெதனுன். மன்னுறுங் கருணை யுததியே விபுவே மலையுறை யாறுமா முகனே யன்னையி னினியா யென்றந வரத மாறுமா முகன்றனைப் பணிவாம். 7

மயின்மிசை வலமொ டிடம்புடை யமர்ந்து மகிழ்ரம ணிமணி களினு, லொயிலொடு மிகநற் சேவைசெய் திடத்தன் னுளமகிழ் தானுமஞ் ஞையின்மேற், பயிறரு கருணைக் கடலையெஞ் ஞான்றும் பண்டைநன் மறைமுடி பகர்ந்தோ, யயிலிலை வேனங் குருபர வெனவே யாறுமா முகன்றனைப் பணிவாம். 8

தூவுடு பதியின் றரன்சுத னுகித் தூளெழக் கிரவுஞ்ச கிரியை, யாவசெய் தெளிய லீலையா லளவி லண்டமிங் காற்றியே யயன்முற். றேவர்கள் சேவித் தேத்துதற் கீர்த்தி செறிதரு செல்வனு முருக, னுவல்செய் பூதி யுதவுக வென வவ் வாறுமா முகன்றனைப் பணிவாம் 9

மதிமுகக் குறமின் சசிபதி புதல்வி மதிமரை மலரவே காலைக்,கதிரவ ராசி யாகியின் கருணைக் கரையறு கடலென வாகுங், கதியக தநயை மோதவா ராசி கதிர்த்தெழ வுலவு வெண் கதிரோ, னதிசய பூதி யருளுக வெனவவ் வாறுமா முகன்றனைப் பணிவாம். 10

குயத்தினைக் குறித்துக் குவட்டினை யிகழுங் குறமகள் பதத்தினு லேவி, நயத்ததைச்சி ரத்தி லிழைத்தெழிற் சசியி னலம்புனை பொலம்புரன் குமரி, புயத்தினைத் தழுவப் பதத்தினை வருடும் பூரணன் பதஞ்சக குரவ, னுயத்தனி வழுத்துந் தசகத்தைப் பரவி லுறுவதிங் குண்மையின் பொளியே.

இந் நவகம் தசக மாயது யாது காரணம் பற்றியோ வெனின் நவம சுலோக மானது பெரி தாதலின் இரண்டு செய்யுளா லமைந்தமையா னென்க. 32

*சுப்ரஹ்மண்ய தசகம் முற்றும்.*

குமர குருபர நாதன் துணை.

---

உ

ஸ்ரீ ஜகந் நாத பண்டித ராஜர் அருளிய,

# கங்கா லகரி.

மூலமும்—உரையும்.

---

சிந்துர வதந! செல்வச் சிறுவ! நின் றிருத்தாள் சேர்ந்த, மந்திர முநிவர் பொற்றுண் மகத்துவத் தூளி யன்றே: புந்தியிற் புகுந்த கங்கை பொலங்கழல் போற்று மாறு, சுந்தரத் துணைதா னல்ல சொல்வள னீவ தற்கே.

மங்கலம்.

நிகிலவுல கங்களுக்கு மிகவழகைப் பொழிசீர் நிகழ்த்து வதற் கரிதாகி யாடலென வெளிதாய், நிகிலமுழு வதும் பயந்த கண்டபர சுடையோன் நிருமலமன் மகத்தான செல்வமுமே யாகி, நிகமமுறும் விழுப்பொருளாய்ப் பொருணிறைந்த சுரர்க்கோ நித்தியமெய் யுடையதிருப் புண்ணியமே யாகும், நிகரறுநல் லமுதமென நிறைந்தசவுந் தரிய நின்சலில மமங்கலத்தை நீக்குகவெந் தமக்கே.

(உரை) ஹே கங்கா தேவியே! சகல புவநங் களுக்கும் அபார மான அழகைத் தரும் உரைத்தற் கரிய சிறப்பை யுடையதும், விளையாட் டாகச் சகல வுலகங் களையும் படைக்கும் பகைவரைத் துடைக்கும் பர சுடைய ஸ்ரீமந் மகா தேவரது அபரிமித செல்வமும, வேதம புகழும் நிறை தநமும் தேவர்க ளுடைய சரீர சகித தருமமும, அமுதம போலும் சௌந்தரியம் நிறைந் ததும் ஆகிய உன் னுடைய தீர்த்த மானது எங்க ளுடைய அமங்கலத்தை நீக்கி மங்கலம் செய்க. 1

[பிரவாக ரூப மாகத் தீர்த்தத்தைப் புகழ்ந்து, தங் கருத்தை வேண்டிக்கொள்ளல்.]

வறியவர் வறுமை தன்னையு மலிந வாதனை யுளர்பவத் தினையுஞ், சிறிதொரு முறையும் விழிநெறி படரச் சேய்மை யிற் செய்ததி விரைவில், செறியறி யாமை மரமறத் திக் கைத் தேசிக ரெனுகின தறலின், உறுபிர வாக மிஃதள விலதா முயர்விவண் செய்கவெந் தமக்கே. 2

(உரை) ஹே மந்தாகிநியே! தரித்திரர்க ளுடைய தைந்நியத்தையும், துர்வாசனையோடு கூடிய மாநத் தினர் பாவத்தையும், அவர் ஒரு முறை தரிசித்த மாத் திரையானே அதிவிரைவில் அதிதூரத்திற் போக்கி,



அவ் வாறே அவித்தை மரங் கெட வுபதேசிக்குந் தேசிகராய் வரும் உனது வாரிப் பிரவாக மாகிய இது இங்கு எங்கட்குக் கணக் கற்ற மேன்மையைச் செய் விக்கவேண்டும். 2

[தரங்க வடிவ மாகத் தீர்த்தத்தைப் புகழ்ந்து ஆசீர் வதித்தல்.

அரன்வெளிக் கபடங் கண்டுதி யருக்க னனையவைங் கரனை கடைக்கண், டிரமுறக் கணங்கொள் கலக்கமிக் கரன்றன் றிருமுடி தனிலலை வனவாஞ், சுரநதி சுரந்து பரந்தெழு மலைகள் சுந்தரி நின்பதம் பரவும், நரகுரு பவத் தைப் பயத்தினை யகற்றி நண்ணுக வெனக்கரு டாயே. 3

(உரை) அடியேனுக் கருளுந் தாயே! ஸ்ரீமந் மகா தேவரது வெட்ட வெளி யான வஞ்சகத்தை நோக்கி ஸ்ரீகணேசப் பெருமானது அன்னையின் உதய மான சூரியனைப் போற் சிவந்த கடைக்கண் சிறிது நிலைபெற வே, சிறிது நேரம் இருதயத்தி லுண்டாய கலக்கம் மிகுந்து சிவபிரான் றிருச் சிரசில் வாடி யாடும் நின்னி டத்தி னின்று முண்டாய அலைகள், உனது திரு வடி யைப் பணியும் அன்பர்க ளுடைய பாவத்தையும் பயத் தையும், போக்குக. 3

[நின்னைப் பற்றி யான் எல்லாத் தேவரையுந் துரும்பென நினைந்தேன, இப்போது நீ யெனக் கருள் செய்ய உபேக்ஷிக்கின் யான் யாவர் முன் னழுவேன் எனல்]

ஆதர முனைக்கொண் டிலங்கதி கருவ னுகியே யாய் விலா தமர, ரோதனை வரையு மவமதித் திருந்தே னுன்பதம் பரவுமிப் போழ்து, நீதிருக் கருணை செய்திலை யாயின் நிமலபா கீரதி யமுதே, ஆதர விலனு னம்மையே யந்தோ! அழுவதிங் கெவர்முனே யறையாய்.

(உரை) ஹே! பாகீரதி யாகிய தாயே! நின்னைச் சரணகதியாய்ப் பற்றி விளங்காநின்ற மிகக் கருவங் கொண்ட யான் விசாரஞ் செய்யாமல், எல்லாத் தேவர் களேயும் அவமதித்தேன்; இப்போது நீ கருணை செய்யா மற் கைவிட்டு விடுவையாயின், ஆதர வில்லாத யான் அந்தோ யாவர் முன் சொல்லி யழுவேன். 4

[*மீண்டும் பிரவாக ரூபத்தை நினைந்து பாவ நீக்கத்தைப் பிரார்த்தித்தல்.*]

அறஞ்செயாக் கொடிய ராயினு நினைக்கி னருக்கனல் லொளிக்குழு விருளைப், புறஞ்செயல் போல வுள்ளிருள் போக்கிப் பொன்னுல கெவருமே போற்ற, நிறஞ்செயு மறலின் வடிவமாய் நிகழு நின்றிரு வெள்ளமெய் மூர்த்தம், இறைஞ்சென துளத்தின் றழலேயும் பாவ வினத்தையுங் குனித்தரு ளுகவே. 5

(உரை) ஹே மந்தாகினித் தாயே! புண்ணிய மிய ற்ருத மகா பாதக ராயினும் சிந்திக்கின் சூரியனது கிரணங்களின் கூட்டமானது அந்தகாரத்தை நீக்குவதே போல, மனதி லிருக்கும் அஞ்ஞானத்தை நீக்கிச் சகல தேவர்களானும் பூசிக்கத் தக்க அழகு பொருந்திய நீர்மய மாகிய பிரவாக ரூப நின் றிவ்ய மங்கள மூர்த் தம் நின் றிருவடியையே தொழு மெளியே னுடைய மனத் தாபத்தையும் மன வாக்குக் காயங்களாற் செய் யப்பட்ட பாவத்தையும், நீக்கி யருளுக. 5

[*இராஜ்யத் தியாக பூர்வக மாக நினது கரையில் வசித்து, நினது தீர்த்தத்தைப் பானஞ் செய்தலா லுண்டா மானந்தம் தன் னினுங் குறைந்த இன்ப மாகிய மோக்ஷத்தைப் பரிகசிக்கின்ற தெனல்.*]



எனைத்தருந் திருவே! யெறிகட லாடை யிம்பரைப் புரந்தமன் னவரும், தனித்துரும் பெனமுற் றினும்விடுத் தரியாற் சலிக்கும்வஞ் சிக்கொடி படர்ந்த, பனித்திருக் கரையிற் றவம்புரி பவராய்ப் பன்னமு தினுமிகு சுவை கான், றினித்தநின் னீரைக் களம்வரை மாந்த வெழுஞ்சுக நகைக்குமுத் தியையே. 6

(உரை.) என்னை யீன் றருளிய மாதாவே! கடல் சூழ்ந்த பூ வுலகை யாண்ட மன்னவர், தம தர சியிற் கையைத் துரும் பென விகழ்ந்து அத்தியந்தம் விடுத்துக் காற்று லசைந் தாடும் வஞ்சிக் கொடிகள் சூழ்ந்து நிறைந்த நினது குளிர்ந்த கரையில் தவம் புரிபவ ராகித் தேவ அமுதினும் அதிக சுவையோடு கூடியிரா நின்ற மிக நின் மல தீர்த்தத்தைத் திருப்தி யாகப் பானஞ் செய்தலா லுண்டாம் இன்பம் மோக்ஷ இன் பத்தை நகை செய்கின்றது. 6

[*நேரே தான் றீர்த்த மாடாவிடினும், நின்பால் மற்றொரு சம்பந்தத்தால், தன் னவயவம் வீழின், அவைகட்கும் மே லான வுலக அடை வுண்டா மாயின் நேரே தீர்த்த மாடுபவர்க்குக், கூறவேண்டிய தென்னே யெனல்*]

அன்னையே புலரு முன்னரே தீர்த்த மாடிடு மரசசுந் தரிக, ளுன்னதத் தநத்தின் மன்னுமான் மதந்தா னுன் னுடன் விரவிய கணமே, அன்னவை கவின்வை மானிகர் நூறொரு டாயிரக் கணக்கினர் சூழப், பொன்னுடல் படைத் தின் னந்தந வநத்திற் புகுந்திடு மிச்சையின் வயமே. 7

(உரை) ஹே மாத! சூரியோதய மாகு முன்னரே தீர்த்த மாடும் இராஜ சுந்தரிகளின், மலை போன்ற முலை மேல் அணிந் திருக்கும் கஸ்தூரி முதலியவை, நினது தீர்த்தத்திற் கலந்த அந்தக் கணத்திலேயே, அக கஸ்

தூரி முதலியவற்றைக் கொடுத்த மிருகங்கள், அழகிய விமாநத்தில் வரும் நூ ருயிரக் கணக்கான தேவர் கூட்டம் சூழப் பொன் னுட லுடனே சிறப்புப் பொருந் திய இந்திரரது நந்தவநத்திற் புகுந்து இச்சைப்படி சஞ்சரிக்கும். 7

[ஒரு முறை நினைத்த போதினும் மநச் சாந்தியையும், ஒரு தரங் காநஞ் செய்த மாத்திரையானே, பாப சமுசார தாப நீக் கத்தையும், செய்விக்கும் கங்கை யென்னும் பதம் மரண சமயத் தில் எனது முகத்தி லுலவுக வெனல்.]

ஒருமுறை நினைத்த போதினு முளத்தை யொள்ளிய சாந்தம தாக்கி, யொருமுறை பிரிய காநமே புரியி னெல் லேயி லவம்பவக் கனறீர்த், தருள்செவி மடுப்ப வாநந்தந் தருவ தாகிய கங்கையென் பதந்தான். மரணம துறுமப் பொழுதினி தாக மரைமுகத் துலவுக தாயே! 8

(உரை) ஒரு தரம் நினைத்த போதிலும் மநச் சாந் தியையும், ஒரு முறை அன்போடுஞ் செபஞ் செய்யில் விரைவாகப் பாவத்தை சமுசார தாபத்தைத் தவிர்த் தலேயும், செய்வித் தருளாநின்றதும், கேட்ட மாத்திரை யானே செவிக்கும் மநதிற்கு மின்பந் தருவதும் ஆகிய, கங்கை யென்னும் பத மானது, உயிர் போகும் பொழுது இனிமை யாக எனது வதந தாமரையின்கண்ணே உலவிக்கொண்டிருக்கு மாறு, ஹே அன்னேயே நீ யரு ளல வேண்டும். 8

[இந்திரரது உத்யாந வநத்தைக் குறித்துக் காகங்கட்கும், மிகப் பிரிய மாகிய நினது கரை, யெனது சிரமத்தை நீக்கு மாற்ற லுடைய தாகுக வென வேண்டல்].

எக்கரை யிடையி லாடிடுங் காக வினமிக மகிழ்வன வாகிச், சொக்கவிந் திரரி னகரவா வுளத்திற் றொடர்புரு வசித்தலா னுலகர்க், கிக்கரு வடைதன் மரித்திட லிடரை



யெய்திடன் முதலன வேகும், அக்கரை நினதிங் கென திளைப் பகற்று மாற்றலே யடைகுக வனேயே. 9

(உரை) ஹே தாயே! எந்தத் தீரத்தின் மத்தியில் விளையாடாநின்ற காகக் கூட்டம் அதிக சந்தோடத் தோடு கூடின வாகி; இந்திரரது நகர இச்சையையு முள்ளத்தி லடையமாட்டாவோ, எக் கரையின்கண் வசித்தன் மாத்திரையானே உயிர்கட்கு ஜநநமும், மர ணமும், சோகமும், அடையமாட்டாவோ, அத்தகைய மகா மகிமை வாய்ந்த நினது தீர மானது ஈண்டு என் னுடைய சிரமத்தை நீக்கும் சமர்த் துடைய தாகுக. ஒரு கால் விமாநத்தில் வந்த இந்திரர் ஸ்ரீ கங்கா தீரத்தில் விளையாடும் காகங்களை நோக்கி நீங்கள் விளையாட என் னந்தந வநத்திற்கு வாருங்கள் என அழைப்ப, நாங்க ளிவ்விடத்திலேயே வசிப்போம் உமது வநத் திற்குவரோம் என்றன வென்பது ஸ்ரீ கங்கை புராணத் தின்கண்ணே வெளி யாம். 9

[யாவினும் மேலாயதும், வேதாதி யகோசரமும், ஆகிய பரசிவத்தை விடுத்து, நீ வாஞ்சித்த பயன் பெறுவதற்கு என்னை யே யேன் றுதிக்கின்றனே யெனின்? அத் தகைய சிவம் நீயே யாவாய், வேறு விடயங்க ளல்லே யெனல்.]

நேருறை மறையு நிகழ்த்திடா விருமை நிகழ்ந்திடா நிகிலரின் மநமு, மோருரை யதுவுந் தொழில்செயாத் தூய வோருரு வின்றியே யழியாப், பேரறு மெதுதன் மகிமை யாற் றமத்தைப் பெயர்த்திடும் பெருஞ்சுர ரமுதே. யேருறு மதுநீ யேயல திகழு மிவ்விட யக்கடு வலேயே. 10

(உரை.) சாக்ஷாத் வேதமும் கூறவொண்ணுத தும், பேதம் சிறிது மில்லாததும், சருவ உயிர்களின் மந வாக்கு வியாபாரங்கட்கு அவகாச மற்றதும், பரி சுத்த மாயதும், ஆகார மற்றதும், நித்திய மாயதும்,

பெயரற்றதும், ஆகிய எவ் வத்துத் தனது சுயம்பிரகாச மகிமையானே அஞ்ஞானத்தைக் கெடுக்குமோ, அவ் வழகிய வத்து. ஹே சுர ரமுத மாகிய தாயே! நீயே யாவாய், அஃதலாமல் இவ் விடய விடங்கள் நீ யாகா யெனல் திண்ணம். 10

*[யாவருக்கும் பொது வாக அத்தியந்தங் கிடைக்காத தாகிய ஸ்ரீ விஷ்ணு பதத்தைக் கொடுக்கும் நீ எவரோடு முவமிக்கப் படமாட்டா யெனல்.]*

அரிய தாநங்க டம்மினு னிட்டையா லரும்பல மகத்தானும், பெரிய வச்சஞ்செய் நிருமலத் தவந்தமாற் பெற்றிட முடியாத, விரியுஞ் சிந்திய மின்றிய விண்டுவின் வியன்பதந் தனைத்தாயே, சரிய தாகவீ யெவரொடிங் குவ மிக்கத் தக்கவ ளருணீயே. 11

(உரை) மகத் தாகிய தாநங்களானும், தியாநா திகளானும், அரிய பெரிய பல் வகை யாகங்களானும், பார்க்கப் பயங்கர மாகிய நின்மல மான தவக் கூட்டத் தானும், அடைவதற் கருமைத் தாய, அசிந்திய மாய, ஸ்ரீ மகாவிஷ்ணுவின் பதத்தை யாவருக்குஞ் சமாந மாகக் கொடுக்கும் உன்னை, ஹே அன்னையே! இங்கு யாவரோடு உவமிப்பது எங்கட்குத் தெரிய வில்லை நீயே கூறுவாயாக. 11

*[தரிசந மாத்திரையானே நகர்க்குச் சமுசார பயத்தைக் கெடுக்கும் நின்னை, ஸ்ரீ பரம சிவன் ஸ்ரீ பார்வதி தேவியாரின் அநுகூலத் தியாக வாயி லாக நிரந்தரம் திரு முடியிலேயே வைத்தருளி யுள்ளா ரெனல்.]*

கண்ட மாத்திரை யானுமே நரர்க்குறுங் கடும் பவப் பய நீக்குங், கொண்ட கோபத்திற் கோணிய வுமைக்கநு கூலமேல் விடு நீல, கண்டன் சீர்சிரத்



திடையறத் தரித்திடுங் கவினின்மெய் மகிமாவை, விண்டு பேசுவ ரெவரிவண் மங்கல விமலையே யெம தாயே. 12

(உரை) தரிசித்த மாத்திரத்தானுமே நர ருடைய சமுசார பயத்தை நீக்கியருளுவதும், ஸ்ரீபார்வதி தேவியார் மநதிற் கொண்ட கோபத்தானே வதநஞ் சுருங்கியும், அவர்க் குயர் வாகிய அநுகூலஞ் செய்வதை விடுத்து, ஸ்ரீநீல கண்ட ராகிய எந்தை தமது திரு முடியில் நிரந்தரம் வைத் தருளுவதும், ஆகிய நினது மங்கல மூர்த்தத்தின் மகி மையை யாவரே யெடுத் துரைப்பவர்? 12

*[உண்மைத் தாதிகளானும்,இகழத் தக்கனவும், பரிகசிக்கத் தக்கனவும், கூறக் தகாதனவும், ஆகிய பாவங்களையும் கெடுப் பவள் நீயே யெனல்]*

பித்தரு மிகவு மிகழ்வன பதிதர் பெரிதொறுப் பன விரத் தியரும், ஒத்துரை தருவ வல்லன புளகத் துடன் விடு வனபுற முரைக்கு, மத்தரு மளவி லுலகரி னள வின் மறங்களைத் திநஞ்சலிப் பிலாம, லித்தரை யிடையி லொருத்தியே நீக்கி யிலங்குவை யென்குறை பெரிதோ. 13

(உரை) உன்மத்தர்களாலும், மிகவு மிகழப்பட்ட னவும், இழோராலும் நீக்கத் தக்கனவும், பாமரராலும் பகரத் தகாதனவும், புறங் கூறுவோராலும், மயிர்ச் சிலிர்ப் புடன் விட் டொழிக்கப் படுவனவும் ஆகிய அள வில்லாத வுலகரின், அள வில்லாத பாவங்களை, நா டோறும் மநம் வெறுக்காமல், இப் பூவுலகின்கண்ணே நீ யொருத்தியே நீக்கி விளங்குகின்றனை யாதலின், என் னன்னையே! எனது பாவ முனக்குப் பெரிதோ. 13

[மண்ணின்கண்ணே இடர் களையும் பொருட்டுச் சுவர்க்க வுலகத்தினின்றும் இறங்கு முன்னைச் செஞ் சடையிற் றரித்த சிவ பெருமான் நிர்லோபரா யிருந்த போதினும், உன்னை மறைத்தலானே லோபியாய் விட்டமையின், நின் குணங்கட் கிஃதே ஒரு குறை யுள தெனல்.]

வானுலகி னின்றிடர்க ளைந்திடவும் வந்தனையிம் மண்ணு லகினீ, கூனிலவு செஞ்சடையின் புஞ்சமுடி கொஞ்சுதி புரஞ்சி தைவரான், கோனெதுவி ரும் பிலரு மம்பவுன்வி ரும்புறவு கொண்ட வதனுன், சானவிக ளங்கமிது பொங்கிநிழ றங்குனகு ணங்க ளினவே. 14

(உரை) ஹே சாநவி யென்னு மம்மையே! தேவ ருலகினின்றும் அவநி தலத்திற்கு சோகத்தை நீக்கும் பொருட்டு இறங்கி வந்த போது, புர மெரித்த சிவ பெரு மானால், சடா சூடக் கட்டி லகப்பட்டு, நன்கு கட்டுப்பட்டனை யாதலின், நிர்லோபத்தை யுடையவர் மநத்தும் உலோபத்தினை யுண்டாக்கும் நினது குணங்கட்கே, இத் தோடம் உண்டாகியிருக்கின்றது. 14

[யாவரையுங் காப்பாற்றும் ஆற்றலை யுடைய பரம ஔஷதம் நீயே யாகின்றனை யெனல்.]

செடரொடு குருடர் நொண்டியர் பிறவிச் செவிடர் க ளூமையர் கோளாற், படர்தரப் படுவர் பாவமே மிகுத்துப் பாறிட வழிபெறா தேவ, ரிடர்கெட முடியா தெனவிடப் படுவ ரிழிந்தவர் நரகினி லிவரைத், தொடரிவண் புரப்பப் பரமமெய் மருந்தாய்த் தோன்றினை யன்னைநீ போற்றி. யிடையி லொருத்தி யேநீக்கி யிலங்குவை யென்குறை பெரிதோ. 15



(உரை) அறியாதவர், கண்ணில்லாதவர், காலில் லாதவர், பிறவிச் செவிடர், ஊமையர், நவக்கிரக பீடை யுற்றவர், மகா பாதகங்க ளதிகரித்து. அவற்றை யகற்ற வழி யற்றவர், தேவர்களால், இவர் தம் இடரைக் கெடுக்க நம்மால் முடியா தெனக் கைவிடப்பட்டவர், எரிவாய் நரகில் விழுந்தவர் என்னும் இத் தன்மையரைக் காப்பதற்கு இவ் வுலகில் உயர்ந்த மருந்து நீயா யிருந்தனையாதலின், உன் பாதமே கதி யெனப் போற்றுவோம். 15

[கபில முனிவரது சாபத்தினாலே சாம்ப ராகிய சகர அரச ரின் மைந்த ராகிய சாகரர் நினது சம்பந்த வயத்தால் சுவர்க்கத் தில், திவ்ய தேகங்களைத் தரித்து, இன்றும் நினது மகிமையை, "அகோ அகோ தன்மை! வாழி நீடூழி ஜாநவித் தாய், அழிந்து போன எங்களை தமது திருக் கரத்தாற் றீண்டி இத் தகைய பாக் கியத்தில் வைத்தன ளன்றோ" எனப தாக நா டோறுந் துதிக் கின்றா ரெனல்.]

இயற்கையிற் றெளிந்து சகசசீ தளமா யெழில் செய்நின் புனலினைச் சகரர், புயற்கிறை யுலகிற் புக்கிருந் திரியாப் பொன்றெளி மேனிய ராகிச், செயற் கையை நினைந்து மிகுபுள கிதராய்த் திநமினு மகிழ் வொடும் புகழ்வர், அயற்கரை யறுமவ் வரையொணு மகிமை யவனியின் மலர்ந்திடு மனையே. 16

(உரை) ஹே அம்பிகையே சுபாவ மாகவே நிருமல மாகிச் சகஜ மாக சீதள மாகிய உனது தீர்த்தத்தை, மேக நாயக ராகிய இந்திரரது உலகம் புகுந் திருந்து வாழ்பவரும், கெடாத பொன் றெளி மேனி பெற்றவரும், அப் புனல் செய்த செற்கையை யெண்ணி மிகவு மயிர்க் கூச் செறிதலை யடைந்தவரும் ஆகிய, சகர ராஜாவின் மைந்தர் மகிழ் வோடு மின்றும் புகழ்கின்ற யா தொரு கரையு மில்லாத கூறுதற் கரிய அந் நினது மகிமை யானது, இப் பூ மண்ட லத்தில் ஜெயம் பெற்று விளங்குகின்றது. 16

அற்பப் பாபியரின் பாப நீக்கப் பொருட்டு, மூ வுலகிலும், அநேக தீர்த்தங்க ளிருக்கின்றன; பிராயச்சித்த மின்றிய மகா பாதக தோடத்தை நீக்குவதில், நினக் கொப்பாய் நீயே யாவா யெனல்.]

செயற்பினர் விரைவிற் செங்கனல் பரப்புஞ் சிந்தையர் சிறியபா வியரை, யுயப்புரி நதிகள் பலவுள மூவிவ் வுலகினின் மாற்றிடு நெறியே, அயற்பிற வாம லஞ்சுபர வியர்தம் மகங்கெட வளிப்பவ ரமை யே, கயற்பொலி யுனையொத் துன்னையே யலது கவின்பெற விளங்குவ ரெவரே. 17

(உரை) ஹே உலகீன்ற தேவியே! பாவஞ் செய்த பின் னுடனே மன மன விட்ட புழுவே போற் றபிக்குஞ் சிறிய பாவியரைக் காக்கும் பொருட் டிந்த மூன் றுலகத் தில் அநேக தீர்த்தங்க ளிருக்கின்றன;ஆனால்,யா தொரு பிரா யச்சித்தமுஞ் செய்ய முடியாத கொடிய பாவ முடையவர் தம் பாவம் போக்கிக் காத் தருள உன்னைப் போல நீயே யாவா யல்லாமல் வேறு யாவ ருள்ளார். 17

[அநேக குணங்களோடு கூடி யிருக்குக் தகைமையானே பாவத்தை மாற்றும் ஆற்ற லுற்ற நினது திருமேனி யானது, எனது பாவத்தையும் ஏகுமா றியற்றுக வெனல்.]

புண்ணியந் தமக்குத் தானமா யெஃதோ புதிது காண் முதர்தமக் குதவி, யொண்ணதி தமக்குண் முக் கிய மாய்மூன் றுலகினுக் கமலமார் கலையாய், நுண் ணிய மதியிற் கற்பனை நூறி நுணங்கிய மதிக்கரி தாகி, யுண்ணிதி யளித்துக் காக்குமுன் மேனி யொருங்கென தகமகற் றுகவே. 18

(உரை) தருமங்கட்குத் தானமும், புதி தாக வந்து தரிசனம் புரிபவர் மனத்திற் சொல்ல முடியாத அற்புதத்தை விளைவிப்பதும், தீர்த்தங்களுக்குள் முக்கியமும், மூ வுல



கினுக்கும், நிருமல மாகிய வத்திரம் போன்றதும், மதிக்குச் சமாதானஞ் செய்விப்பதும். குமதிக்குத் தரிசன மாத்திரமு மிலாது மறைவதும், இலக்குமியைத் தேடித் தருவதும், ஆகிய உனது திரு மேனி யானது, எனது தாப மாகிய பாபத்தை யகற்றி யருளுக. 18

[காரியப் பற்றுனே, நினது பிரி வுண்டாயது, இஃ தென தபராதமே யாம் எனல்.]

தனநறை மாந்திச் சுழல்விழி யிறைவர் தங்கண்முன் னோடிமிக் கோடி, யினவனற் கொடிய துயருழன் றநிச மிருக்குமென் னுடையதே மாசா, மெனதிதஞ் சதங் கொன் றுணர்விலா மதிய னெழின்மிகு நினைப்பிரிந் திருந்தேன, இனியிறை யேனுந் தயைசெயல் வேண்டு மென்றனை யீன்றவ ளன்றோ?.

(உரை) திரவிய மாகிய கள்ளைக் குடித்துச் சுற்று நின்ற கண்களை யுடைய மன்னவர் முன் பாகக் கை கட்டி யோடி யோடி அநேகங் கொடுந் துய ரடைந்து நிரந்தரம் வாடு மெனது தோடமே யிது வாகும்; அடியேனுக்குக் கிடைக்கும் அநேக இதங்களையு மிழந்து, அவிவேக மதிய னாகிய யான், அழகு பொருந்திய உன்னைப் பிரிந்திருந்தே னன்றோ! இனிக் கணமேனும் தயை புரிய வேண்டும், நீ யென்னைப் பெற்ற தா யல்லவா? 19

[முன்னர் தயை செய்யவேண்டு மெனப்பட்டது, இப் போது, எவ் விடய மாகிய தயை யென அவாவின், நின் தீர்த்த மானது அடியேனது மறு பிறப்பையே தூரத்த தாக்குக வெனப் பிரார்த்தித்தல்.]

வேறு.

வாயு லீலைசெய் லோல லகரியால் வாச லீலை கொள் வாரிச ராசியீ, தூய தூளியி ராசிகண் மேனி யிற் றேய நீடொளிக் குங்குமக் காந்திசேர், தாயர் வானவர் தந்தனந் தந்தகார்ச் சந்த நக்குழம் பாற்சடி லப்படுஞ், சாயை சைவலஞ் சார்ந்ன தந்தணீர் சன்ம சாலமெ னதறச் சாடவே. 20

(உரை) வாயுவி னுடைய விலாசத்தானே சஞ்சலப் படும் அலைகளால் அலையுந் தாமரைக் கூட்டங் கொட்டும் மகரந்தங்கள் திருமேனியிற் றேயப் பெற்று விளங்காநின்ற குங்குமப் பிரகாசத்தோடு கூடியதும், வா னுலகத் திருக் குந் தாய்மார்கள் மார்பி லணிந்த கருஞ் சந்தநக் குழம்பு கள் வீழ்ந்து சே றாக இருப்பதும், படர்ந்த பாசிகள் நிறைந்ததும் ஆகிய நினது குளிர்ச்சி பொருந்திய தீர்த்தம் எனது ஜநநக் கூட்டத்தை முற்றினும் நீக்கி யருள்க 20

[உற்பத்தி வாசத் தான விசேடத்தானும், தொழில் விஷே டத்தானும், உலகைக் குறித்து உனக்கு மேன்மை யுள தெனல்.]

உதயமோ பதுமை முதன்பத பதும வொலிமல மில நக மிருந்தாம், வதிதலோ மதன்றன் மதநன்செஞ் சடையில் வனைதரு புநிதமேன் மாடி, அதரொடு பதித ரவர்தமைப் புரத்த லகர்நிசந் தொழிலிது வாயின். எதுதனு லுலகி னின்றுநின் மேன்மை யெழில்பெரு திருந்திடும் தாயே. 21

(உரை) இலக்குமியோடு இரமிக்கும் ஸ்ரீ மகா விஷ்ணு வின் பாத தாமரையின் புகழும், நிர்மல நகங்களினின் றும் உண்டானுய், மந்மதனைப்பொடி செய்த கருணாநிதியின் செம் பவளச் சடையின் கட் டாகிய மேன் மாடி வீட்டில் வாசஞ் செய்கின்றுய். பிராயச் சித்தஞ் செய்யமுடியாத மகா பாதகர்களையுங் கடைத் தேற்றுவதே தொழி லாக



இருக்கின்றுய்; ஆகையால், எக் காரணத்தா லுலகினின் றும் உனது மேன்மை யழகு பெருதிருக்கும்; மற்றே, தாயே! அவசியம் அழ குடையதே யாம். 21

[சிவ சிரசி லிருப்பவளும், மாதவன் பாதத்தி லுதித்தவளு மாகிய நினக் குவமையாக எந் நதியும் இல்லை யெனல்.]

மலைதனி லிருந்து மலர்ந்திடு மளவின் மாநதி தம் மினுட் புரத்தை, யிலகெரி விருந்து செய்தவன் சடையி லிடங்கொடு நின்றதிங் கெதுதான், அலைமகள் கொழுந னம்புயத் தாளை யம்பிரு லலம்பிய தெதன்கண், டிலக பண் டிதர்நிற் றுலையிறை தருவர் திவமுறுஞ் சிவை யெனு மனையே. 22

(உரை) பர்வதங்களினின்று முண்டாகி வராநின்ற அள வில்லாத நதிகளுக்குள் திரிபுர தகநன் செஞ் சடை யில் வசிப்பது யாது? இலக்குமி நாயக ருடைய பாத தாம மரையைத் தீர்த்தத்தால் அலம்புவது யாது? எதன்கண்ணே நின துவமாநஞ் சிறிது பண்டிதர்களாற் கொடுக்கப் படுமோ! ஹே தாயே; அத் தகைய மகிமை வாய்ந்ததே கிடையாது. 22

[ஹே தாயே! மநோ ரதங்களைக் கொடுப்பவள் நீ யிருப்பப், பிரஹ்மாதி தேவதைகளாற் பயனே யின் றெனல்.]

சங்கையற் றெலையில் சமாதியை விதிதான் சந்த தஞ் செய்குக வரிதான், பொங்கர வதனிற் றுயிலுலக வினிதாய்ப் பொதுவினி னிரந்தர நடநம், இங்கரன் புரிக மாற்றிடும் வினைக ளியற்றலென் றவமகந் தாநந், தங்குல கனைநீ விழைவுகள் விளைத்துத் தரணியில் விழித்திருந் திடவே, 23

(உரை) பிரஹ்மா வானவர் சங்கற்ப மெதுவு மில்லாமல், நிருவிகற்ப சமாதியிலேயே யிருக்க லாம், ஸ்ரீமகா விஷ்ணு வானவர் ஆதிசேடன் மேற் கவலை யில்லாமற் றுயில லாம், எந்தையோ சிற் சபையில் சந்ததம் ஆநந்த நடநமே செய்க, பிராயச்சித்தங்களும் தவமக தாநங்களும், செய்யவேண்டுவது தான் என் னிருக்கிறது; ஹே மாதாவே! நீ யிவ் வுலகில் விரும்பியவற்றை யெல்லாங் கொடுப்பதற் குச் சாக்கிரதையா யன்றோ இருக்கின்றாய். 23

[தீநன் என்ப தாதி விசேஷணங்களோடு கூடிய யான், நேய மிக நிறைந்தவள் நீ, யென் பதாதி விசேஷணங்களோடு கூடிய நின்னை யடைந்தன னாதலின், நீ நின் பெருமைக்குத் தக்க வாறு செய்தருளெனல்.]

தீனனு னேய மிகநிறைந் தவணீ திக்கிலன் சிவ பதந் தருவோ, யீனனு னுலகை யேற்றுவை பிணியா லிடருவன் சித்தர்மெய் மருந்தே, பாநமே விரும்பி யரும்புள னமுதப் பரவையாய் குழவியா னனைநின், வானுலாம் வநசம் வணங்கிவந் தனனுல் வழங்குதி வரஞ்சிறு வனுக்கே. 24

(உரை) யான் றீனன், நீயோ நேய மிகவும் நிறைந் தவள்; திக் கற்றவன் யான், நீயோ சிவ பதங் கொடுப் பவள்; யான் தாழ்ந்து வீழ்பவன், நீ யுலகை யீடேற்று பவள்; நோயாள் யான், துன் படைந்தவன், நீயோ சித்தர் மருந்தா யிருக்கின்றாய். தாகத்தாற் றகிக்கப்பட்டுத் துய ருறு மநத்தன் யான், நீயோ அமுதக் கடல்; தா யாகிய உன்னைக் குழந்தை யாகிய யா னடைந் துளேன், ஆதலின், நல்ல மேன்மையை நா யடியேற்கு நல்குவா யாக. 24

[எது முதற் கொண்டு நினது கதை பூலோகத்திற்கு வந்த தோ, அது முதலாக எம புரிக் கலகலப்பு ஒழிந்து போயிற்று, யம தூதரோ தூர தேசஞ் சென்றுளார், விமாநங்களோ தேவ வீதிகளைச் சித றடிக்கின்றன வெனல்.]



நமன்புரிக் கோலா கலநிறை வொடுங்கி நடந்த னர் சேய்மையிற் றூதர், சுமடரெங் கேனு மிறப்பதைத் தேடிச் சுவர்க்கவீ தியைவி மாநங்கள், சமைவற நெருக்கி நிறைந்திடுந் தரணி தனினின தருள்வர வுருவே, யெமினருள் சுரந்த வெழிற்கலி யாணி யெங்கு நின் கதைநிகழ்ந் திடவே. 25

(உரை) எம னுடைய பட்டணத்திற் கோலாகலமே நின்றுவிட்டது. எம தூதரோ தூர தேயத்தில் எப் பாவியா ரிறப்ப ரெனத்தேடப் போய்விட்டார். நின்பால் ஸ்நாநம் செய்பவர்களின் விமாநங்கள் தேவ வீதியில் நெருங்கி நிறைகின்றன, அடியேன் பேரிற் கிருபை வைத்தருளும் ஹே கல்யாணியே! இப் பூமியின்கண்ணே நீ யெப்போது வந்தனையோ, உன் கதை யெவ் விடத்தும் எக் காலங் தொடாங்கி நடக்க லாயதோ, அப்போது மேற் கூறியவை மாத்திரந் தானே நடந்தவை, அள வில்லாதன வாம். 25

[நினது ஜல கணங்கள் காமக் குரோதத்தா லுண்டாய சுரத்தாற் றகிக்கப்பட்ட சரீரங்களை யுடைய எமது சந்தாப சாந்தியைச் செய்தருளுக வெனல்.]

இலங்கிழி காமஞ் சினமிக மிகலா லிருஞ்சுரச் சுடர்க்குவா லெரிப்ப, மலங்கெழு காய மருவெம தநிச மாற்றுதற் கரியசந் தாபம், பலங்கிளர் வாயு வுறவெறி யலையின் பரம்பரை யெழுந்தநீர்க் கணத்தி, னலங் கிளர் தேவ நதிநின தணிகள் நகர்நதிடப் புரிந்தரு டாயே. 26

(உரை) விளங்காநின்ற இழி வாகிய காமம் கோபம் மிகவு மதிக மாதலால், பெருஞ் சுரத்தினது சுவா லையின் கூட்டத்தானே எப் போதும் எரிக்கப்பட்ட சரீரங் களை யுடைய எமது கெடுக்க முடியாத சந்தாபத்தை, வாயு

வேகத்தா லுல்லாச முற்ற திவ்ய நதியின் அலைகளின் பரம் பரையினு லெழுந்த நீர்க்கண வரிசைகள் மாற்றிவிடுமா றருள் செய்க: 26

[முன்னர் நீர்க் கணங்கள் சந்தாபத்தை மாற்றுக வெனப் பட்டது, இப் போது தாப மிகுதியா யிருத்தலினுனே, கணங் கள் எவ்வாறு மாற்றுதல் கூடு மெனின், நினது தீர்த்த வெள் ளம், எமது தாபத்தைச் சாந்திப்படுத்துக வெனப் பிரார்த்தில்.]

புவநமுற் றினுக்கு மின்பவீ டதுவாய்ப் புகலுமிப் பிரமனு ரண்டகந், தவமுறுந் தரங்கந் தம்மொடெப் புறத் துந் தவழ்ந்திடு மெதன்கட்டும் பையைப்போற், சிவன் விரி சடைசெய் குடில்படர் நினது சிந்துரப் புனற் பெரும் பாகந், தவமுற வெனது தாபமே தணித்துத் தயவுடன் காக்குக தாயே! 27

(உரை) ஹே அம்மையே! சகல புவநங்களுக்கும் இன்ப இல்ல மென்னும் இப் பிரமாண்டம் அலை கடலோ டுந் தும்பையைப் போ, லிங்கு மங்குமா யெதன்கண்ணே யுருளுமோ, அத் தகைய பரமசிவனது சடை மாளிகையில் வாசஞ் செய்யும் உனது செம் புனல் வெள்ளம், எனது தவம் வளரத் தாப நீங்கத் தய வாக அருள் புரிதல் வேண்டும். 27

[ஹே குழந்தாய்! வேறு தீர்த்தங்களும், ஸ்ரீ மகாதேவர் முதலிய தேவதைகளும், இருப்ப அவரை விட்டு என்னையே யேன் றுதிக்கின்ருயெனின், தீர்த்தங்கள் என்னைக் காக்க வெட் கின்றன, ஸ்ரீமகா தேவர் முதலியவரோ, காதை மூடிக்கொள்ளு கின்றனர். நீயோ தா யாதலின் தயையினுனே, என்னைப் புநித ஞக்கி, அவர்களது பாப நாச அபிமாநத்தை யழிப்பா யாக வெனல்.]



புகழ்பெறு நதிகள் விரைவினி னேக்கிப் போவென வெட்கின வெனதோ, ரிகழ்பவந் தவிர்ப்பச் சிவன் முதற் றேவ ரிருசெவி புதைத்தனர் கரத்தால், நிகழுமிவ் வெனைநின் கரங்கொடு புநித நிகழ்த்திமற் றனைவரும் பவத்தை, யகழ்தருந் தருப்ப மகற்றுதி யெனையா ளளி வளர் குளிருளத் தனையே. 28

(உரை) உலகிற் புக முற்ற தீர்த்தங்கள் யாவும் மகா பாவியாய என்னைநோக்கி அதி விரைவிற் போ போ வென வெட்க முற்றன; தேவரோ, எனது ஒரு பாவங் கெடுக்க வேண்டு மெனத் திருக் கரத்தாற் றிருச் செவியைப் பொத் திக்கொண்டனர். தயையே திருமேனி யாகிய அருட் சத் தியே! நீ தா யாதலின், அடியேனைப் புநித னுக்கி, மேற் கூறியவர்க்குப் பாவத்தை யகற்றுவோ மென்னுங் கர் வத்தை யகற்றுவிப்பா யாக. 28

[அள வற்ற ஐ யுறவானே பாபாசரணத்தினின்றும் நீங்கிய சண்டாள சமுதாயங்களாலும், விடப்பட்ட பாவக் கூட்டம் நிறைந்த என்னைப் புநிதஞ் செய்ய முயலும் உன்னைத் துதிப் பான் நர பசு வாகிய யான் எங்ஙனம் ஆற்ற லுடையவ னுவேன் என அகங்கார நீக்க வாயி லாகக் கூறல்.]

புலையர்தங் குழுக்க ளளவிலை யுறவாற் பொக் கென வகன்றுவிட் டொழித்த, மலைதரு பாவக் குவிய லுக் கிடனுய் மடையனே னெருவனே யிருந்தே. யலை யெனை யம்ம! வருள்செய முயன்றிங் கருகுறு மன்னை நின் னருளின், கலையிசை யிசைப்ப வெங்ஙன மாற்றற் கதுவுவன் நரபசுக் கடையேன். 29

(உரை) சண்டாளர் கூட்டங்களும் அநேக சம்சமயங் களடைந்து விரைவில் விட் டொழித்த பாவக் கூட்டங் களுக்கு இட மாக மடைய னுகிய யா னெருவனே யிருந்தே

யலைந்தேன். அற்புதம்! அற்புதம்!! அத்தகைய எனக்கும் அருள் செய்யவேண்டும். என் றுத்தேசித்து வந்த தா யாகிய உனது திருவடியின் வேதம் புகழ் மகிமையைக்கூற நர பசு வாகிய நான் எங்ஙனஞ் சமர்த் துடையவ னுவேன்.

*[மகாமகா பாதகன் எவனேனு மொருவனைக் காத்து, உலகிற்கு ஆச்சரியத்தை யுண்டாக்கவேண்டும் என் றுனக்குப் பேரவா விருந்தது, அது இது காறும் அத் தகைய பெரும் பாதகன் கிடைக்காமையின், பூர்த்தியாகாம விருந்தது, யானே, அவ் விச்சையைப் பூர்த்தி செய்ய வந்துளே னுதலின், என்னைக் காத்தலால், உன திச்சையை நிறை வேற்றிக் கொள்ளலா மென வேண்டல்.]*

இத்துணை ஞான்று நெடியநாட் டொடங்கி யியைந்தில னெவன்றனைப் புரககின், இத்தரை யூழி யற்புத நிறையு மெனும்விழை வுளந்தனி னெடுநாள், வைத்துருந் தனையின் றடைந்தன னடியன் வளர்பயன் வழங்குற வெனையாள், சுத்தசிற் பரம சோதியே தாயே சுகந்தனை யுகந்திட வருளே! 30

(உரை) நெடு நாண் முத லிது காறும் எவனைக், காத்தால், இவ் வுலகம் பல் லூழி காலம் அற்புதத்தை யடையுமோ, அத் தகையன் கிடைத்திலனே என்னும் ஆசை நின் மநத்தில் நெடுநா ளிருந்ததன்றே, இன் றத்தகைய னுகிய யா னடைந்திருத்தலின், என்னை யாட்கொண்டு இன்பத்தை யீயின், நின் னுசை பய னுடையதாய் விடும், சுத்த அறிவு வடி வாகிய ஜோதி யாகிய தாயே! இச் சமயத்தை விட்டுவிடவேண்டாம். 30

*[என தநேக துஷ்ட குணங்களைக் கேட் டுன்னை யலது மற்றெவரும் எனது முகத்தையும் பாரார் எனல்.]*



நாயென வுழன்று திரிந்தனன் பொய்யே நவின்றிடுந் தன்மையன் குதர்க்கம், போயுறப் புரிவ னிரந்தரம் பிறரைப் புறஞ்சொல வெண்ணிணைந் திடுவேன், சீயெனு மெனது குணகண மிதனைச் செவியினிற் பன்முறை கேட்டுத. தாயுனை யலது யாவரென் வதநந் தையையுட னேக்கினர் கணமே. 31

(உரை) ஹே தேவியே! நாயைப் போல நிரந்தர மலைந்து திரிவேன், பொய்யையே யெப் போதுஞ் சொல்வேன். எங்கும் போய்க் குதர்க்கமே செய்வேன், பிறரைப் புறங் கூறுவதற் காய சிந்தனையையே நிரந்தரஞ் செய்வேன். இத் தகைய கீழான எனது குணங்களைக் கேட்டுக் கேட்டுத் தா யாகிய உன்னை யல்லாமல் வேறு யார் சகித்துக்கொண்டு. என் முகத்தைப் பார்ப்பர்; உன்னை யன்றி யொருவரும் ஒரு கண மேனும் பாரார். 31

*[எம் மநுட னுடைய விழிகளானே பரம ரமணீயமான நினது திரு மேனி பார்க்கப்பட வில்லையோ, எவனது செவிகளானே நின் தலைகளின் கோலா கலங் கேட்கப்பட வில்லையோ, அவனது விழிகளும், செவிகளும், வீண் எனல்.]*

நின்பரம ரமணீயத் திருமேனி தனைநிதமு நெகிழ்ந்து நாடாத், தன்பரந்த விழியானே தரணியின்க ணென்ன பயன் றரங்க லீலை, யின்பெரிய கலகலப்பைக் கேளாத விருசெவிக ளிருநது சீயென், இன்பமறு மப்பிறவி பயனிலையா லடியேனை யீன்ற தாயே. 32

(உரை) ஹே என்னை யீன் றருளிய அன்னையே! உனது மே லான அழகு வாய்ந்த திரு மேனியை யுருகிக் காணுத கண் ணிவ் வுலகி லிருந்து பய னென்னே! அலைகளின் லீலைகளின் மிகுந்த கல கலப்பைக் கேளாத செவி யிருந்தும் சீசீ யென்ன பிரயோசநம்! அந்த ஆநந்த மநுபவியாத பிறப்பே வீ ணன்றே. 32

[புண்ணியம் பண்ணுவோர் விமாநங்களி லிஷ்டப்படி அமருல கடைவர், பாவியரோ பரவய ராகி நரக மெய்துவர் என்னு மிவ் விரண்டு பக்ஷங்களும் நீ யில்லாத விடத்திலேயே யாம், சருவ பாவங்களையும் நீக்கும் நீ யிருக்குமிடத்திலோ, பாவிய ரில்லா மையின் முதற் பக்ஷமே யா மெனல்.]

அறம்புரிவர் சுரபுரத்தை விழைவின்வழி விமாநமதி லணுகி வாழ்வர், மறம்புரிவர் நரகமதின் மடிந்திடுவர் பரவயராய் மலரிப் பேதங். குறும்புசெறி மங்கலமில் புரங்களிலா மெம்மருங்கிற் குயிற்று லீலை, வெறுமபதகர் நிறைமறத்தை வெறுத்திலையால் கறுத்தவிழி விரித்த தாயே?. 33

(உரை) புண்ணியர் சுவர்க்கத்தை யிச்சைப்படி விமாநத்திற் சென்று வாழ்வர், பாவியர் பரவயப்பட்டு நரகத்தில் துயரப்படுவர் என்னும் வேற்றுமை பாவிய ரிருக்கும் தேயத்தே யாம்; ஏ னெனின், மை யணிந்து கருணை நிறைந்த திருக் கண்களை யுடைய தாயே! ஆண் டுனது லீலை மகா பாதகரது பாவத்தை வெறுக்காம லிருக்கின்ற தன்றோ. நீ யிருக்கு மிடத்தில் பாவமே யில்லை. 33

[எல்லா மகா பாதகர்களுமே மரண சமயத்தில் நின்பாற் சரீரத்தை விடுத்தவரா யுத்தம லோகத்தை யடைவ ரெனல்.]

அந்தணர் தமையே கொல்பவ ரநிச மருங்குரு மனை மகட் புணர்வோர், நிந்தைவெண் ணறையைப் பருகுவர் மறித்தும் நிகழ்கந கங்கள விடுவோ, ரிந்தமெய் விடுத்து நின்வயி னளவி லின்கொடை யொடுமகம் புரியு. மந்த ணர்க் குயர்ந்தங் காடுவ ரமர ரனை வரும் புகழ்ந்திட வனையே. 34

(உரை) ஹே மந்தாகினியே! நிரந்தரம் பிராஹ்மணர் களையே கொல்பவர், ஆசிரியர் மனைவியையும், மகளையும் தழுவுபவர், கட்குடிப்பவர், பொன் றிருடுவோர் என்பவர்



நின்பாற் றேகம் வீழ்த்திப் பெருந் தாநத்தோடுகூடி யாகஞ் செய்யும் பெரியோர் செல்லு முலகிற்கு மே லுலகி லிருந்து தேவர் போற்ற விளையாடிக் கொண்டிருப்பர். 34

[பெருந் திருடனும், மநுட ருயிரை வாங்குபவனும், ஆகிய வாயுவும், உன் னலைச் சம்பந்த மகிமையானே முப் புவநத் தையும் புநித மாக்குவன் எனல்]

பெறுவதற் கரிய மலர்கண்மா மணத்தைப் பெட் பொடுங் கவர்ந்துபெண் பிரிவா, லறுவகை யுளத்த ருயிரையுங் கணத்தி லரித்திடு மநிலமு நினது. குறை வறு லீலை தனினசை தாங்கக் கூட்டுற வாற்றிரி புவந, நிறைவுற விரைவி லககநற் புநித் நிதம்புரிந் திடுஞ் சுதை நிதியே. 35

(உரை) எவர்கட்கு கிடைத்தற் கரிய புஷ்பங்களின் மகா மணத்தை அழகோடு திருடி, மனைவியின் பிரி வாகிய வா ளாயுதத்தால் அறுக்கப்பட்ட மனத்தர், உயிரையும் நொடியி லுறிஞ்சும் வாயு வானது, உனது குறைவில்லாத விளையாட்டா லசையும் அலைகளின் சம்பந்தத்தால் முப் புவந மெங்கும் விரைவில் ஆச்சரியம்! ஆச்சரியம்!! ஹே அமுத வடிவத் தாயே! அநுதிநமும் பவித்திரஞ் செய்யும். 35

[சிலர் பிறர் காரியந் தேடுபவர், சிலர் புநித ராகிப் பரலோ கந் தேடுபவர், அடியேனோ, இரு உலக பாரத்தையும் உன்மே லேற்றிவிட்டுச் சுக மாகத் துயில்வே னெனல்].

சிற்சில ரிருப்ப ரிகவுல கதனிற் றிநமனும் பொருட் பயன் புரிவோர், சற்சநர் சிலவ ரகம்புறங் கழீஇச் சார்தரப் பரவுல கிருப்பர், துற்சநச் சகந்நா தன்னெனு மெளியன் றுரிதமா யுலகிரு சுமையைச், சிற்சுக நினில் வைத் துன்றிரு வருளாற் செல்வமே துயிலுவ னினிதே. 36

(உரை) சிலர் இக லோக காரியம் பிறர்க்குச் சாதிப்பர், வேறு சிலர், உள்ளும் புறம்பும் தூய்மை யுற்றுப் பரலோகம் வேண்டுவர்; துற்சுந ஜகந் நாத ஞகிய யானே இரண் டுலகின் பாரத்தையும் நின் னிடத்தில் வைத்துவிட்டு நினது திரு வருளால் சுக மாகத் துயிலாநிற்பன், ஹே செல்வ அம்மையே! அருளுதி. 36

*[ஹே குழந்தாய்! பாவ நீக்கப் பொருட்டு என்னைத் துதிக்கின்றனையே, ஆதியிற் பாவமே செய்யாதிருக்கலாமே, என் செய்தா யெனின்? நின்பால் விழுந்த பிணத்தின் அவயவம் யாவற்றையும் நீ காக்கின்றதே போல, நானும் பாவத்தைச் செய்கின்றேன்; இயற்கையை விடுதல் யாவருக்கும் முடியா தெனல்.]*

**பாமர ரதமர் பதந்தனில் வீழிற் பரகதி தருநினக்**
**கருளாற், சாமனுஞ் சவத்தி னவயவம் புரக்குஞ் சத்தி**
**யல் பெறிந்திட முடியா, தாமென வெனக்கு மவக்குழு**
**வதநி லன்பெழு மம்பவிம் பரினி, லோமெவ ரானு மிவ்**
**வியல் பொழிக்க வொண்ணுமோ கண்ணினுண்**
**மணியே!.**
**37**

(உரை) பாமரர்களும், மகாபாதகரும், திரு வடியிற் பணிந்த மாத்திரையானே பரகதியைத் தரும் உனக்குத் தயையாற் பிணங்களின் அவயவம் உன்பால் வீழ்ந்த போதினும், காக்கும் நல் லியல்பை விடமுடியாததே போல, அடியேனுக்கும் பாவக் கூட்டத்தி லன் புண்டாகின்றது. இவ் வுலகத்தில் உறுதி யாக எவரும் இயற்கையை விடுதல் கூடுமோ. 37

*[ஸ்ரீ கங்கையின் குணடவத்தை வருணித்துத் தனது தாப சாந்தியை வேண்டல்.]*



**பொறிபிர தோட வேளையி னடிக்கும் புரமத நன்**
**றிரு லீலை, யெறிசடைத் தடத்தில் வீழ்தலொற்**
**றுமையா லேகிடுந் தரங்கமெய்ப் புயங்கள், நெறியுற**
**நீண்டங் காடிடத் துளையுண் ணெகிழ்ந்திடு நீர்த்துடி**
**யொலியோ, டிரைவிசெய் நடந மெங்கள்பே ரெரிவை**
**யிரித்துயர் பரத்தைநல் குகவே.** **38**

(உரை) இலக்ஷ்மீகர மாகிய பிரதோடத்தியல் ஆடும் புராந்தகன் திரு லீலை யானது, மேலே வீசும் சடைத் தடத்தில் வீழ்தல் வடிவ சம்பந்தத்தானே செல்லும் அலைகளே புயங்களின் நீட்சி யாடல் ஆகவும், துவாரங்களிற் செல்லும் நீர், உடுக்கை யொலி யாகவும், ஸ்ரீ கங்கா தேவி செய்யும் நடநம், எங்களது பெருந் தாபத்தைக் கெடுத்து உயர்ந்த பரம் பொருளை நல்க வேண்டும். 38

*[எப்போதும் நின்பாலே என் குசலச் சிந்தைப் பாரத்தை வைத்திருந்த என்னை, நீ இவ் வாபத்துச் சமயத்தில் விட்டு விடுவாயாயின், இனி மேல் திரி புவநத்தும் நின்பால் விசுவாசம் எவருமே செய்யார், நின் கருணையும் ஆதர வின்றிய தாம், என ஸ்ரீ கங்கைக்குப் பயத்தை யுண்டாக்குதல்.]*

**எப்பொழுது நின்பாலே யென்குசலச் சிந்தைபர**
**மேற்றி வாழ்ந்தேன், இப்பொழுதிவ் வாபத்தி லென்னை**
**யன்னை நீவிடினே யினிதிவ் வன்பு, மிப்புவந மூன்றி**
**னின்று மகன்றேடும் வஞ்சகமி லெழில தான, மைப்**
**படிந்த கட்கருணை மருவலின்றிப் பொன்றிடுமான் மாசி**
**லாளே.** **39**

(உரை) எப்போதும் உன்னிடத்திலேயே என்னுடைய யோக க்ஷேம பாரத்தை வைத்து வாழ்ந்து வந்தேன், இவ் வாபத்துக் காலத்தில் என்னை அன்னையே நீ கைவிடின் இந்த விசுவாசமும் மூன்று புவநத்திநின்றும்

அகன் ரேடி விடும், நிஷ்கபட மான நினது கருணையும் பற்றின்மையினலேனே அழிந்துபோய்விடும். ஹே மாசில்லாத தாயே! நினக்கு மாசுறல் தகுதி யல்ல. 39

[சிவ பெருமானது வாம பாகத்தில் மற்றொரு மடந்தை வைகின்றவள் யாரென நோக்க விரும்பிச் சடைக் கொண்டையி னின்றும் சிகை வழியா யிறங்கி யதனலேனே ஸ்ரீ பார்வதி தேவியாரால் சக்களத்தித் தன்மையானே திருக் கரத்தாற் றீட்டப்பட்ட நினது தரங்கங்கள் வெற்றி பெற் றுலவுக வெனல்.]

பரமசிவன் செஞ்சடைமண்ட பத்தினின்றும் பரந்துசிவை யன்புடனே பகிர்ந்து வாழும், பெருமநது விரிமிகவு மிருது வான பெருங்கேச வேசநெறி பிறங்கா நின்ற, வுரமருவு கோமளமெய்க் காந்தி வாய்ந்த வுமை யம்மை மாற்றவளாம் பான்மை யானே, யெரிவெகுளி விழிகள்பொங்கக் கரத்தி லீக்கு மெழிலலைகள் வெற்றி யுற்று வாழ்க தாயே. 40

(உரை) சிவ பெரு மானது செஞ் சடையினின்றும் வெளிப் போந்து ஸ்ரீ பரமேசுரி பாதி பாகத்தி லன்பாக வாழும் கருணநிதியின் சிகை வாயி லாய் வரவும் கோமள மான திரு மேனியையும் காந்தியையு முடைய, ஸ்ரீ பார்வதி தேவியார் சக்களத்தியாந் தன்மையானே, கோபத்தோடு கூடிய விழிகள் சிவப்பத் திருக் கரத்தாற், றீட்டப்பட்ட அழகிய அலைகள் விஜயஞ் செய்க. 40

[அநேகர் உன்னை யடைகின்றனர், அவர்த மிஷ்டத்தை நிறைவேற்றுகின்றய், என்ப தாகக் காரண முளது. யானு இயற்கையாயே நின்பா லன் புள்ளவ னென்பது திண்ண மெனல்.]



புகழுறு நினது பதமலர் பரவப் புங்கவர் கங்கை யெண் ணரியோர், நிகழுற விலைகொ லெதுகொடிங் கெனிலே நீயவர் விழைவன வளிப்பா, யிகழுறு மெளிய னியற்கையா யேநின் னிருபதம் வணங்கிவாழ்த் திடலாந், திகழ்வினிற் கசிந்து திநமகற் றிடுவன் றிண்ணமுண் ணிகழுமங் கலையே. 41

(உரை) ஹே தேவ கங்கையே! நினது புகழப்பட்ட பாத தரிசநத்திற்கு, அநேகர் வருகின்ரு ரில்லையா வென்? யாது காரணம் பற்றியோ வெனின்? நீயவர் விரும்பிய தைக் கொடுக்கின்ருயன்ரே? அடியேனே, சுபாவ மாகவே நினது பாத பத்மங்களை வணங்கி வாழ்த்திக் கொண்டே பொழுதைக் கழிக்கின்றே னென்பது திண்ண மாம். 41

[நினது மண் ணெனது சோக முழுவதையும், தூரஞ் செய்க வென வேண்டல்].

களிப்பொடு முலகர் திலகம தாகக் கதுவுற நெற்றியிற் கதிரோன், றளிர்ப்புறு தருண கிரணமா ருவமை தமந்தணஈ திடத்தரித் திடுஞ்சீர், வளப்பொலி யயன் முன் வரைதுய ரெழுத்தின் வழிநொடிப் பொழுதினில் வழிக்கும். அளப்பினி னிசைநன் மணின்பொடி யடிய னளப்பறுந் துயரகற் றுகவே. 42

(உரை) சந்தோடத்தோடும் உலகர் நெற்றியில் திலக மாகப் பொருந்தியதும், சூரிய னுடைய மிகப் பிரகாசம் போல இருளைப் போக்குந் தன்மையை யடைவதும், வளப்பம் பொருந்திய பிரஹ்மா எழுதிய கெட்ட எழுத்தை நொடியில் மாற்றுவதும், அள வில்லாத கீர்த்தியோடு கூடியதும், ஆகிய நினது மட் பொடி யானது, அடியே னுடைய, மாருத் துயரை யெல்லாம் மாற்றுக. 42

[மூட நரரைப் பரிகசித்துக் கொண்டுந், தன்பா லிருக்கும் வண்டுகளின் மலிநத்தை நீக்கிக் கொண்டு மிருக்கும் ஸ்ரீ கங்கா தீர தருக்கள் எனது சகாயமா யுறைக வெனல்.]

மாடநிறை தத்தநகர் மத்தமாந மடநரரை மலர்ந்த பூக்கள், கூடிடுதன் மகிழ்வினுட னகைத்ததெனக் குலவ நித்தங் குமல மேய்ந்தங், காடிடுநல் லளியினத்தை யநவரத மநுமணத்தா லமல மாக்கித், தேடமார் நதித் தீர முறைதருக்க ணந்துணையாய்த் திகழ்க வின்றே 43

(உரை) மாடங்களுறையும் தமது தமது நகரத்தி லேயே பற்றுறு மாநத்த ராகிய மடையரை நகைப்பது போ லும், பூக்கள் மலர்ந்து தன்னிடத் திருக்கும் வண்டுக் கூட் டத்தை நல்ல மணத்தினலே நின்மல மாகும்படி செய்து விளங்கும். தேவருந் தேடாநின்ற ஸ்ரீ கங்கா திரத் தருக்கள் நமக்குத் துணை யாகுக. 43

[சிலர் தம திட்ட பலப் பொருட்டுத் தேவ பூசையையும், யோகத்தையு மாற்றுவர்; யானு நின் னும ஸ்மரணத்தானே அடைய வேண்டிய தடைந்தவ னுகி, உலக ஜாலத்தைத் துரும் பென எண்ணியுள்ளே னெனல்.]

அதிகடிந சேவையுறத் தேவரையே சிலர்பூசை யாற்று நிற்பர், நிதிபலர்க ளிகமகத்தைப் பற்றுவர்மற் றையரியம நியமஞ் சேர்வர், சுதனடிய னின்னுமந் தனைநினைந்து சுகிர்தமெலாஞ் சுலப மாய்ப்பெற், றத வுலகின் குழுத்துரும்பின் குழுவெனவே திரிபதகை யறிந்து ளேனல். 44

(உரை) மிகுந்த கடிந மாகிய சேவை செய்து தேவ ரைப் பூசிப்பர் சிலர், சிலரோ, யாகம் புரிவர், சிலரோ, யோ கம் புரிவர், அடியேனோ, நின் நாமத்தையே ஜபித்து எல் லாச் சுகத்தையு மடைந்து, ஜகத்தைத் துரும் பென எண்ணி யிருக்கின்றேன், 44



[ஜந்மம் வரை யெப்போதும் புண்ணியம் செய்யுஞ் சாதுக் கட்கு மேன்மையைச் செய்ய அநேகந் தேவர் சமர்த்துடை யரா யிருக்கின்றனர். பற்றில்லாத பாபிகட்கோ உன்னை யன்றி, யந்நியர் இதம் புரிபவர் உலகிற் கண்டிலே னெனல்.]

பிறந்தது முதற்கொண் டிடைவிடா தறத்தைப் பெரிதுசெய் யறிஞருக்கு குயர்வைத், திறந்தர வலிய பலசுர ரிலரென் றிக்கிலா தறஞ்செயா திருப்போர்க், குறுந்துணை யுனையே யல்லதிவ் வுலகி லுண்டுகொன் மறுதுணை யெனையீ, சிறந்தமெய் யனையே யிதகதி காணேன் சிறியனுக் கருடியிக் கணமே. 45

(உரை) பிறந்தது முதலிடை விடாது புண்ணியமே செய்யும் பெரியவருக்கு மேன்மையைச் செய்யும் பொருட்டு வல்லமையுடைய அநேகந் தேவ ரில்லையா வென்? உண்டு, ஆனல், அநாதய ராய்ப் பாவியரா யிருப் பவர்க்கு நீ தான் றுணையே யல்லாமல் வேறு துணையைக் காணேம், ஆதலின், எனக் கருள் செய்வாயாக. 45

[நின் நீர்த்தத்தை குடித்து மூடச் சிநேகரோடும் விளை யாடச் சென்ற யான் ஓரிடத்தும் இன்ப மடைந்திலேன், இப் போது மென் காற்றுற் சீதள மாய நின் மடியில் நெடுநாட் டுயி லாத என்னைத் துயில வைப்பா யெனல்.]

நின்றிருத் தீர்த்தம் பருகிமா மூர்க்க நேயர்க ளொடும்விளை யாடச், சென்றதி விரைவி லெங்குமே தென் யோய்வைச் செறிந்திலன் றயைமிகுந் தாயே, தென் றனன் றுலவிச் சீதள மான திருமடி தனிலினி நெடுநா, ளின்றிய துயில ளுகிய வெனையு மினிதுசெய் துயில விப் போதே. 46

(உரை) உனது தீர்த்தத்தைப் பருகி மகா மூர்க்கரோ டிணங்கி விளையாடித் திரிந்து இளைப் பாறுத லின்றி யுழன்றேன். ஹே தயை மிருந்த தாயே! இளந் தென்றல் வீசிச் சீதள மான நினது திரு மடியி லினி வைத்து நெடுநாளுறங்காத வென்னை உறங்க வைத்தருள். 46

[என்னைக் காக்கும் பொருட்டு இடுப்புக் கட்டிக் கொள்ளெனல்.]

**உருள்பெரும் பரம கவின்கொளு மிடையை யொரு நொடிப் பொழுதினி லிறுக்கித், தெருள்பொழி நினது முகுடமி தரவத் திரள்கலா லினநில வமைத்தி, யிருள்படு மிதர ரெனப்பொது வாக வெள்ளுத லொழித்தி யென் னனையே, யருள்பெறு ஜகந்நா தன்னெனு மெனையு மளித்தரு டருணமிப் பொழுதே. 47**

(உரை) தந பாரத்தாற் றளர்வுறும் மிக அழகு பொருந்திய இடையை அதிவிரைவி லிறுக்கிக் கட்டிக் கொள்ளுதி, நினது மவுலியில் நிலவைப் பாம்பின் கூட்டத்தால் கட்டிக்கொள்ளுதி. மற்றைய அஞ்ஞானிகளைப் போல என்னையும் சாமாநிய மாக நினைக்கவேண்டாம். ஹே பரமேசுரியே! ஜகந் நாத னுகிய எளியேனைக் காக்குஞ் சமய மிதுவே யாகும். 47

[ஸ்ரீ கங்கையின் திரு வடிவைத் துதித்தல்.]

**உலவுசரற் காலமதித் தவள மேனி யொடுபிறை வெள் ளரவுபொலி முகுடத் தோடும், வலவைபுகழ் கும்பமொடம் புயம தேந்தி வரமபயந் தருமரைச்செங் கரங்க ளோடு, நிலவுசுதைத் தாரைமணி யணிக ளாடை நிறைவிஞெடு வெண்மகர மிசைகு லாவும், புலவர்புக ழம்மைநினை நினைகு வார்கள் புன்மையென்ப தணுவணுகார் புரிதர் வாழ்வே. 48**



(உரை) விளங்காநின்ற சரத் காலத்தி லிருக்கும் பூரண சந்திரனைப் போன்ற வெண்மை யான திரு மேனியோடும். பிறை வெள் ளரவுகள் நிறைந்த மவுலியோடும், தேவியும் புகழும், கும்பம், தாமரை, வரம், அபயம், என்பவற்றோ டுற்ற நான்கு செந் தாமரைக் கரங்களோடும், அமுத தாரையா லாய அநேக ஆடை யாபரணங்களோடும், வெள்ளிய மகர மச்சத்தின் மீது எழுந்தருளும், புலவரால் வியந்து புகழப்பெறுந் தாயே! நின்னை யிவ் வாறு தியாநம் புரிபவர் ஒரு கா லுந் தாழ்மையை யடையார். 48

[ஸ்ரீ கங்கை யெனது சரீர சுகத்தைச் செய்க வெனல்.]

**புன்னகை பொலியும் வதநத் தொளி பூரணத் தமுதத் தாற்ப வமெனும், வன்னி வெந்து பொறிந்திடு மைந்தரை வாழ வென்றும் வழங்குமி ளங்கொடி சிந்நவம்பெறு நன்னில வின்குவால் செய்யு மாற்றல்வி ரித் திடுந் தேமொழி, என்னு டல்விரை வின்புற முன்பரு ளிங்கு சந்தனு மங்கல நங்கையே 49**

(உரை) புன்னகையோடு கூடிய திரு முகத்தின் பிரகாச மாகிய பூரணுமிர்த தாரையால், குடும்ப வன்னியில் அவிந்து கரிந்து போகும், மைந்தர்க ளாகிய எங்களை என்றும் வாழு மாறு அநுக்கிரகிக்கும் இளங் கொடிபோன்ற தாயே! சிந்மயச் சந்திரிகைக் கூட்டஞ் செய்யுஞ் சாமார்த்தியத்தை விரித் தநுக்கிரகிரகிக்கும் இனிய கனி மொழியாய்! என் தேகம் அதிவிரைவில் இன்பத்தை யடைய,முன் பநுக்கிரகிப்பா யாக. ஹே சந்தநுவிற்கு மங்களத்தை யருளுந் தாயே! அருள் புரிதி. 49

[சம்சாரச்சுவாலையால் தகிக்கப்பட்ட தேகத்தை யுடைய எனது தாபத்தைச் சாந்தி செய்தி யெனல்.]

இந்திரன்ற னுலகமதி லிலங்கிடுவோ யலையா லெழிலரியின் பாதமதைப் புநிதமுறப் புரிவோய்!, மந் திரங்கண் மந்தமுறு மருந்துகளும் பொருந்தா மாக கணம் பயந்தடங்கு மதலமுத ரசமுஞ், சிந்திவிழுங் கருடனைத்தே வதையாக்குஞ் சிலையுஞ் சிதறிவிடும் படியான பவவநற்பாம் பெறிவா, னைந்தவென தருந் தாபந் தனையுமிந்த நொடியே நாசமுறப் புரிந்தறிவை நாடிடவு மருளே. 50

(உரை) ஹே சுவர்க்க லோக மாதாவே! தங்கங்களால் ஸ்ரீ மகா விஷ்ணுவின் பாதத்தைப் புநித மாக்குவோய்! மந்திரங்கள் மந்திக்கு மாறும். மருந்துகள் வெறுந் துக ளாகு மாறும், தேவர் கூட்டம் சேவகர் கூட்ட மாகும் வண்ணமும், மதம் பொழி யமுத ரச தாரையும், இதம் பொழிய முடியாம லிழியவும், கருட தேவதைக் கல்லும் உரு டரும் பொடி யாகவும், எழுந்து கொத்திய சமுசாரச் சர்ப்பக் கடிக் கொடிய அநலால் வெதும்பிய அடியேனது பெருந் தாபத்தை இக்கணமே, நசிக்கு மாறு செய்து, சந்த தம் பரம சிவத் தியாந பரனு யிருக்கு மாறு அருள் புரிவாய். 50

[ஸ்ரீ கங்கா லகரி நடன் கடத் தாண்டவம் எங்களைப் பவித் திரஞ் செய்க வென வேண்டல்.]

சூதினில்வா சுகிகரியின் சருமம்பிர மதராநஞ் சுப கணங்க ளக்கமணி நந்தியிந்து முதன்மை, யாதியுள வெவற்றினையுங் கவர்ந்ததன்பின் புரத்தை யட்டவனுந் தனைத்துரிதம் விலைப்படுத்த விழைய, ஓதுகருத் துடைய வரை யிமமலையின் குமரி யுள்ளெழுந்த புன்னகையொ டுருள்விழியா னேக்கத், தீதிதென்று னலைந்தெழுந்தங் காடுகின்ற தரங்கத் திருநடன்றன் கடநடந மெனைப் புரக்க தாயே. 51



(உரை) ஸ்ரீ மகா தேவியார் கூ தாடி, வாசுகி நாகத் தையும், யானைத் தோலையும். பிரமத கணங்களையும், ருத் ராக்ஷ மாலைகளையும், நந்தியையும், சந்திரனையும், இவை போன்ற முதன்மை யாய பிறவற்றையும், பறித்துக் கொண்ட பின், சிரித்துப் புர மெரித்தோன் தன்னையே விலைப்படுத்தி யாட விரைவில் முயலுதலை நோக்கி, அம்மை யார்,இனிக் கங்கை நம் வயமாவள் என்னுங் கருத் துடைய ராய்ப் புன் சிரிப்போடும் மேலே பார்க்கத் தீங்கு வந்த தென் றருண்டு அலைந் தெழுந்து ஆடும் நினது தரங்கக் கூத் தாடியின் சிரத்திற் குடம் வைத்தாடுங் கூத் தானது அடியேனைக் காத் தருள்க. 51

[முடி புரை யாகத் தன் னங்கங்களை நிருமலப்படுத்தப் பிரார்த் தித்தல்.]

மன்ம தத்தெறு சித்துரு வுத்தம மத்த கந்தனிற் புத்தழ கேசெயும், பன்ம லர்தரு மன்பரை மன்பெரும் பாடு வாடிட வேநொடி யாடிடும், நன்ம நக்கினி தாகியி னிதினும் நாடி மேல்விளை யாடிடுஞ் சிரகச், சிந்ம யச் சிவ கங்கையெ னதங்கஞ் செய்க நின்மல மென்மல நீங்கவே. 52

(உரை) மன்மதனைப் பொடி செய்த அறி வுருவ மாகிய பெருமானது உத்தம மாகிய திரு முடியில் நவ நவ மாக அழகைச் செய்வதும், அநேக வகைப் புஷ்பங்களை யெடுத் தருச்சிக்கும் அன்பரை யணுகுந் துயர் யாவற்றை யுங் களைவதும், அதிமனோகர மாயதும், உயர்ந் தெழுந்து விளையாடு மலைகளோடு கூடியதும் ஆகிய சிந்மயச் சிவ கங்கா தேவி, யடியேனது அங்கங்களின் புன் மலம் போ மாறு நின்மலஞ் செய் தருளுக. 52

### வாழ்த்து.

பண்டித ராஜ னென்னப் பகர்ஜகந் நாததேவன்,
விண்டவித் துதியை வீர வேதியன் பாதம் போற்றித்,
தண்டமிழ் வைத்தே னித்தைத் தடையறப் படித்தபேர்
கள், எண்டிசை தனினு மின்ப மெய்தியே வாழ்வர்
வாழி.

சுபம்! சுபம்!! சுபம்!!!

கங்கா லகரி (பெருக்கு) முற்றிற்று.

---

*நூல் வரலாறு.*

*(எண் சீர் கவி.)*

மல்லிகையின் வநநிறைந்த தில்லிமகா நகரின் மயி
லிருக்கை தனிலிருந்த மன்னன்மகண் முலையைப், புல்லி
நெடும் போகமிகப் புசித்தபெரு மாசைப் போக்கிடநற்
காசிநகர்க் கரையிலிருந் தரிதாய்ச், சொல்லியிடக் கங்கை
லகரியினைக்கவி முறைக்கோர் தோற்றுபடி யேறிமெலவந்து
மந்தா கிநியாள், நல்லஜக நாதவித்வத் திறையவனை நாடி
நகசிகையை நனைத்தருளி நண்ணினளு னிலத்தே.

### (வரலாறு)

டில்லி மகா நகரி லிருந்த ஸாஜிகான் என்னும் மன்ன வனோடு பண்டித ராஜர் வாழுங்கால் ஒரு திநம் தன் மகளைப் பாத்சா தண் ணீர் கொண்டுவரும்படி யேவ, லவங்கி யென்னு மப் பெண் மணி தங்கக் கும்பத்திற் றண்ணீர் கொண்டுவர, அதை வருணிக்கு மாறு வேண்டிய போது வருணித்த சுலோக சாதுர்யத்தைக் கண்டு, பண்டித ராஜர் விரும்பிய லவங்கியை விவாகஞ் செய்து கொடுப்ப, அவளோடு ஸ்ரீ காசியை யடைந்து பண்டித ராஜரை மறையவர் அவமதிப்ப, 52-படியின் கீழிருந்த ஸ்ரீ கங்கா தேவியை இத் துதியாற் பிரார்த்தித்த போது, சுலோகந்தோறும் ஒவ்வொரு படி யேறி வந்து அம்மையார் புநித மாக்கினரென்ப.



உ

ஓம் மகாகணபதயே நம:

# காவிரிப் பதிகம்.

---

திங்கட் செஞ்சடைத் தியாகனுர்க் கினியகா விரியே,
புங்க வர்புகழ் பொன்னுல கெழுந்தபே ரமுதக்,
கங்கையு நின்றன் வயின்வந்து மூழ்கியே களங்க, 1
மிங்க றுத்திடு மெனினின திசையெவ ரிசைப்பார்.

வாரிதி பெய்தநல் வயிற்றி னுன்கொலோ,
பாரிதைத் தன்பெரும் பண்டியிட் டான்கொலோ,
நேருனைப் பயந்தவர் நீடு கூறுவாய், 2
சீரெனக் கருடருஞ் சிறந்த தேவியே.

### வேறு.

அளவறு சிவன்ற னுலய மரியி னுலய மானைமா முகன்
றன், களவறு முமையின் கந்தன்றன் கோயில் கணக்கிலா
தவைநின்றன் கரைமேல், இளவெயிற் பதும மெனவிளங்
கிடல்போ லெங்நதிக் கரையிலா முரையா, யுளமறுத் 3
தெனையு மறிவினி னிறுவு முத்தமி நித்தகா விரியே.

எத்தனை பெயர்க ளெத்தனை பிரிவி லெத்தனை யுயிர்
களைப் புரத்த, லத்தனுக் குனது பிரியமே நோக்கி னம்
பிகை கங்கையி லணுவே, யுத்தம ரான மூவரு முறையி
லுனையலா தேவரைப் புகழ்ந்தார், சித்தம திரங்கி மத்தனை 4
யாண்டு சீரினைக் காவிரி யருளே.

நின்வயி னிருந்த மணற்கண மியாவு நித்தமெய்ப்
பரசிவ னிலிங்கந், தன்வயி னிறங்கள் தகுங்கொலோ வென
முன் றன்மனை கடிந்தமா தவன்றன், புன்வய லுழுத
செருப்பினைத் தலையிற் பொருத்தியே யரதத்த ராடி, லென்
வயிற் புகழ்த லென்கொலாங் கருணை யெழில்கொழி காவி 5
ரித் தாயே.

---

கோர்வண ணுகி நின்கரை யடைந்த கோனிலா மைந்தனைப் புரத்தல், ஆவவுன் றனக்கிங் கருமையோ வன்னே யருஞ்சதா சிவப்பிர மத்தை, யாவலே விடுத்த தக்கிணு மூர்த்தி யையனே யனேயமா தவரைத், தேவினீ புரந்து பயின் றவ என்றே திருச்சுதன் மறுத்ததா யுளரோ. 6

வாசனை மிகுத்த மநத்தனே யெனினு மங்கையர் வாஞ்சைய னெனினு, மாசனைத் திருத்தி யாண்டிடி னிதமு மாசரும் புகழ்வருன் புகழை, பேசுரு களங்க னெளியனைப் போலப் பெற்றிட வுலகினிற் கரிதே, நீசெயிந் நிமிட மாத லிற் புநித நின்மலக் காவிரி யனேயே. 7

சந்தந வடிவி புகுந்துமா கரியைச் சந்தொடுந் தரளவா ழரவைச், செந்திருத் திரையி லொதுக்கியே யாடுஞ் செல் வியே கல்வியே பயிலா, மைந்தனுன் பதத்தைப் பணிந்தனன் மடியில் மலர்த்தவி சினினினி திருத்திப், புந்தியை யடக்கிப் பூரண மாகிப் புத்தமு தயின்றிட வருளே. 8

காமமே முதலாம் பெரும்பகை கடிந்து கரமதே பயிக்கபாத் திரமாய்ச், சேமமே யாய நின்கரை யிருந்து செபித்தெழுத் தைந்தையு மநத்திற், பூமமெய் யுருவே யாவு மென் றநிசம் பூரண வறிவுரு வாகி, நீமந வடியற் கருளுநா ளென்றே நிகர றுங் காவிரி யம்மே. 9

காவிரி யனேயே போற்றி! களங்கமில் தேவி போற்றி!
நீவிரி தலங்க ளெல்லா நித்தியம் வாழ்க போற்றி!
மூவரும் புகழுந் தியாக முன்னவ மன்னன் மன்னும்,
தேவரும் புகழு மாரூர்ச் செல்வியே போற்றி! போற்றி! 10

காவிரிப் பதிகம் முற்றிற்று.

சுபம்! சுபம்!! சுபம்!!!

---



உ
சிவ மயம்.
ஓம் மகா கணபதயே நம:

மலாய் நாட்டில் உள்ள,

## ஈப்போ-ஸ்ரீ தண்டாயுத பாணி

# தோத்திரப் பா.

காப்பு.

திருவெலா நிறையு மீப்போச் செல்வமா நகரில் நாளு
மருவுறுந் தண்ட பாணி மரைபுரை பாதப் போதிற்
றரவெனுந் தோத்தி ரப்பாத் தனையருள் புரிய வீரக் [மால்.
கரிமுகத் திறைவன் பொற்றுட் கருத்தினி லிருத்து வே

---

சீர்பெறும் வணிகர் போற்றச் சிறப்புறு மீப்போ மன்னு
மேர்பெறு மிறைவ வள்ளி காதல விமையோர் போற்றுந்
தார்பெறுந் தண்ட பாணி யைங்கரன் றுணைவ நாயேன்
சீர்பெற நின்று ளன்றிச் சிந்தியேன் சிந்தி யேனே. 1

சிந்தனை திநமு மல்குற் சீர்முலை யுழன்று கன்றி
நொந்தன னந்தோ மெத்த நுடங்கின னருளல் வேண்டுங்
கந்தநின் பாதப் போதைக் கனவினு மறவி லாதேன்
சந்தெழு மீப்போ மன்னுஞ் சண்முகா போற்றி போற்றி. 2

சண்முகம் படைத்த தேவே சதுர்மறை பொலியும் வாழ்வே, விண்முகத் தமரர் போற்ற வெற்றிவேல் விடுத்த கோவே, பண்முகத் தொழுகும் பாவே பாவினற் பயனே செய்ய, தண்முகச் சோலை யீப்போத் தனிலமர் தேவ தேவே. 3

தேவர்தங் குறைகளைரத் திருக்கைவே றன்னை யேவி
யாவரு மஞ்சுஞ் சூர பற்பனை யழித்த நின்றன்,
சேவலும் மயிலும் வேலுஞ் சிந்தையிற் சிந்திப் பார்தம்
மூவினை தளரு மீப்போ முருகனே யருளல் வேண்டும். 4

வேண்டுநின் னடிய ரீட்டம் வேண்டுநின் பதத்தி லன்பே, வேண்டுநின் னுருவ மன்றி வேறொன்றைக் காணு வாழ்க்கை, வேண்டுமுக் கரணத் தாலு மின்னலே விழையாச் சீலம், வேண்டிவை யீயி னீப்போ வேலவ மேலோ னியானே. 5

யானென தற்று நின்றே யாப்பினைப் பாடா நிற்த
மீனமில் புலவர் பின்போ யிசையினைக் கேளா வாழுங் [டா
கோனுனக் கெனது யாப்பென் குறையினைக் கூறுங் கண்
யூனமன் றீப்போ வாழு மும்பர்கட் கரசே போற்றி, 6

அரசனல் வாழ்வு மென்னும் அமரர்தம் வாழ்வு மென்னும்
ஒருசொலின் னுமம் பாடு முண்மையர் வாழ்வுக் கென்றே,
யெரிசொரி காந்தி மாழைக் கனிமனு மீப்போ வாழும்
பரிசுறு நின்றன் பாதம் பாடியான் பணிகின் றேனே. 7

பணியணி பரமற் குற்ற பரமசற் குருவே போற்றி
குணமணி குரவர் போற்றுங் குரைகழற் ருளா போற்றி,
வணநிண வேலா போற்றி வள்ளியின் கள்ளா போற்றி
மணமுணுஞ் சோலை யீப்போ மன்னவா போற்றி போற்றி.

போற்றுவ ரருணை நாதர் பொய்யிலாப் புலவர் முன்னோர்
சாற்றுவர் சுவைப்பா நாயேன் சாற்றுதற் கரிய னேனும்,
நாற்றமும் பேற நின்ற னுமமே நவிற்று கின்றே
னேற்றரு ளீப்போ மன்னு மிறைவனே மறைவ லானே. 9



மறைகளு மயர்ந்து நேதி வசனங்கொண் டுணர்த்து நின்னை, மறையவன் முதல யாரும் வழுத்திடற் குரியர் கொல்லோ, முறையள வெனினே யானு மங்ஙனே முருகா செஞ்சொற், சிறுமிய ராடு மீப்போச் செல்வனே செந்தில் வாழ்வே. 10

செந்திலை விடுத்துத் தங்கஞ் செவ்வனே விளையு மீப்போச்
சுந்திர நகரம் போந்தா யென்றிடிற் சுகுண னேநீ,
தந்திர மென்ன சொல்வேன் றன்னடி யவரைக் காக்கு
மந்திரப் பொருளே நின்னைக் கனவினு மறக்க லாமோ. 11

மறப்பர்க ளெமனின் றென்றே மறந்தபொய்ப் பேதை யார்தம், சிறப்புறு மீப்போ மன்னும் செல்வநின் றிருத்தா டன்னை, யுறப்பெறு மடிய னேனே வுளமிக வுருகி யேத்தி, யறப்பல வுருவ னேயென் றநுதின வணங்கா நிற்பேன். 12

நிற்பல வடிவ மோங்கி நிலவுறல் காணு மூடர்
பற்பல வேறு மென்றே பரவுவர் பரவி னுலும்,
சொற்பொரு ணிறைந்த நின்றன் சுந்தர மூர்த்தத் தேனும்
நிற்பர்க ளென்று லீப்போ நிமலனே யவரென் கண்ணே. 13

கண்ணினுண் மணிபோ லென்னைக் காத்தருள் கதிர் வேற் செல்வா, மண்ணினி னென்னென் னுசை மருவுற வைத்தா யென்பா, லண்ணலே யவற்றி னின்று மடியனை யெடுத்தி டாயே, லெண்ணுதற் கரிய வீப்போ விறைவனே யென்செய் வேனே. 14

செய்யுமெண் பத்து நான்கு சேரிலக் கத்தின் மேலாம்
மையறு மநுட யாக்கை மடவனேன் பெற்று மென்னே,

பொய்யற நினது பாதப் போதினை நினைகி லேனே,
செய்யுறு மீப்போ மேவுஞ் செம்மலே கடைக்கண் செய்யே
செய்வதொன் றறியே னுயேன் சிந்திக்க வறியே னுயே,
னுய்வதற் கறியே னுயே னென்றையு மறியே னுயேன்
மைவளர் வள்ளி பங்கா வள்ளலே கள்ள மில்லை,
யுய்வகை செய்வா யீப்போ வும்பர்கள் பரவுந் தேவே. 16

வே று.

தேவர்கள் பரவுந் தேவனே யினிய தெய்வயா னையின் றிருக் கொழுநா, மூவர்கள் பரவும் வாழ்வினை யடியேன் முந்துறச் சொந்தமே புரிவாய், காவுகு மலர்க ளருவிகள் கனிகள் கண்ணிறை கவினுரை தருஞ்சீர்ப், பாவுறை தரு மீப் போவுறுந் தண்ட பாணியே பரமசற் குருவே. 17

குருவெனப் பரமன் கொண்டபோ தென்னை குழை செவி வார்த்தனை யதனை, யருவனே யடியேற் குரைத்தருள் புரிந்தா லாருனைக் கடிபவ ரையா, பெருவனப் புகந்த பெருமனே யமரர் பேணுறும் வளம்பொழிந் திலங்கிப், பெருகுறு மீப்போப் பிறங்குறுங் கரியின் பின்னவ வென் னுயிர்த் துணையே. 18

துணையென நினையே கொண்டுளா ரிகத்துந் துன்னுறு பரத்தும்வாழ்ந் தனரா, லிணையிலா மூட னுயினே னந்தோ வென்செய்வான் றுணைக்கொளா துழன்றே, னணையுமின் றேனுந் துணையெனக் கொளுமா றண்ணலே யடியேனற் கருள்வாய், மணநிறை மகிழம் பூநெறி யீப்போ மன்னிய வள்ளிநா யகனே. 19



நாயக வுலகின் நாயக வமரர் நாயக வெவர்க்குமிங் கெனக்கும், பேயகத் தோடு திரிந்திட லடியன் பேரறி வாளநீ யறிந்தும், தூயகங் கொடுத்தே யாட்கொளத் தடையென் றேகையை யுகைத்தசே வகனே, சேயக மெனுமீப் போவுறும் வீர சேகர சேவலங் கொடியோய். 20

கொடியனை யறத்தின் மிடியனை யறவுங் கோணுறுந் தடியனைப் பணியா, வடியனை யினிமே லாகினுந் தயையி லாளுதல் கடனின தலவோ, நொடியினின் மயிலின் மிசை யிசைந் தளவி னுவல்புவ னங்கள்சுற் றிடுவோய், படியினி லீப்போ நகருறை தண்ட பாணியே பரமதே சிகனே. 21

தேசி கனருளு நெறிதனி னடவாத் திருடனை முரடனை யறியா, தேசுறு நெறியி னடந்திடுங் கொடிய விருடனை யுறவுசெய் தவனைப், பேசுறு நெறியிற் பிறங்கவே வைத் தாற் பிழையென நினையெவர் கடிவர், மாசற வணிகர் வழுத்திட வீப்போ மன்னிய வென்னுயிர்க் குயிரே. 22

உயிரிலக் கணத்தை யறிவனே நாயே னுன்னுடை நல்லிலக் கணத்தைத், துயரற வறிந்து கொள்வனே நினது துன்பமி லின்பமே பயக்கு, மயலறு கருணை யெளியன்மே லின்றேன் மாசனென் றெண்ணிட றதுமோ, குயில்மயில் பயிலும் குளிர்பொழி லீப்போக் குடியெனக் கொண்ட நாயகனே. 23

நாயக மிகவுங் குயிற்றியே நலிந்தே னுன்மறை முடி வினி னிலங்குந், தூயநின் னுணர்வை யடியனேற் களித்துத் துயரெலாந் துடைத்தருள் புரிவாய், தாயகந் திருவிற்

கென்னவே வளங்கள் சகலமு நிறைந்துநீ ளருவி, பாயக நிறையிப் போவுறை தண் ட பா ணி யே யருணிறை பவனே. 24

பவந்தவிர்ந் தழிவில் பதந்தனை யடையப் பரமனே சரவண பவனே, யுவந்துன தளவி லுமமே புகன்றிங் குயர்ந்தவர் நடைகடைப் பிடியா, தவந்தனி னரிய காலமே கழிக்கு மடியனைக் காக்குநா ளுளதோ, சிவந்தநன் மரைகள் பொருந்துமீப் போவிற் செறிந்தருள் கொழிக்குமா தவனே. 25

மாதவர் சருகுங் காய்கனி யறலு மன்னிய பசிப்பிணிக் கருந்தி, மாதவம் புரிந்து நின்னுரு வாக மங்கையர் கொங் கையூ டழிவா, லுதவன் வெயிலிற் புழுவென வலையு மடியனேற் கருணின தாமோ, மாதவன் மருக முருகவீப் போவின் மருவிய பருவநன் மதியே 26

மதிகொலோ நீதான் மலைமகள் வதந மாகடற் பொங் குறப் பருதி, யுதயமோ நீதா னுதயமில் சிவன்ற னுயர்தரு வதநதா மரைக்கோர், நிதிகொலோ நின து தமயனு மெனது நின்மல வாரியற் கைய, பதிகொலா மெனவீப் போவினிற் பதிந்த பாவலர் மேவுசே வகனே. 27

சேவலங் கொடியும் செருநர்தம் முதிரஞ் சிவந்திட மாந்தும்வே லதுவு, மாவலில் விளைந்த வாரமு தனைய வம் மைய ரிருவரு மயிலும், பாவல பொலிய வென்முனே காட்சி பணித்தருள் காலமு முளதோ, காவலிற் பொலி யீப் போவினிற் குடிகொள் கந்தனே கருணை மா கடலே. 28



கடலெழுந் தரங்க பேரபுற் புநங்கள் கடலுறு மற லலா திலைபோற், சுடருரு நினைவிட் டுலகுயி ரெவையுஞ் சொல்லிடற் கில்லையா மெனினு, மடலுறு மெனது மநந் திந மயலை யாற்றிட மாற்றிட வறியேன், சுடலையி னடஞ் செய் பவன்சுத வீப்போச் சுந்தர நகருகந் தவனே. 29

தவமிகு கவிகள் தண்ணருள் பொழியத் தருகவி யன் பினு லாமென், னவமிகு கவியோ வத்தகை யலவா லாயினு மன்பினை வேண்டிச், சிவ சிவ வெனவென் சிந்தையி லெழுந்த சிறுமொழி யிஃதிதைச் சிதையே, னவவருள் புரிதி நாதனே யீப்போ நண்ணிய புண்ணியர் வளமே. 30

## வேறு.

வளமெலாங் கொடுப்போய் போற்றி வள்ளியின் கொழுநா போற்றி, யுளநிறை யமுதே போற்றி யுன்னுதற் கரியாய் போற்றி, களமெலா மொழிப்பாய் போற்றி கண் ணுதல் குமரா போற்றி, விளைநிலப் பொன்னு ரீப்போ மேவிய துரையே போற்றி. 31

போற்றியென் குரவ னுகிப் பொலிதிருக் களரில் வைகும், நாற்றிசை புகழும் வீர நா ய க ன் றுணைவ போற்றி, சேற்றிதழ்க் கமலஞ் சேருஞ் செல்விசே ரீப்போ மன்னும், மாற்றறும் பொன்னே யுன்னை வணங்கினன் பெறநின் சீரே. 32

ஈப்போ—ஸ்ரீ தண்டாயுத பாணி
தோத்திரப் பா முற்றிற்று.

ஸ்ரீமத்-சண் முக நாதன் றிரு வடியே துணை.

## இதில் அடக்கம் நூல்கள்.

1 வீர சேகர மாலை கவி 101.
(அத்வைதார்த்தப் பிரதிபம்)
1A தனிக் கவி 3.
2 கோவி லூர் திரு நெல்லை அந்தாதி 101.
3 கோவி லூர் கொற்ற வா ளீசர் அந்தாதி 101.
4 ஐந்து குரு தோத்திரம் கவி 10.
5 சிக்கல்-பொருள் வைத்த சேரி. ஸ்வர்ண புரீசுவரர்-சௌந்தரிய நாயகி அந்தாதி 103.
6 சிக்கல்-பொருள் வைத்த சேரி-செல்வ விநாயகர் செம்பொன் மாலை 101.
7 சிக்கல்-பொருள் வைத்த சேரி-சௌந்தரிய நாயகி பிள்ளைத் தமிழ் 101.
8 பிரஹ்ம நாமாவலி (மொழி பெயர்ப்பு) 23
9 வீர சேகர-ஆசீர்வாத பஞ்ச ரத்நம் (மொழிபெயர்ப்பு)5
10 திருக் களர்-பாரிஜாத வநேசுவரர், பதிற்றுப் பத்தந்தாதி 101.
11 திருக் களர்-அமிர்த வல்லி மாலை.
(அத்வைதாமிருத சார சங்கிரகம்) 101.
12 சிவற கோட்டை, சிந்தா மணி விநாயகர், செல்வ மணி மாலை 32.
13 மகா கணபதி பஞ்ச ரத்நம் (மொழி பெயர்ப்பு) 7
14 குன்றக் குடி ஷண்முக ஷட்கம் (மொழி பெயர்ப்பு)7
15 விருஷ்டி ஷட்கம் (மொழி பெயர்ப்பு) 7.
16 குன்றக் குடி, சுப்பிரமணிய தசகம் (மொழி பெயர்ப்பு) 11.
17 கங்கா லஹரி மூலமும் உரையும் (மொழி பெயர்ப்பு)53
18 காவிரிப் பதிகம் 10.
19 மாலாயா நாட்டு, ஈப்போ, தண்டாயுத பாணி தோத்திரம் 33.

ஆகக் கவி 1011



## இயற்றிய நூல்கள்.

1 மந்திர உபதேசம் வசநம். 0—25
2 சூட்டுக் கோல்-கட்டாரி புச்சம். (கண்டந நூல்) (3) 1—00
3 திரு எம்பாவை திருப் பள்ளி எழுச்சி [மணி மாலை சிறு சுடர் உரை. (2) 0—75
4 சார்த சதக ஸ்தோத்திர ரச மஞ்சரி [பரிமள தீப உரை. (15) 1—50
5 திரிம்சத் ஸ்தோத்திர ரச மஞ்சரி, நந்தா ஒளி உரை 0—25
6 சப்ததி: ஸ்தோத்திர ரச மஞ்சரி, நந்தா ஒளி உரை 0—50
7 பிள்ளையார்பட்டி, கர்ப்பக விநாயக காரைக்குடி கொப்புடையம்பாள் ஸ்தோத்திரம் [கவி 20 நந்தா ஒளி உரை. (2) 0—25
8 அதிஷ்டாநத்தி விருப்பவர்கட்கும், [அத்வைதிகட்கும் ஓர் அறிக்கை. 0—25
9 வட நாட்டில் ஹரித்வாரக் கும்ப மேளாவும், தென் [னாட்டில் சாதுக்கள் மேளாவும், வசநம். 0—25
10 சாது சங்க நிறுவல் வைபவம் வசநம். 0—25
11 மடங்களின் உத்பத்தியும், [தற் போதுள்ள நிலைமையும், வசநம். 0—13
12 திரு எம் பாவை, திருப் பள்ளி எழுச்சி, பத உரை. 0—25
(ஆக நூல் 38)

## பிற நூல் அச்சிட்டன.

1 வேதாந்த சாஸ்திர ரத்நாவலி (9 சேர்ந்தது) 3—00
2 வேதாந்த சாஸ்திர ரத்நத் திரயம் (3 சேர்ந்தது) 3—00
3 கீதாத் திரயம் (பகவற் கீதை, ஈசுவர கீதை, [பிரஹ்ம கீதை.) 3—00
4 வாசிட்டம் கவி 2055. 2—25
5 திருக் களர் வீர சேகர ஞாந தேசிக சரிதம் வசநம். 1—00
6 பகவற் கீதை கவி 545. 1—25
7 பிரஹ்ம கீதை கவி. 0—38
8 ஈசுவர கீதை கவி. 0—25
9 பஞ்சதசி கவி ८00. 0—63
10 பகதி சதக தோத்திரம், தோத்திரப் பிரகாச உரை. 0—19
11 கைவல்ய நவநீதம் கவி 288. 0—56
12 கைவல்ய நவநீதம் [அருணசல ஞாந தேசிகர் பத சார உரை. 3—50
13 ஒன்பது துறவியர் பாடிய அருட் பா மாலை. 1—00

14 மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி கவ. 0—50
15 காசிகாநந்த விஜயம் வசநம். 0—25

## அச்சாக வேண்டியன.

1 யுக்திப் பிரகாசம் ஹிந்தி மொழி பெயர்ப்பு வசநம்.
2 பேத திக்காரம்-சத் கிரியை வசநம் (சமஸ்கிருத மொழி பெயர்ப்பு)
3 பிரபோத சுதா கரம் (வேதாந்தம்) பத உரை ஷை
4 விவேக சூடாமணி, (வேதாந்தம்) பத உரை ஷை
5 சித்தாந்த லேச சங்கிரகம், வசநம், 56 மத விசாரம் ஷை
6 தர்க்க சங்கிரகம்-தீபிகை, (தர்க்கம்) ஷை
7 சப்த பதார்த்தி, வசநம், (தர்க்கம்.) ஷை
8 காணாத சித்தாந்த சந்திரிகை, வசநம் (தர்க்கம்) ஷை
9 கணேச வசநம் பத உரை ஷை
10 ஷை தமிழ்க் கவி உரை.
11 சங்கர விஜய விலாசம் வசநம் ஷை
12 சிவ சங்கராவதாரம், சுலோகம் உரை.
13 ஸ்திரீ புருஷ ஜநந மரண ரஹஸ்யம், வசநம்
14 மகத்மா சரிதாமிருதம், வசநம்.
15 சந்யாச விதி.
16 சமாதி விதி.
17 பட்டிநத்தார் பாடல் உரை.
18 கைவல்ய நவநீதம், கிருத பாந உரையும்.
19 மேற்படி ஆராய்ச்சியும்.
20 கோவிலூர் மடத்தின் அத்புத மகிமா அகூபாரம்.
21 பல கேள்வி சமாதாந லட்டர்கள்.
22 ஈசுவர கீதை ரஹஸ்யார்த் விளக்க உரை.
23 உண்மைக் கடவுள் வசநம்.
24 கட்கம் கொண்ட காளியைச் செயித்தும் காமாரி சோம சுந்தர மாலைக்குக் கண்டநம்.
25 நாநா ஜீவ வாதக் கட்டளையின் சாரமும், சக்தி விவேசநமும்.
26 தாயும், தநயனும், வசநம் (வேதாந்தம்.)
27 லௌகிக நியாய சங்கிரகம் (சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு) வசநம்.
28 யுக்தி பிரகாசம் வசநம் (ஹிந்தி மொழி பெயர்ப்பு)

---